283
1/85

THE

# INDIAN STOCK OWNER'S MANUAL.

BY

JAMES MILLS,

M.R.C.V.S., A.V.D.,

LATE LECTURER ON MATERIA MEDICA, NEW VETERINARY COLLEGE, EDINBURGH; INSPECTOR OF CATTLE DISEASES, MADRAS PRESIDENCY; AND LECTURER ON ZOOLOGY AND VETERINARY MEDICINE AND SURGERY, AGRICULTURAL COLLEGE, SAIDAPET.

*Translated into Tamil*

BY

V. SUBRAMANIA MOODLIAR,

A PROBATIONER IN THE CATTLE DISEASE INSPECTION DEPARTMENT.

---

MADRAS:

PRINTED AT THE NATIONAL PRESS.

1885.

[*All Rights Reserved.*]

# இந்து
# தேசத்துக்
# கால்நடைக்காரர் புஸ்தகம்

என்ற

## இந்தியாவிலுள்ள கால்நடைகளின்
## வியாதிகளைப்பற்றிய தெளிவானகுறிப்புகள்.

---

இஃது

முன்பு எடின்பரோநகரத்து நவீன வெற்றெரினேரி வித்தியாசாலைப்
பதார்த்தகுண போதகாசிரியரும்;
இப்போது சென்னைப்பிரதானிக் கால்நடைவியாதி இன்ஸ்பெக்டரும்,
சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலையில்,
பிராணிவிவரணசாஸ்திரம், வெற்றெரினெரிவாகடம் ரணவைத்தியம்
இவைகளுக்குப் போதகாசிரியரும்

ஆகிய

**ஜேம்ஸ் மில்ஸ்,**

எம். ஆர். ஸி. வி. எஸ்., ஏ. வி. டீ.,

என்பவரா லியற்றப்பட்டுக்

கால்நடைவியாதி இன்ஸ்பெக்ஷன் டிபார்ட்மெண்டைச்சேர்ந்த

**வெ. ப. சுப்பிரமணியமுதலியாரால்**

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

---

சென்னை:

நாஷனல் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1885.

[All Rights Reserved.]

விலை ரூபாய்-உ.

TO

THE TAMIL-SPEAKING CATTLE-OWNERS

OF

SOUTHERN INDIA,

This translation is dedicated,

BY

THE AUTHOR.

இப்புத்தகம்,

தென்னிந்தியாவில்

தமிழ்ப்பேசும் கால்நடைக்காரருக்கு,

நூலாசிரியரால் அன்பின் அடையாளமாக,

சமர்ப்பிக்கப்படுகிறது.

## PREFACE.

A portion of this work originally appeared as "Plain Hints on the Diseases of Cattle in India," published in 1883. It was found, however, that it was not copious enough to meet all the requirements of the Indian stock-owner, and that a deal of matter would have to be added to make it a manual of general utility. Consequently, it was deemed necessary to re-write and re-arrange it, and to add several new chapters, also three extra plates.

The matter is arranged according to the Tamil alphabet with the view to simplicity and easy reference.

I am well aware that it may look strange, if not shocking, to the generality of natives that animals affected with incurable contagious diseases, such as Hydrophobia and Glanders, should be recommended by me to be destroyed. It must, however, be borne in mind that such animals, by being allowed to live, not only die eventually, but are liable to communicate their fatal malady to other animals and even to man. The making of *post mortem* examin-

ations will also, no doubt, be looked down upon with religious aversion. But this need not be so. I have shewn in the body of this work that the benefits we derive from the examination of animals after death are very important. Moreover, the cutting up of the body can be carried out by the lower classes, and the stock-owner, without any prejudice to his religion, can merely observe the appearances of the organs and other parts, and in this way form his opinion regarding the disease the animal has died from.

To Mr. V. P. Subramania Mudaliar, who undertook the translation, my best thanks are due. Nothing could equal the patience and skill he has displayed in the work, performed in addition to his other duties as a Probationer in the Cattle Disease Inspection Department.

J. M.

ST. THOMAS' MOUNT,
18*th February* 1885.

# நூல்முகம்.

இப்புத்தகத்திலொருபாகம் முன் 1883-ம் வருஷத்தில் "இந்தியாவிலுள்ள கால்நடைகளின் வியாதிகளைப்பற்றிய தெளிவானகுறிப்புகள்" என்னும் பெயருடன் பிரசுரஞ் செய்யப்பட்டது. ஆனால், அந்தப்பாகம் இத்தேசத்துக் கால்நடைக்காரருக்கு வேண்டியவைகளையெல்லாம் விளக்குவதற்குப் போதுமானதாக இருக்கவில்லையென்பதும், அது சாதாரண உபயோகத்துக்குத் தகுதியான புத்தகமாக வேண்டுமானால் அநேக விஷயங்கள் நூதனமாகச் சேர்க்கப்படவேண்டுமென்பதும் தெரியவந்தன. ஆகையால், அதைச் சீர்திருத்தித் திரும்ப எழுதி ஒழுங்குபடுத்தி சில நூதன அதிகாரங்களும், மூன்று புதுப்படங்களும் சேர்ப்பது ஆவசியகமென்று கருதி அவ்விதம் செய்திருக்கிறேன்.

(2-, 4-, 5-வது அதிகாரங்களிற் சொல்லப்பட்டிருக்கிற) விஷயங்கள் பார்வையிடுவதற்கு லகுவாகவும் சுலபமாகவும் இருக்கும்பொருட்டு அகராதிக்கிரமமாக வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

ஜலபயரோகம் (என்ற நாய்வெறி), குதிரைச்சயம் (Glanders) இவைபோன்ற தீராத தொற்று வியாதிகளினால் பீடிக்கப்பட்ட பிராணிகள் கொல்லப்படவேண்டுமென்று நான் சொல்லியிருப்பது சுதேசிகளிற் பெரும்பாலாருக்கு மனந்திடுக்கிடும்படி செய்யாவிட்டாலும், ஆச்சரியமாகத் தோற்றலாமென்பது எனக்கு நன்றாகத் தெரிந்தவிஷயம். ஆனால், அவ்வித பிராணிகளை உயிர்வாழும்படி செய்வதில் அவைகள் பிழைத்திராமல்

மரணமடைவதன்றியும், தங்களுடைய பிராணபாய மான வியாதி, மற்றப் பிராணிகளுடன், மனிதரையும் பற்றும்படி செய்யக்கூடியவைகளாகவுமிருக்கின்றன வென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். (பிணத்தைச் சேதித்துச் சோதித்தலாகிய) பிரேதசோதனை மதவிரோதமானதென்று கேவலமாக நினைக்கப்படலாம். ஆனால், அவ்விதம் நினைக்கவேண்டிய ஆவசியகம் இல்லை. பிராணிகள் மரணமடைந்தபின் அவைகளைச் சோதிப்பதினால் வரும் பிரயோசனங்கள் மிக முக்கியமானவைகளென்று நான் இப்புத்தகத்தில் விளக்கமாகச் சொல்லியிருக்கிறேன். மேலும், இறந்த பிராணிகளின் தேகத்தைக் கீழ்ச்சாதி மனிதரால் சேதிக்கச்செய்து, உயர்சாதிக் கால்நடைக்காரர் தங்களுடைய மதத்துக்கு யாதொரு விரோதமுமில்லாமல், தூர நின்று தொடாமலே தேகக்கருவிகளுடையவும், மற்றப்பாகங்களுடையவும் தோற்றத்தைக் கவனமாகப்பார்த்து, இறந்த பிராணியினது வியாதியின் தன்மை இன்னதென்று ஒருவாறு தெரிந்துகொள்ளுதல் கூடும்.

இந்நூலின் மொழிபெயர்ப்பை மேற்கொண்ட ஸ்ரீமது வெ. ப. சுப்பிரமணிய முதலியார் எனது அத்தியந்த வந்தனங்களுக்குரியவராக இருக்கின்றார். கால்நடை வியாதி இன்ஸ்பெக்ஷன் டிபார்ட்டுமெண்டைப் பற்றிய அவருடைய மற்றக்கடமைகளைச் செய்வதுடன் இந்நூலை மொழிபெயர்த்ததில் அவரிடத்தில் காணப்பட்ட விடாமுயற்சிக்கும் சாதுரியத்திற்கும் இணையொன்றுமில்லை.

1885-ஷ
பிப்பிரவரி-மீ ௮-உ.
பரங்கிமலை.

(ஒப்பம்) ஜே. மி.

# CONTENTS.

Chapter IX.



Chapter X.



Appendix No. I.



Appendix No. 2.

7

# அடக்கம்.

௮—வது அதிகாரம்.



௯—வது அதிகாரம்.



௰—வது அதிகாரம்.



௧—வது அநுபந்தம்.



௨—வது அநுபந்தம்.

## எருதின்படத்தின் விவரணம்.

1. முகத்தின் சிம்ப்பாகம் (Muzzle).
2. நாசித்துவாரம் (Nostril).
3. முகம் (Face).
4. நெற்றி (Forehead).
5. கொம்பு (Horn).
6. பின்தலை (Poll).
7. பிடரி (Crest).
8. திமில்; "சிமிழ்"; "முண்டு"; "முசு" (Hump).
9. முன்முதுகு (Back).
10. நடுமுதுகு; குறுக்கு (Loins).
11. பின்முதுகு; "பிட்டி" (Croup).
12. வால் (Tail).
13. சப்பை (Round-bone).
14. இரைப்பை (Stomach).
15. பிருக்கஸ்தானம்; "குண்டிக்காய்" இருக்குமிடம் (Seat of the kidneys).
16. * இரைப்பையிற் குத்துந்தானம் (Spot for puncturing the stomach).
17. அடிவயிற்றுப்பக்கம் (Flank).
18. கோச உறை (Sheath).
19. விதை (Testicles).
20. † விலாவிற்கொப்புளமருந்து போடுமிடம் (Spot on which to apply a blister to the chest).
21. நெஞ்சறைக்கும் வயிற்றுக்கும் மத்தியிலுள்ள பாகத்தைக் காட்டும் ரேகை (Line showing the partition between the chest and the belly).
22. தோள் (Shoulder).
23. தோள்முனை (Point of the shoulder).
24. முழங்கை (Elbow).
25. கழுத்து (Neck).
26. தாடி; அலைதாடி (Dewlap).
27. ‡ கழுத்து நாளத்தில் இரத்தம் வடிக்குமிடம் (Spot where to bleed from the jugular vein).
28. கன்னம் (Cheek).
29. காது (Ear).
30. மலத்துவாரம்; அபானவாய் (Anus).
31. முட்டு (Knee).
32. முழங்கால் (Shank).
33. காற்குழைச்சு; "கணுக்கால்" (Fetlock).
34. குளம்புச்சி (Coronet).
35. குளம்பு (Hoof).

முன்கால் (Fore leg).

36. தொடை (Thigh).
37. முட்டு (Hock).
38. முழங்கால் (Shank).
39. காற்குழைச்சு; "கணுக்கால்" (Fetlock).
40. குளம்புச்சி (Coronet).
41. குளம்பு (Hoof).

பின்கால் (Hind leg).



* இது என் செய்யவேண்டுமென்பது 50-வது பக்கத்தைப்பார்த்தால் விளங்கும்.

† சுவாசகாச அழற்சிபோன்ற சுவாசாசயத்தைப்பற்றிய வியாதிகளில்; கிறுப்புற்றுப்போன்ற கொப்புளமருந்து பிரயோகிக்கலாம். 42, 88-90 இந்தப் பக்கங்களைப்பார்க்க.

‡ நல்ல இரத்தபுஷ்டியுள்ள பிராணிகளுக்கு, பிரசவசன்னிபோன்ற சில வியாதிகளில், இரத்தங்குத்தி வாங்குதலுண்டு.

☞ பசுவின் படத்திற் காட்டியிருக்கும் குறிபோடும் முறை எருதுக்கும் உதவும்.




/Signed/ J. Mills V. S.
Inspector of Cattle Diseases

## பசுவின்படத்தின் விவரணம்.

1. பால்மடி ; முலை (Udder).
2. முலைக்காம்பு (Teat).
3. யோனி (Vagina).
4. முழங்காலில் * சூடுபோடும் வரையின் எண்ணமும், இடமும், மாதிரியும் (Number of strokes, place, and manner for firing the shank).
5. குளம்புச்சியில் „ „ „ „ ( „ coronet).
6. பின்கால்முட்டில் „ „ „ „ „ ( „ hock).
7. காற்குழைச்சில் „ „ „ „ „ ( „ fetlock).
8. தோளில் „ „ „ „ „ ( „ shoulder).
9. இடுப்பில் „ „ „ „ „ ( „ hip).

---

* சூடுபோடுதலின் நோக்கம், வகை, பிரயோசனமுதலியவைகள் 91-92 இந்தப் பக்கங்களைப் பார்ப்பதினால் விளங்கும்.

☞ இப்படத்திற் காட்டியிருக்கும் சூடுபோடும்முறை எருதுக்கும் உதவும்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 29 | 19 | கர்ப்பூரம் | கருப்பூரம் |
| 79 | 21 | வன்கழலை | மென்கழலை |
| ,, | ,, | மென்கழலை | வன்கழலை |
| 107 | ... | ஒருவராகனெடை அரையேஅரைக்கால் ரூபாயெடைக்குச் சமமென்றிருப்பது பிழை. | பத்துவராகனெடை மூன்று ரூபாயெடைக்குச்சமம், வராகனெடை குறிக்கப்பட்டிருக்கு மிடமெங்கும் (உத்தேசமாக) ஒருவராகனெடை காலேவீசம்ரூபாயெடைக்குச்சமம் ஆகக் கணக்கிட்டுக்கொள்க. |
| 116 | 1 | வாய்பு | வாயு |
| 132 | 15 | குளம்புச்சிலந்தி | குளம்பழுகல் |
| ,, | 16 | குளம்பழுகல் | குளம்புச்சிலந்தி |
| 144 | 9 | ராயோக | ப்ரயோக |
| 156 | 23 | குளம்பழுகல் | குளம்புச்சிலந்தி |
| 164 | 2 | சன்னிச்சுர | அதிசாரச்சன்னிச்சுர |

# இந்தியாவிலுள்ள கால்நடைகளின் வியாதிகளைப்பற்றிய தெளிவான குறிப்புகள்.

---

## முகவுரை:

---

இந்தியாதேசத்துக் கால்நடைகள் சுகமாகவிருக்கும்போதும், வியாதியடைந்திருக்குங்காலத்திலும் எவ்விதம் ஜீவிக்கின்றன என்னும் அறிவையாதாரமாகக்கொண்டு சுலபமான நடையில் வெளிப்படையாக எழுதப்பட்டு அநுபவத்துக்குதவும் புஸ்தகம் ஒன்று மிகவும் வேண்டியிருக்கிறது. இந்தியாவில் கால்நடை வியாதி விஷயத்தைப்பற்றி எழுதப்பட்டிருக்கிற புஸ்தகங்களில் இது முதலிலெழுதப்பட்ட புஸ்தகம் அல்ல. ஆனால், கால்நடை வியாதிகளைப்பற்றி நம்முடைய அறிவில் அனேக மாறுபாடுகள் உண்டாகியிருப்பதினாலும், ஜனங்களின் நன்மைக்கருதிக் கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தில் இப்போது மேலும் மேலும் அதிகமாகக் கவனஞ்செலுத்திவருவதினாலும், கால்நடைகள் வைத்திருப்பவர்களும், ஜில்லா உத்தியோகஸ்தர்களும் தெரிந்துகொள்வதற்கு உபயோகமான புதுப்புஸ்தகம் ஒன்றுதேவையென்பது நான் இந்தப்பிரதானியில் கால்நடை வியாதி இன்ஸ்பெக்டராக வேலைபார்த்துவருங்காலத்தில் அடிக்கடி என்ஞாபகத்துக்கு ஸ்திரமாகக்கொண்டுவரப்பட்டிருக்கிறது.

பல தகுதியான விவசாயக்காரர்களில் முக்கியமாய்ப் பாவியர்களுக்கு, கால்நடைகள் சாதாரணமாகக்ஷேமமாகவிருப்பதற்கும், அவைகளுக்கு வியாதிவராமல் தடுப்

பதற்கும், வந்தவியாதியை நீக்குவதற்கும், அவர்கள் இதுவரை நம்பியிருந்த தெய்வ பிரார்த்தனைமாத்திரங் காணாதென்பதும், வேறு சில ஏற்பாடுகள் வேண்டியிருக்கின்றனவென்பதும் இப்போது தெரியவந்திருக்கின்றன. இதையும் நாம் கவனிக்கவேண்டும். இவ்விதமாக அறிவு வேண்டுமென்னும் விருப்பம் உண்டாகியிருப்பது, சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலையில் வருஷந்தோறும் விருத்தியாகிவரும் பெரிய வகுப்புகளினாலும், ஆடு மாடு முதலிய பிராணிகளின் சுகத்தைப்பற்றிய விஷயங்களில் மாணாக்கர்கள் காட்டிவரும் விசேஷ பிரியத்தினாலும், நமக்குத் தெரியவருகின்றது. ஆனால், மிகவும் சில விவசாயக்காரர்கள்தான் இந்தவகுப்புகளில் வந்து பாடங்கேட்கக்கூடும். ஆகையால், நான் போதகர் தானத்திலிருந்து செய்யக்கூடிய நன்மையானது இந்தப் பிரதானியில் ஒவ்வொரு சிறு கிராமத்திலும் பரவலாமென்னும் நம்பிக்கையுடன் இப்புஸ்தகத்தை எழுதியிருக்கிறேன்.

கால்நடைகளின் வியாதி சென்ற சில வருஷங்களாகப்பரவியிருக்கிறதுபோல முன் ஒருகாலத்திலும் இருந்திருக்கவில்லை; வருஷந்தோறும் நேரிடுகிற விலையுயர்ந்த கால்நடைகளின் பெருஞ்சேதமானது இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டார் இப்போது சில காலமாகச் செலுத்திவந்திருக்கிற கவனத்தினால் நமக்குத் தெளிவாகத் தெரியவருகிறது. இந்தக்காரணத்தினாலும் இப்புஸ்தகம் மிகவும் ஆவசியகமாகவிருக்கிறதென்று அறிகிறேன்.

கவர்ன்மெண்டு கால்நடை இன்ஸ்பெக்டர்கள் தங்கள் கடமைகளைப் பூரணமாகநிறைவேற்றுவதற்கு இன்றியமையாதஉதவியைக் கால்நடைகள் வைத்திருப்பவர்களிடத்திலிருந்து பெறும்படி அவர்களுக்கு உதவியாக ஏதாகிலும் செய்யவேண்டியது ஆவசியகம். கால்நடைகளை மேற்பார்க்கிறவர்கள் தங்களிடத்திலிருக்கிற பிராணி

கள் சுகமாகவிருக்கும் காலத்திற் சுகமாக்விருக்கின்றனவென்றும், வியாதியடைந்திருக்கும் காலத்தில் வியாதியாகவிருக்கின்றனவென்றும், ஒரு தொற்றுநோய் ஆரம்பித்தவுடனே அது பரவாமல் தடுப்பதற்கு என்ன சுளுவான ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்றும் தெரியுங் காலத்தில்தான், வியாதிகளை நம்முடைய சுவாதீனத்திற் பூரணமாகக்கொண்டுவர முடியும்; அதுவரையுமுடியாது.

இந்த அறிவு நன்றாகப்பரவுமென்னும் நம்பிக்கையுடன், பிராணிகளை வருத்துகின்றவைகளாகவும், சிலவேளைகளில் பெருஞ்சேதம் உண்டுபண்ணுபவைகளாகவும், மிக்வும் அடுத்தடுத்து உண்டாகின்றவைகளாகவும் இருக்கிற வியாதிகளைப்பற்றிக் கிராம உத்தியோகஸ்தர்கள், ஜில்லா உத்தியோகஸ்தர்கள், கால்நடைக்காரர்கள், இவர்கள் ஒவ்வொருவரும் என்ன தெரியவேண்டுமோ அந்த விவரத்தைத் தெளிவாக இப்புஸ்தகத்தில் எழுதுகிறேன்.

நம்முடைய சுவாதீனத்துக்குட்படாத காரணங்களால் சேதம் நேரிடுகிறதென்று நினைத்து ஒன்றுஞ்செய்யாமலிருப்பதைப்பார்க்கிலும், மிருகங்களைப் போஷிப்பதற்கும், ஒதுக்கிடத்தில் வைப்பதற்கும், அவைகளைப்பற்றிச் சாதாரணமான கவலை எடுத்துக்கொள்வதற்கும் நான் ஏற்படுத்தும் சில சுளுவான விதிகளை அநுசரிப்பது மிகவும் நன்மையாகவிருக்கும். ஏனெனில், சரியான மேற்பார்வையில்லாததினால் வியாதியுண்டாகிறதென்பதும், நன்றாகக் கவலையெடுக்கப்பெற்ற பிராணிகள் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கின்றனவென்பதும் மிகவும் தெளிவாக ரூபிக்கப்பட்டிருக்கின்றன.

நாம் கவனஞ்செலுத்தவேண்டிய விஷயங்கள் இரண்டு உண்டு. அவைகள் என்னவென்றால், முதலாவது, மிருகங்கள் சரியான ஆகாரமும், நல்ல தண்ணீரும், செம்மையான ஒதுக்கிடமும், சுத்தமான வாயுவும்

பெறவேண்டியது. இரண்டாவது, ஒரு மிருகம் மற்ற மிருகங்களிடத்திலிருந்து வியாதியைப் பெற்றுக்கொள்ளாதபடி தடைசெய்யவேண்டியது. பின் வரும் விதிகளை அநுசரிப்பதினால் இவ்விரண்டு கருத்தையும் நன்றாகநிறைவேற்றலாம்.

1—வது.—ஆகாரம் கூடியவரை போதுமான அளவாகவும், நல்லதாகவும், கிடைப்பது அதிக வருத்தமில்லாமலிருப்பதாகவும் இருக்கவேண்டும். இந்தியாவிலுள்ள அனேக கால்நடைகள் பகற்காலத்தில் கிராமத்தையடுத்த மேய்ச்சற்றலங்களில் தங்கள் ஆகாரத்தைத்தேடிப் பொறுக்கித்தின்னுகின்றன; இராத்திரி வீட்டில் வந்தபின் அவைகளில் சில பிராணிகளுக்கு வைக்கோலும், மற்ற ஆகாரமுங்கொடுக்கிறார்கள். பிராணிகள் தங்கள் இயற்கையறிவினால் எது ஆகாரத்துக்குநல்லதென்று சாதாரணமாகத் தெரிந்துகொள்ளும்; ஆனால், தண்ணீர்க்குறைச்சலினால் புல் பூண்டுகளெல்லாம் உலர்ந்துபோய்விடுகிறபடியால், கால்நடைகள் கண்டதைச் சாப்பிட்டுப் பசியாற்றும்படி நேரிடுகிறது. புல்லுகளெல்லாம் உலர்ந்துபோனபோது அவைகள் மற்றக்காலத்தில் வெறுத்துத் தள்ளும் மரப்பட்டை, முட்செடி, விஷப்பூண்டு முதலானவைகளைத்தின்னும். இது அசீரணத்துக்கும், நஞ்சினால் வருந்துதல்போன்ற வியாதிகளுக்கும் அதிகச் சாதாரணமான காரணமாகவிருக்கிறது. மழை ஆரம்பிக்கவே, ஆற்றங்கரை, குளக்கரைகளிலெல்லாம் முரடான கொழுத்த பூண்டுகள் ஏராளமாக வளருகின்றன; இவைகள், தின்னப்பட்டபோது வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், கழிச்சல் இவைகளை உண்டாக்குகிறபடியால், கால்நடைகளுக்கு மிகவும் அபாயமானவைகள்; இந்தப்பரும்படியான பூண்டுகளிற் சில மிகுந்த நஞ்சுள்ளவைகள். இவ்விதமாக, அளவுக்கு அதிகமாக மிஞ்சிய, அல்லது குறைந்த ஆகாரத்

தினல் வியாதியுண்டாகிறதென்று தெரிகிறோம்; ஆகையால் நாம் ஆகாரத்தைக் கோடைகாலத்தில் போதுமானதாகவும், மழைகாலத்தில் அளவுக்கு மிஞ்சாததாகவும் கொடுத்துவரவேண்டும். கோடைகாலத்திலும், பஞ்சகாலத்திலும் நேரிடுங்குறைவை நிரப்பும்படி தீனி செழிப்பாகக் கிடைக்குங்காலத்தில் சேகரித்துவைப்பதே ஆகாரத்தையொழுங்குபடுத்துவதற்கு மிகச்சிலாக்கியமான மார்க்கம். இது இந்தியாவில் கால்நடை வியாதியைத் தடைசெய்வதற்கு மிகவும் முக்கியமான உபாயங்களிலொன்றாகவிருக்கிறது.

ஆகாரத்தின் குணத்தைக் கவனிக்குமிடத்தில், இந்தியாவின் எல்லாப்பாகங்களிலும் மிகச் சாதாரணமாகவுள்ள இரத்தக்கழிச்சல், அல்லது சீதபேதி (Dysentery) என்ற வியாதியானது கால்நடைகளால் மேய்ச்சற்றலத்தில் தின்னப்பட்டாவது, அல்லது அவைகளுக்கு வீட்டில் தீவனமாகக் கொடுக்கப்பட்டாவது இருக்கிற கெட்ட முரட்டுத் தீனியினால் எப்போதும் உண்டாகிறதென்பதை நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும். * பூசணம்பிடித்த ஆகாரமும் இவ்வியாதிக்கு ஒரு காரணமாகவிருக்கிறது.

கோடைகாலத்தில் மேய்ச்சற்றலங்களில் ஆகாரம் கிடைப்பது மிகவும் பிரயாசமானது என்பதை நாம் மனதில் வைக்கவேண்டும். வரிதாளையும், முரட்டுப்புல்லையும், மற்ற அநேக மிருகங்களின் பிராணனைக் காப்பாற்றத் தகுதியில்லாத வேறு ஆகாரங்களையும் தின்று மாடு உயிர் வாழக்கூடும். ஆனாலும், இந்த ஆகாரங்களும் அநேக நாழிகை வழி அலைந்தபின்புதான் அகப்படுகின்றன. இதனால் மாடுகள் அவைகள் பெறும் சொற்ப ஆகாரத்தினால் உண்டாகும் பலத்துக்கு அதிகமான பலத்தை அவ்வாகாரம் தேடியலைவதில் இழந்துவிடுகின்றன என்று தெரி

* பூசணமென்பது பூஞ்சாளமென்றுஞ்சொல்லப்படும்.

கிறேம். இவ்விதமாக ஆகாரந்தேடி அலேவது மாடு களைச் செழிக்கவொட்டாமல் தடுப்பதுமன்றி, அவை களைப் பலவீனப்படுத்துவதினல் தொற்று வியாதிகளுட ன் அவைகள் எவ்விதமாகவாவது சம்பந்தப்பட்டபோது அவ்வியாதிகளினல் தாக்கப்படுகின்றன; தொற்றுவியாதி யுண்டானல், அது நன்றகப்போஷிக்கப்பெற்றுக் கவலேயெடுக் கப்பட்ட பிராணிகள் மத்தியில் செய்யும் கெடுதியைப்பார்க்கிலும், கேவலமாக வைக்கப்பட்டிருக்கிற பலவீனமான பிராணிகள் மத் தியில் மிகவும் பெருங்கெடுதியைச் செய்கின்றது; இதை ஞாப கத்தில் வைக்கவேண்டும்.

2—வது.—ஒதுக்கிடம். கோடைகாலத்தில் மேய்ச்சற் றலங்களில் கால்நடைகள் தங்கள் ஆகாரதை தேடு வதில் படும் கஷ்டத்தினலும், செல்லும் நேரத்தினலும் அசைபோடுவதற்குச் சாவகாசம் இல்லாமல் தடைசெய் யப்படுகின்றன. அன்றியும், அவைகள் நெடுநேரம் வெயி லில் நிற்கின்றன. இதனல் அவைகளுக்கு வியாதிவரு கிறது; அல்லது வியாதி வருவதற்கு டிார்க்கமுண்டாகிற து. கூடியபோது அவைகள் மரத்து நிழலிலாவது, வேறு ஒதுக்கிடத்திலாவது படுத்துப் பகலில் மிகுந்த உஷ்ண மான நேரமெல்லாம் அசைபோடும்; அல்லது தூங்கும். ஆனல், பசியோ இளைப்பாறவேண்டிய ஆவசியகத்தைப் பார்க்கிலும், அதிக பலமானதாகவிருக்கிறது. பிராணி களை மிகுந்த உஷ்ணத்துக்குள்ளாகாமல் காப்பாற்றுவ தோடு குளிருக்குள்ளாகாமலுங் காப்பாற்றவேண்டும். ஆயினும், குளிர் தானே அனேகவியாதிகளை உண்டுபண்ணுகிற தில்லே யென்றும், திடீரென்று சூட்டிலிருந்து குளிருக்கும், குளிரி லிருந்து சூட்டுக்கும் உண்டாகும் மாறுதல்கள்தான் வியாதியை யுண்டுபண்ணுகின்றனவென்றும் யாவரும் தெளிவாகத் தெ ரியவேண்டுமென்பது என்னுடைய விருப்பம். இது உண் மையென்று, பகலில் சீரான உஷ்ணமும், இரவில் குளி ரும் உள்ள மாதங்களிலும், கொஞ்சக்காலம் கோடையாக

விருந்தபின், அதிகக் குளிரும், ஈரமும் உண்டாகுங்காலத்திலும் வியாதி அடுத்தடுத்து வருவதினால் தெரிகிறோம். ஆகையினால், நாம் பிராணிகளைக் குளிர்ந்தகாற்றுக்கெதிர்ப்படாமலும், கனத்தமழையிலகப்படாமலும் ஒதுக்கிடத்தில் வைப்பது ஆவசியகமாகிறது; இதனால் மிகுந்த அநுகூலமுண்டாவதுடன் மற்றப்படி உண்டாகும் பெரும் நஷ்டமும் விலகுகிறது. கால்நடைகள் வசிப்பதற்குச் சாய்ப்புகளாவது, அல்லது வேறுவிதமான ஒதுக்கிடங்களாவது செய்துவைத்திருந்தால், அவைகள் மிகவும் நன்றாகச்செழித்து விருத்தியடைவதுமல்லாமல், அபூர்வமாகத்தான் வியாதியினால் சாகும். ஒதுக்கிடம் உண்டுபண்ணுவதற்கு முதலில் கொஞ்சஞ்செலவு பிடிக்கும்; ஆயினும், கால்நடைகளின் விருத்தியான நிலைமையானது அந்தச்செலவுக்கு நல்ல ஈடாகும். மேலும், பாலுக்காவது, மாமிசத்துக்காவது, அல்லது வேலைக்காவது வளர்க்கப்படும் மிருகங்கள் சரியானபடி ஒதுக்கிடத்தில் வைக்கப்படாதபோது வேண்டும் ஆகாரத்தைப்பார்க்கிலும், குறைவான ஆகாரத்தைச் சரியான ஒதுக்கிடத்தில் வைக்கப்பட்டபோது வேண்டுகின்றன; இந்த உண்மை மிகவும் தெளிவாக ரூபிக்கப்பட்டிருக்கிறது.

3—வது.—தண்ணீர். மாட்டுக்குத் தண்ணீர் போதுமானமட்டுங்கொடுத்தாலொழிய அது சீக்கிரம் கொழுக்கமாட்டாது என்னும் உண்மையானது இங்கிலாந்தில் மிகப்பெரிய கொழுத்தமாடுகள் வளர்ப்போர்களுக்கெல்லாம் நன்றாகத் தெரிந்தவிஷயம். இந்தியாவின் சீதோஷ்ணத்தினால் அனேக காலங்களில் தண்ணீரும் அருமையாகிவிடுகிறது. காலத்தின் மிகுந்த வறட்சியினாலாவது, அல்லது மாடுகளைப் பராமரிப்போர் போதுமான கவலையெடாததினாலாவது, கால்நடைகளுக்கு இந்த அத்தியாவசியகமான ஆகாரமாகிய தண்ணீர் கிடைக்கிறதில்லை. அள

வுக்குக் குறைந்த தண்ணீர் குடிக்கக்கொடுப்பது அசீரண த்துக்கு மிகவும் அதிகச் சாதாரணமான காரணமாக விருக்கிறது. குளக்கரை, கால்வாய்க் கரைகளில் உண்டாகிற புல், அல்லது மழைகாலத்தில் திரளாக உண்டாகிற புல் இவைகளைப்போல அளவுக்கதிகமாகத் தண்ணீர் இருக்கிற புல்லைத் தின்பது வயிற்றுப்பொருமலுக்கு மிகச் சாதாரணமான காரணம். (பலவகையுப்புக் கலந்திருக்கிற) உவர் நீரினுல் வயிற்றுவலி உண்டாகிறது. சுண்ணும்பு கலந்த நீரை (அதாவது, சுக்கான்பாறைச்சலத்தைச்) ச[illegible]டுவதினுல் சுண்ணும்பு பிரிந்து குடலில் கல்லடைப்புண்டாகிறது.

மழை ஆரம்பித்தவுடனே அது சகல [illegible]மான அழுக்கையும் மிகுதியாக வாரிக்கொண்டுபோய்க் குளத்திற் சேர்க்கிறது. இதனுல் சரியான சாக்கடைகள், அல்லது நீர் வடிந்துபோகத்தக்க கழிகால்கள் இல்லாத அசுத்தமான கிராமங்களுக்குப் பக்கத்திலுள்ள சலம் பிராணிகள் சாப்பிடுவதற்கு மிகவும் தகுதியற்றது. இவ்விதமாகக் கிணறுகள் கெடுவது அரிது; ஏனெனில், தண்ணீர் மண்ணில்ஊறி நுழைந்து கிணற்றுள் செல்லவேண்டும்; அப்படிச்செல்லும்போது அதில் உள்ள அசுத்த வஸ்துக்களையெல்லாம் மண் கிரகித்து உரமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறது. குளம் நிறைந்திருக்கும்போது தண்ணீர் மிகுதியாக இருப்பதினுல் அழுக்கை எங்கும் பரவும்படி கரைத்துவிடுகிறது. தவிரவும், அழுக்கில் மிகுந்த பாகம் அடியில் தாழ்ந்துவிடுகிறது. ஆனுல், குளிர்காலத்து முடிவிலும், கோடைகாலம் முழுமையிலும் சலம் மிகவும் கீழேயிறங்கி அனேகவிடங்களில் பூரணமாக, அல்லது அரைகுறையாக வறண்டு சேருகிவிடுகிறது. இவ்விதமான சலத்தைத் தாகமிகுந்த கால்நடைகள் சாப்பிடும்போது கொடிய வியாதிகள் உண்டாவது ஆச்சரியமல்ல.

4—வது.—காற்றோட்டம். வியாதிக்கு வேறு பல சாதாரணமான காரணங்களிருப்பதைப்பற்றி இப்புத்தகத்தில் பின்னுகைச்சொல்லுவேன்; பிராணிகள் சுவாசிக்கிற வாயு சுத்தமாக இருக்கவேண்டிய ஆவசியகத்தைப்பற்றி இப்போது கொஞ்சஞ்சொல்லவேண்டும். ஒதுக்கிடம் நல்லது; ஆனுல், சுத்தமான வாயு உள்ளே பிரவேசிக்கக்கூடாமலும், உள்ளேயிருக்கிற துர்க்கந்தமான வாயு வெளியேபோக மார்க்கமில்லாமலுமிருக்கிறவிடங்களில் பிராணிகளை அடைத்துவைப்பதினுல் துரிதமாகவாவது, தாமதமாகவாவது வியாதி யுண்டாகுவது நிச்சயம். ஆகையால், கால்நடைகளின் ஒதுக்கிடம் ஒவ்வொன்றின் தளத்திலும், மேல் மூலையிலும் அநேக துவாரங்கள் இருக்கவேண்டும். தளத்திலிருக்கும் துவாரங்கள் வழியாய்ச் சுத்தமான ஆகாயம் உள்ளேவரும்; மேல்கட்டிலிருக்குந் துவாரங்கள் வழியாய்ப் பிராணிகள் சுவாசம் விடுவதில் வெளியாகும் வாயுபோன்ற அசுத்தமும் உஷ்ணமுமான ஆகாயம் வெளியேபோய்விடும்.

கால்நடைகளின் தொழுவிலுள்ள சுகவீனத்துக்கு மிகச் சாதாரணமான காரணம் தளத்தில் சகலவிதமான அழுக்குந்திரண்டிருப்பதுதான். தளம் சிலவேளைகளில் அநேக மாதங்களாகச் சுத்தஞ்செய்யப்படுகிறதில்லை. இதனுல் நீங்கள் உங்கள் கால்நடைகளுக்கு வியாதியுண்டாகும்படி மனசார இடங்கொடுக்கிறீர்கள்; நீங்கள் உங்கள் தொழுக்களில் இவ்வழக்கத்தை இனி கொஞ்சகாலம் வைத்துக்கொண்டிருந்தாலும், வியாதிவந்து உங்கள் மாடுகளையும் ஆடுகளையும் கிடைகிடையாக வாரிக்கொண்டு போகும்போது ஆச்சரியப்படக்காரணமில்லை.

நான் மேலே சொல்லியிருக்கிற காரணங்கள் போன்ற சாதாரணமான காரணங்களால் உண்டாக்கப்படுவதும் அல்லாமல், ஒரு பிராணியினிடத்திலிருந்து மற்

ஞெரு பிராணியைப்பற்றும் வியாதிகளாகவும், அதினுல் பற்று வியாதி (Communicable disease) களென்று சொல்லப்படுபவைகளாகவுமிருக்கிற வியாதிகளைப்பற்றி நாம் இப்போது கவனிப்போம்.

இவ்வியாதிகள் மூன்றுவகையாகப் பரவுகின்றன. 1—வது.—தொற்றினுல் பரவுவது: அதாவது, வியாதியாகவிருக்கிற பிராணியாவது, அல்லது அதைப்போஷிப்பதில் உபயோகிக்கப்பட்ட எந்த வஸ்துவாவது சுகமாகவிருக்கிற பிராணியின் மேற்படுதல்போன்ற தொடுதலினுல் வியாதி பரவுவதே. நரிகள்போன்ற காட்டுமிருகங்களும், பிணந்தின்னுங் கழுகுகளும், பருந்துகளும், பெருச்சாளிகளும் அல்லாமல், ஈக்களுங்கூட வியாதியிருக்கிற வஸ்துக்களைக்கொண்டுபோகலாம். கால்நடைகளின் தோலைப் பெறுவதில் அக்கறையுடைய மனிதருங்கூடச் சிலவேளைகளில் வியாதியடைந்த பிராணிகளின் மலசலக் கழிவுகளைக்கொண்டுபோய்ச் சுகமான பிராணிகள் மேயக்கூடிய மேய்ச்சற்றலங்களிற் சிதறிவிடும்படியான அவ்வளவு துன்மார்க்கத்தையுடையவர்களாக விருக்கிறுர்களென்று கால்நடை யின்ஸ்பெக்டர்கள் ரூபித்திருக்கிறுர்கள். குற்றவாளி இன்னுனென்று ரூபிக்கப்பட்டபோதெல்லாம் அவனைத் தண்டித்து இவ்விதத் துரோகத்தைச்சட்டத்தினுல் பலமாக அடக்கவேண்டும். பிணியுள்ளபிராணிகளைப் பார்த்துவரும் வேலையாட்களினுலும், அந்தப் பிராணிகளோடு வேலைசெய்துகொண்டாவது, அல்லது கூடத் தினிதின்றுகொண்டாவது இருந்த சுகமான பிராணிகளாலும், வியாதியுள்ளவைகளைச் சுகப்படுத்தப் பிரயாசப்பட்டுக்கொண்டிருப்பவர்களாலும், பிணியுள்ள மிருகங்கள் இழுத்துக்கொண்டிருந்த வண்டிகளினுலும், அவைகளின் மலத்தினுலும், படுக்கையினுலும், அல்லது அவைகளின் பிரேதங்களினுலும் தொற்றுவியாதி

கள் பரவுகின்றன என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைக்கவேண்டும். தோல்களும் மிகுந்த அபாயத்துக்குக் காரணமாகவிருக்கின்றன. அவைகள் கால்நடை வியாதி யுண்டாவதற்கு மிகுந்த சாதாரணமான காரணங்களுள் ஒன்ருகவிருப்பதை நாம் சந்தேகிக்க முடியாது. இத் தேசத்தில் சாதாரணமாக நடக்கும் மாட்டு வியாபாரத் தில் தொற்றுவியாதி எப்படிப் பரவுகிறதென்று நமக்குச் சந்தேகமுண்டாகலாம். மழைக்காலத்தில் மேயும்படி வெ ளியே அனுப்பப்பட்ட மாடுகள் மற்ற மாடுகளோடு கலக் கின்றன ; இப்படிக் கலப்பதினுல், வியாதியிருந்தால் அது ஒரு பிராணியிலிருந்து மற்ருெரு பிராணியைப் பற்றிக் கொள்ளுகிறது. சில மாடுகள் தவறி நெடுந்தூரம்போய், மற்ற அனேககிராமத்து மாடுகளுடன் கலந்து, சிலவேளை களில் கடைசியாகக் கிராமத்துப் பட்டியில் வந்து அடை பட்டு, அனேகமாகக் கேவலமான ஸ்திதியில் பாதிப்பட் டினியாக வைக்கப்பட்டு, உடையவன் வந்து கேட்கும் வரை, தங்கியிருக்கிறது. இவ்விதமாகத் தப்பிப்போன மாட்டுக்கு வெக்கை (Cattle Plague) வியாதியாவது, வேறே ஒரு பிராணியிலிருந்து மற்ருெரு பிராணியைப் பற்றுந் தன்மையுள்ள எந்த வியாதியாவது வந்தால், அது மிகுந்த தீங்கைச் செய்துவிடக்கூடும். பட்டிகள் எப்போதும் சுத்தமாக வைக்கப்பட்டிருக்கின்றனவா என் றும், அவைகளில் தொற்றுவியாதி யற்றுப்போகும்படி தாரெண்ணெய் (Tar), கார்பாலிக்கமிலம் (Carbolicacid) முதலானவைகளால் சுத்திகரிக்கப்பட்டிருக்கின்றனவா என்றும் பார்த்துவருவது ஒவ்வொரு கிராம உத்தியோ கஸ்தர்களுக்கும், போலீஸ்காரருக்கும் கடமையாகவிருக் கிறது. இப்போது சொல்லியது என்னதென்றும், அதை நிறைவேற்றுவது எப்படியென்றும் பின்பு விவரமாகச் சொல்லப்படும். (2 - வது அதிகாரத்தைப்பார்க்க).

இந்தக்கடமையை நன்ருகப் பார்த்துவந்தாலொழிய, பட்டிகள் பெருந்தீங்குக்குக் காரணமாகமுடியும். பிராணிகள் ஒரு மேய்ச்சற்றரையிலிருந்து மற்ெருரு மேய்ச்சற்றரைக்காவது, ஒரு கிராமத்துப்புல் மைதானத்திலிருந்து மற்ெருரு கிராமத்து மைதானத்துக்காவது போகாமல் சகல கவலையுமெடுக்கவேண்டும்; அந்நிய மிருகங்கள் காணப்பட்டால் அவைகளையுடனே பட்டியிலடைக்கவேண்டும்.

கால்நடைகள் தண்ணீர் குடிக்குங் குளங்களும், குட்டங்களும் வியாதிகள் பரவுவதற்கு ஆதாரமாகின்றன. பிராணிகள் அக்குளங்குட்டங்களில் வந்து சேரும்படி கட்டாயப்படுவதினல் ஒன்றை ஒன்று சந்திக்கும்படி நேரிடுகிறது. உடையவன் அறியாமையினலாவது, அல்லது இன்ஸ்பெக்டருடைய பார்வைக்குத் தட்டுப்படாமல் வியாதியை மறைக்கவேண்டுமென்ற விருப்பத்தினலாவது அடிக்கடி தன் மிருகங்களைத் தண்ணீரில் நாள் முழுமையும் நிறுத்திவைத்து தன் மந்தையிலுள்ள ஒரு மிருகமாவது சுகமாக இருக்கவொட்டாமல் செய்துவிடுகிருன். கால்நடைகள் இராத்திரிகாலத்தில் ஒன்ருகச்சேர்ந்து கிராமத்துத் தொழுக்களிலாவது, அல்லது உடையவன் வீட்டிற் பாதியிலேயேயாவது அடைபட்டு சுவாசிப்பதற்குப் போதுமான வாயு அரிதாகவும், அசைவதற்குப் போதுமான இடமில்லாமலும் வருத்தப்படும்போது, சுகமாகவிருக்கிற பிராணிகள் வியர்திப்பட்ட பிராணிகளைத் தொடாமல் இருக்க முடியாது. இராக்காலத்தில் மனிதரும், கால்நடைகளும் ஒன்ருக வசித்துக்கொண்டிருப்பதை நாம் இந்தியாவெங்கும் பார்க்கலாம்; இந்த வழக்கங்கெட்டது என்பதைப்பற்றி நான் எவ்வளவு பலமாகச் சொன்னலும் அவ்வளவும் போதாது. இந்த வழக்கம் மனிதர்களுடைய சுகம், பிராணிகளுடைய சுகம் இரண்

டுக்கும் கெட்டது. இவ்விதமாகப் பிராணிகளிடத்திலிருந்து மனிதருக்கும், முக்கியமாய் ஸ்திரீகளுக்கும், பிள்ளைகளுக்கும் சென்று தொற்றக்கூடிய சில மிகக்கொடிய வியாதிகளிருக்கின்றன.

இத்தேசத்தில் தாவணிகளுக்கும், சந்தைகளுக்குமாவது, தனித்து விற்கப்படவேண்டிய இடத்துக்காவது பிராணிகள் நெடுந்தூரம் கஷ்டமான பாதையில் பிரயாணஞ்செய்கின்றன. அவைகள் வியாதியடைந்தால் தாங்கள் வந்த பாதைமுழுவதிலுமுள்ள பிராணிகளெல்லாவற்றிற்குந் தங்கள் வியாதியைக் கொடுக்கவும், ஒரு ஆட்டுமந்தை, அல்லது மாட்டுமந்தை, தாவணி அல்லது சந்தை இவைகளிலுள்ள மிருகங்களையெல்லாம் வியாதிப்படுத்தவும் கூடும்; மந்தையிலிருந்து உடையவர்கள் மாடுகளை வீட்டுக்குக்கொண்டுபோகும்போது வியாதி ஜில்லா முழுமையும் பரவக்கூடும்.

கால்நடைகளடைக்கப்படும் ரயில் வண்டிகள்சுத்தமாகவும், கார்பாலிக்கமில முதலியவைகளாற் சுத்திகரிக்கப்பட்டதாகவும் இருந்தாலொழிய, அவைகளும் வியாதியைப் பரவச்செய்யலாம்; ஏனென்றால், பிரயாணத்தினாலும், ஆகாரமும் தண்ணீரும் இல்லாமையினாலும் இளைத்துப்போயிருக்கிற மிருகங்கள் தாங்களிருக்கும் வண்டியில் முன் பிரயாணஞ்செய்துகொண்டிருந்த மிருகங்கள் எந்த வியாதியினால் பிடிக்கப்பட்டிருந்தனவோ அந்த வியாதியினால் தாங்களும் வெகு லேசாகப் பிடிக்கப்படக்கூடியவைகளாக இருக்கின்றன.

கால்நடை வைத்திருப்பவர்கள் கவலைக்குறைவாகவும், அறியாமையாகவும், சோம்பலாகவுமிருப்பது அவர்களுடைய பிராணிகளுள் தொற்றுவியாதிகள் பரவுவதற்குமகாமுக்கியமான காரணங்களுள் ஒன்றாகவிருக்கிறது.

இந்த வியாதிகள் பரவாமல் நிறுத்திவிடுவதற்குமிகச் சிலாக்கியமான வழிகளை நாங்கள் திட்டமாகச் சொல்லக்கூடும். உடையவர்கள் தங்கள் கால்நடைகளை அபாயத்தினின்றும் தப்புவிப்பதற்கு உதவிசெய்யும்படி நாங்கள் அவர்களிடம் கவர்ன்மெண்டாரால் அனுப்பப்படுகிறோம். ஆகையால், இனி அறியாமைகாரணமென்று தப்பு முகாந்தரஞ்சொல்ல இடமில்லை. ஒரு மனிதன் வியாதியைத்தடுப்பதற்குள்ள சில சுலபமான உபாயங்களைச்செய்து பார்க்கக்கூட மனமில்லாமல் அவ்வளவு கவலையீனமாகவும், சோம்பலாகவும் இருந்தால் அவன் கவர்ன்மெண்டாரால் தண்டிக்கப்படுவதற்குத் தகுதியுடையவனாக இருக்கிறான். இதனால்தான் உடையவர்களுக்கு நஷ்டம் வராமலும், கால்நடைகளுக்கு வியாதி வராமலும் தடுத்துக்காப்பதற்காக "கால்நடை வியாதி ஆக்ட்" ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

2.—தொடுதலினால் பரவும் பிணியை அடக்குவதைப்பார்க்கிலும், காற்றினால் பரவும் பிணியை அடக்குவது மிகவும் பிரயாசமானது. பிணி காற்றினால் பரவுதலானது வியாதிப்பட்ட பிராணிகள், அல்லது வியாதியிருக்கிறவஸ்து சுகமான பிராணிகளை நேராகத்தொடுதல் இல்லாமலே வியாதி வித்துக்கள் காற்றினால் கொண்டுபோய்ச் சேர்க்கப்படுவதே. நோய்கொண்ட கால்நடைகள் இருக்குமிடத்திலிருந்து கொஞ்சம் தூரமான இடத்தில் நோயில்லாத கால்நடைகளை வைப்பதில் இன்ஸ்பெக்டர்கள் மிகவுங் கவலையாகவிருப்பது உங்களுக்கு அதிசயமாகத் தோற்றலாம். ஆனால், சில வியாதிகள் காற்றின் செய்கையினாலாவது, மற்ற வகையினாலாவது வாயுமூலமாகக் கொண்டுபோகப்படுகிறதாக அனுபவத்தினால் தெரிந்திருக்கிறபடியால் இன்ஸ்பெக்டர்கள் இவ்விதஞ் செய்கிறார்கள். சுகமாக இருக்கிற பிராணிகளை வியாதியுள்ள பிராணிகளிருக்கு

மிடத்திலிருந்து ஐந்நூறு கஜதூரத்தில்வைத்தால் பத்திரமாக இருக்கும். இதைப்பற்றிப் பின்பு அதிகமாகச் சொல்லப்படும்.

3.—வியாதிப்பொருத்தம் (Inoculation). இது உங்களுக்கு அம்மைகுத்துகிற மாதிரியில் தெரிந்திருக்கிறது; அம்மைகுத்துதலில் பசுவின் வியாதியானது, அவ்வியாதி வஸ்துவை ஒரு காயத்தில் பொருத்துதலினுல் மனிதனைப் பற்றிக்கொள்ளுகிறது. சில வியாதிகள் காற்றின் மூலமாகவாவது, தொடுதல் மூலமாகவாவது பரவுகிறதில்லை; ஆனுல், அவைகள் இப்போது சொல்லிய காயத்தில் பொருத்துதலாகிய வழியினுல் பரவுகின்றன; ஆகையால், அவைகள் இவ்வழியைப் பார்க்கிலும் லேசான வழிகளினுல் பரவுகிற மற்ற வியாதிகளிலும் குறைந்த அபாயமானவைகள். பொருத்த வியாதி (Inoculation disease) களில் மாடுகளின் அடைப்பானும் (Anthrax), குதிரைச்சயமும் (Glanders of horses), நாய் வெறி (Madness of the dog) யும் ஆகிய மூன்றும் மிக முக்கியமானவைகள். ஒரு பிராணியிலிருந்து மற்ருெரு பிராணியைப்பற்றும் வியாதிகளில் ஏறக்குறைய எல்லாம் பொருத்துதலினுல் (Inoculation) அவைகளுடைய் மிருந்த கொடூரமான ரூபத்தில் பரவக்கூடும். அடைப்பானும், குதிரைச்சயமும் அவைகளுள்ள பிரேதங்களைப் புண்ணுள்ள கைகளினுல் தகுந்த சாக்கிரதையில்லாமல் வெட்டினுல் அவ்வியாதிகள் மனிதனையும் பற்றிக்கொள்ளக்கூடும். பொருத்தலுக்குக் காயம் எப்பொழுதும் ஆவசியகமில்லை; ஏனென்ருல், நாசித்துவாரம், கண், வாய் இவைகளை மூடியிருக்கும் மிருதுவான தோல்களின் வழியாயும் இவைபோன்ற தேகத்திலிருக்கும் மற்ற மிருதுவான தோல்களின் வழியாயும் விஷம் உட்பிரவேசிக்கக் கூடும்.

கவலையினாலும், மேற்பார்வையினாலும், சுகத்தைப் பற்றிய விதிகளையும், * தொற்றினாலும், † சஞ்சாரத்தினாலும் பரவும் வியாதிகளைத் தடுப்பதற்குரிய விதிகளையும் கவனிப்பதினால், சாதாரண வியாதிகளும் ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப் பற்றும் வியாதி (Communicable disease) களும் தடுக்கப்படக்கூடியவைகளென்பதை நாம் இப்போது தெரிந்தோம். சுகம் பேணுதற்குரிய இந்தச் சுலுவான உபாயங்களை யார் அலட்சியஞ்செய்கிறார்களோ, அவர்கள் தங்கள் கால்நடைகளை இழப்பதற்கும், சட்டப்படி தண்டிக்கப்படுதற்கும் பாத்திரர் ஆகிறார்கள்.

---

* வியாதி தொடுதலினால் பரவுதல் தொற்று (Contagion.)

† வியாதி காற்றின்வழியாய்ச் சஞ்சரித்துப் பரவுதல் சஞ்சாரம் (Infection.)

# உ—வது அதிகாரம்.

## வியாதிகளும் பிரயோகங்களும்.

---

நோயுள்ள பிராணிகளுக்கும் சுகமாகவிருக்கிற பிராணிகளுக்கும் உள்ள வித்தியாசங் கண்டுபிடிக்கும் விதம். ஒருபிராணியினிடத்தில் ஏதாவது வழக்கமில்லாத நடத்தையாவது தோற்றமாவது காணப்பட்டால், அது வியாதி யணுகியிருப்பதற்கு ஒரு அடையாளமாக இருக்கும். கெட்டிக்காரனான மேய்ப்பன் அந்தப்பிராணிக்கு ஏதோகெடுதி சம்பவித்திருக்கிறதென்று உடனே கண்டுபிடித்து, அக்கெடுதி என்னதென்றுதெரிந்து அதைநன்றாய் விலக்குவதற்குத் தன்னால் ஏன்றதெல்லாஞ்செய்வான். கால்நடைகள் சௌக்கியமாக இருக்கும்போது, மந்தையோடு கலந்து மேய்ந்துகொண்டும், சாதாரணமாகத் தீனிதின்றுகொண்டும், சரியானகாலங்களில் கிரமமாக அசைபோட்டுக்கொண்டும் இருக்கும்; கண் பிரகாசமாகவும் தெளிவாகவும் இருக்கும்; வெறித்துப் பார்க்கமாட்டாது; காதுகள் அசைவாடிக்கொண்டிருக்கும்; மூக்கில் இயற்கையான ஈரம் இருக்கும்; தோல் மிருதுவாகவும் சுத்தமாகவும் இருக்கும்; ரோமம் எவ்விதமாகப்படிந்திருக்கவேண்டுமோ, அவ்விதமாக இருக்கும்: அவைகள் தங்கள் தேகத்தை அடிக்கடி நக்கிக்கொள்ளும்; கிரமமான காலங்களில் இறுக்கமில்லாத சாணிபோடும்; அதிகப்பிரயாசமில்லாமல் மூத்திரம்பெய்யும்; காலும் குளம்பும் சுத்தமாகவும் நேர்மையாகவுமிருக்கும். அவைகள் முடத்தின் அடையாளம் ஒன்றுமில்லாமல் சாதாரணமாக உபயோகப்பட்டுக்கொண்டிருக்கும். ஒருபிராணி

வழக்கத்திலில்லாத மந்தமுள்ளதாய் உறங்கிப்போயிருந்தாலும், மந்தையைவிட்டுப் பிரிந்து தனித்துநின்றுகொண்டிருந்தாலும், மயிர் விகாரமாகச் சிலிர்சிலிர்த்திருந்தாலும், அதற்குத் தெளிவாய் ஏதோ சொஸ்தக்குறைவு நேரிட்டிருக்கிறதென்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும். கொம்பு சூடாகவும், மூக்கு உலர்ந்தும், வாய் சூடாய் வறண்டும் இருந்தால், அந்தப்பிராணிக்குக் காய்ச்சல் அடித்துக்கொண்டிருக்கும். இந்தக்குணங்களோடு மூத்திரம் மஞ்சள்நிறமாகவும் அளவிற் குறைந்தும் இருக்கும்; சாணி இறுக்கமாகவும் வறட்சியாகவுமிருக்கும்; தீனிதின்னாது; ஆனால் மிகுந்த தாகமுடையதாக இருக்கும். காய்ச்சல் இருக்கிறதா இல்லையாவென்று பார்க்கவேண்டியது மகாமுக்கியமானது; ஏனென்றால், அது சகல பிராணபாயமான வியாதிகளுக்கும், விசேஷமாய் ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப்பற்றும் வியாதிகளுக்கும் உள்ள குணங்களில் ஒன்றாக இருக்கிறது. ஒரு பிராணியினுடைய தேகத்தின் எந்தப்பாகமாவது அப்பிராணிக்குக் காய்ச்சலுண்டாகும்படியான அவ்வளவு வியாதிப்பட்டால், அந்தப்பாகம் அழற்சி (Inflammation) யடைந்திருக்கிறதென்று சொல்லப்படுகிறது. சகல அழற்சியடைந்த பாகங்களும் சிவப்பாகவும், சூடாகவும், தொட்டால் வலிக்கும்படியான அவ்வளவு மிருதுவாகவும், வீங்கினதாகவும், தங்கள்தங்கள்தொழிலைச்செய்யச் சக்தியற்றவைகளாகவும் இருக்கும். இந்தக்குணங்கள் அழற்சியின் குணங்களாக எண்ணப்படுகின்றன.

பிரயோகமானது வியாதியைமாற்றிச் சௌக்கியத்தையுண்டுபண்ணக் கூடியதானால் மாற்றும்பிரயோகமென்றும், வியாதிவராமல் தடுக்கக்கூடியதானால் தடுக்கும்பிரயோகமென்றும் இரண்டுவகைப்படும். பிராணிகள் வியாதிப்பட்டபோது அவைகளைச் சௌக்கியப்படுத்திவிடலாமென்று

நம்புவதைப்பார்க்கிலும், அவைகள் [illegible]ான் நிலைமையி லேயேயிருப்பதற்கு வேண்டிய விதிகளை யநுசரித்து, வியாதி வித்துகள் அவைகளைச்சற்றும் அணுகாமற்காத்துவியாதியைத்தடுப்பது மிகவும் நல்லது. கெட்ட ஆகாரமும், அசுத்தமான வாயுவும், அசுசியுள்ள தண்ணீரும், அளவுக்குமிஞ்சியவேலையும், பொதுவாகக் கேவலமான பராமரிப்பும், தொற்று அணுகும்படியான ஸ்திதியில்வைத்தலும், கால்நடைகளுக்கு மிகச்சாதாரணமாக வரக்கூடிய பிராணுபாயமான வியாதிகளுக்கு முக்கியகாரணங்களென்று நாம் முன்னமே தெரிந்திருக்கிறோம்.

சாதாரணவியாதிகளுடையவும் தொற்றுவியாதிகளுடையவும் பரிகாரங்கள் வெவ்வேறு யிருக்கவேண்டும். பிராணிகளைப் பராமரிப்பதற்குரிய மிகச்சிலாக்கியமான வழிகளை யநுசரிப்பதினால் சாதாரண வியாதிகளைத் தடுக்கக்கூடும். போஷிப்பதிலாவது, ஒதுக்கிடங்கொடுப்பதிலாவது, வேறு விஷயங்களிலாவது, எதாவது மாறுபாடுசெய்வது ஆவசியகமாக விருக்கும்போதெல்லாம் செய்யவேண்டிய மாறுபாட்டை ஒரேதடவையில் செய்துவிடாமல் கொஞ்சம் கொஞ்சமாகச் செய்யவேண்டும். ஏனெனில், திடீரென்றுசெய்யும் மாறுபாடுகள் வியாதிக்கு மிகச்சாதாரணமான காரணமாக விருக்கின்றன. பிராணிகளை அசட்டையாய் விட்டுவிடுவதைப் பார்க்கிலும், அவைகளுக்கு நல்ல ஆகாரமும் ஒதுக்கிடமுங்கொடுப்பது சாதாரணமாக அதிகநயமானதாகவும் நன்மையானதாகவும் இருப்பதையும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். வேலையையும், ஆகாரத்தையும், ஒதுக்கிடத்தையும் ஒழுங்குபடுத்தும்பொருட்டு காலவேற்றுமை அல்லது பருவவேற்றுமைகளுண்டாவதைச்சரியாகக் கவனிப்பதும் ஒழுங்காகப் போஷித்துவருவதும் மிக முக்கியமானவைகள். ஒருபிராணி எப்போதும் இருப்பதுபோல இல்லாதிருந்தாலாவது, வழக்கத்துக்கு விரோதமாக

எதுவாவது செ தாலாவது அதைக் கவனமாகச் சோதித்துச் சரியாகப்போஷித்து வரவேண்டும். ஏனெனில், ஒருவியாதி பெருங்கேடுதிசெய்து தேகத்தை நன்றாகப்பற்றிக் கொள்ள இடங்கொடாமல் அதை ஆரம்பத்திலேயே நிவிர்த்திக்க முயல்வதில் மிகுந்த நன்மை யிருக்கிறது. ஒருவியாதி சாதாரணமானதாகத் தோற்றுகிறதென்று அதை அசட்டை செய்யக்கூடாது. * புப்புச பரிபுப்புசநோய் (Pleuro-pneumonia) போன்ற மிகப் பிராணாபாயமான சிலவியாதிகள் மிகவும் அற்பமான குணங்களுடன் ஆரம்பிக்கின்றன. (அவ்விதவியாதியுடைய) பிராணி, வியாதி அசாத்தியமாகும்வரையும், மிகுந்த வருத்தமுள்ளதாகத் தோற்றுகிறதில்லை. பரிகாரஞ்செய்வதில் அளவுக்குமிஞ்சி யாதொன்றும் செய்யாதிருப்பதும், நோயுற்றபிராணிக்குக் கண்டமட்டும் உபயோகமற்ற மருந்தைச் செலுத்தி அதைச் சங்கடப்படுத்திக் கொல்லாமலிருப்பதும் மிக முக்கியமானவைகள். பரிகாரஞ்செய்வதில் பிராணியை அமரிக்கையாகவும், ஆறுதலாகவும் வைத்துக் கவனமாகப்போஷிப்பது பிரதானமானது.

போஷிப்பு (1.) பின்வருகிற விஷயங்களில், பிராணியைப்பற்றிக் கவலையெடுத்து அதைச் சௌக்கியமாகவைத்திருக்கவேண்டும். (க) ஆகாரம் (அளவுக்குக்) கொஞ்சங் குறைந்ததாகவும், லேசாகச் சமிக்கக்கூடியதாகவும், நன்றாகப் பக்குவம்பண்ணப்பட்டதாகவும் இருக்கவேண்டும். அதைச்சாப்பிடும்படி நோய்த்த பிராணியைக் கட்டாயப்படுத்தக்கூடாது. பிராணிக்குச் சாப்பிடப் பிரியமுண்டானபோது சாப்பிடத்தக்க இடத்தில் ஆகாரத்தைவைத்திருக்கவேண்டும். † வைக்கோற்றேய் நீரும், அரிசி அல்

* புப்புசம்.—நுரையீரலென்ற சுவாசக்கருவி. பரிபுப்புசம்.—சுவாசக்கருவியைச்சுற்றி மூடிக்கொண்டிருக்கும் சவ்வு. இவ்விரண்டையும்பற்றியநோய் புப்புச பரிப்புப்புச நோய்.

† வைக்கோல்தேய்நீர்.—வைக்கோலைக் கொதிநீரில்போட்டுக் கொஞ்சநேரம் மூடிவைத்துப் பின் இறுத்தெடுக்கும் நீர்.

லது கேழ்வரகுக்கஞ்சியும், கொஞ்சம் பச்சைத்தீனியும் வைக்கவேண்டும். (உ) பானம். தடிப்பாக இல்லாத கஞ்சியாவது, கொஞ்சம் வெடியுப்புக்கலந்த தண்ணீராவது நோயுற்றபிராணி லேசாகச்சாப்பிடக்கூடிய சமீபமான இடத்தில் வைத்திருக்கவேண்டும். (ங) ஒதுக்கிடம். நோய்த்த பிராணியை ஒருபந்தல், தோப்பு, லாயம், அல்லது வேறு ஒதுக்கிடத்தில் விட்டுவைக்கவேண்டும். சிலசமயங்களில் அதைக்கம்புளி (அல்லது துணி) போட்டு மூடவேண்டிவரும். (ச) சுத்தம். ஒதுக்கிடம் சீரான உஷ்ணமாக இருப்பதுமாத்திரம் போதாது; அது சுத்தமான காற்றுவரக் கூடியதாகவும் துப்புரவாக வைக்கப்பட்டிருப்பதாகவும் இருக்கவேண்டும். இந்த விஷயங்களைக் கவனித்தாலொழிய, வியாதி மற்றப்படி (கவனித்தபோது) இருப்பதைப்பார்க்கிலும் மிகவும் அதிகக் கொடூரமாகவிருக்கும். சிலசமயங்களில் பிராணியின் மலசலங்களைக் கவனமாக (துப்புரவாய்) வெளியேற்றவும், காயங் (களுக்குச் செய்யவேண்டியவற்றைச் செய்து) கட்டவும், வேறு ஆவசியகமானவைகளைச்செய்யவும் வேண்டி யிருக்கும். துர்க்கந்தமிருந்தால் ஒதுக்கிடத்திலும் அதைச்சுற்றியும் * "அபசஞ்சாரிகளை" (Disinfectants) ச் சிதறுவதில் நாற்றம் மாறிவிடும்.

(2.) மருந்துகளின் பிரயோகத்தைப்பற்றிச் சொல்லியிருக்கும் விவரத்தைக் கவனமாக நிறைவேற்றுவதும், காயக்கட்டு, போல்ட்டிஸ் (அல்லது களிவைத்துக் கட்டுதல்) முதலிய விஷயங்களில் தகுந்த வைத்தியர்

---

* வாயுவிலும், சலத்திலும், தரையிலும், மற்ற இடங்களிலும் உள்ள வியாதி வித்துகளை நாசமாக்கி துர்க்கந்தத்தை மாற்றும் கார்பாலிக்கமிலம், கந்தகப்புகைபோன்றபொருள்கள் "அபசஞ்சாரிகள்" என்று சொல்லப்படும்.

சொல்லுகிறபடி செய்வதும் மூக்கியமானவைகள். வியாதிக்குச் செய்யவேண்டிய பிரயோகங்களில் சரியான பயிற்சியுடைய ஒருவரும் பக்கத்திலில்லையானல், கால்நடைக்குடையவர்கள் நான் பின்பு விவரிக்கப்போகிற சில மிகவும் லேசான உபாயங்களைக் கையாடலாம்; ஆனல் அவர்கள் சரியாகப் போஷிப்பதிலே மிகுந்த நன்மை யிருக்கிறதென்பதை முக்கியமாக நம்பவேண்டும். இப்புத்தகத்திற் சொல்லப்படும் மருந்துகள் அநேகமாகச் ஜில்லாக்களில் எல்லாம் அகப்படக் கூடியவைகளாகவும் மிகுந்த நன்மைசெய்யத் தக்கவைகளாகவும் இருக்கின்றன.

இந்தப்புத்தகம் யாருக்காக எழுதப்பட்டதோ அவர்களுக்கு தேகத்தின் பலபாகங்களையும்பற்றி மிகச் சொற்ப அறிவும், அப்பாகங்கள் செய்யவேண்டிய தொழிலைப்பற்றி அச்சொற்ப அறிவைப்பார்க்கிலுங் குறைந்த அறிவும் இருக்குமாகையால், பிராணிகளுக்குவரும் சகலவியாதிகளையும்பற்றி இப்புத்தகத்தில் சொல்வது முற்றிலுங் கூடாமையானது; ஆனல் கால்நடைகளுக்கு மிகச்சாதாரணமாகவரும் வியாதிகளைக்கவனித்து அவைகளைப் பகுத்தறியும்வகையையும், அவைகளின் பரிகாரத்தையும் பற்றிப்பேசுவேன்.

அடைப்பான். (Anthrax or "Black Disease.") இது மிகக் கொடியவியாதி; எந்தப்பிராணியையும் பற்றிக் கொள்ளும்; மனிதனும் இவ்வியாதியினல் பற்றப்படக் கூடியவன்தான். இது ஆடுகள், மாடுகள், குதிரைகளுக் கெல்லாம் மிகவும் பிராணபாயமானது. இது அபூர்வமாகத்தான் குணமாகக் கூடியது. இவ்வியாதி அநேக ரூபங்களாகச் சம்பவிக்கின்றது. அவைகளில் பின்வருபவை முக்கியமானவை.

1. மண்ணீரல் அடைப்பான் அல்லது மண்ணீரற்சன்னி. (Splenic Apoplexy.) மாடுதிடீரென்று சுகவீனப்பட்டு, தேகபலமுழுமையும் இழந்துவிடுகிறது; அதின் மூக்கும் கண்ணிமைகளும் கருஞ்சிவப்பு நிறத்தையாவது ஏறக் குறையக் கறுப்பு நிறத்தையாவது அடைகின்றன; மாடு கரியநிறமான இரத்தங்கலந்த சாணிபோடும்; மிகச்சுருக் கமானநேரத்தில் சாகும். இறந்தமாட்டைத் திறந்து பார்த்தால் இரத்தம் கருஞ்சிவப்பு நிறமாகவும், மண்ணீ ரல் இயல்புக்கு அதிகமாக மிகவும்பெருத்து தார் எண் ணெய்போன்ற கரியரத்தம் நிறைந்ததாகவும் இருக்கும்; உடம்பு வெகுசீக்கிரம் அழுகி நாறிவிடும்.

2. கருங்கால். (Quarter ill or Black Leg.) இவ் வியாதி மூடத்தோடு ஆரம்பிக்கிறது. சாதாரணமாகப் பின்னங்காலில் ஒன்று துரிதமாக வீங்கித் தோலின்கீழ் வாயுதிரண்டு நிற்பதினால் அழுத்தும்போது நெறநெ றென்று வெடிக்கிறசத்தம் உண்டாகும். கன்றுகளை முதல் முதல் செழித்த மேய்ச்சற்றலத்தில் விட்டபோது இவ்வியாதி உண்டாகிறது. காய்ச்சல், மற்ற அடைப் பான் வியாதிகளில் அதிகரிப்பதுபோல, இதிலும் அதி கரிக்கும். மரணம் சீக்கிரம் சம்பவிக்கும்.

3. தொண்டைஅடைப்பான் அல்லது நெடும்புண்ணுள்ள தொண்டை. (Malignant Sore throat.) பிராணி மிகவும் அசௌக்கியமாகவும், பலவீனமாகவும் இருப்பதினாலும், நாக்கு அழற்சி தொண்டை அழற்சிக்குள்ள சகலகுணங் களு மிருப்பதினாலும், வாய் கறுப்பாக இருப்பதினாலும், சுவாசம் மிகவும் துர்நாற்றமாக விருப்பதினாலும், இந்த வியாதியைத் தெரிந்துகொள்ளலாம். மரணம் வெகு துரிதமாகச் சம்பவிக்கும். பரிகாரத்தினால் மரணத்தை விலக்குவது முடியாமையாக விருக்கிறது.

4. பிராக்கசி அல்லது நீரடைப்பான். (Braxy.) ஆடுகளுக்குவரும் அடைப்பான். இது ஆடுகளின் நஷ்டத்துக்கு மிகவும் சாதாரணமான காரணம். இது மேலே சொல்லிய இரண்டுவகை அடைப்பான்களை யொத்திருக்கலாம்.

5. அடைப்பான் காய்ச்சல். (Anthrax Fever.) குதிரைகளுக்குவரும் அடைப்பான்வியாதி அடைப்பான் காய்ச்சலென்று சொல்லப்படும். இதுமிகவும் பிராணுபாயமானது ; இந்தியாவில் அடிக்கடி உண்டாகிறது. இவ்வியாதியின் குணங்கள்,—உக்கிரமான காய்ச்சல் உண்டாகி விரைவாக அதிகரிக்கும்; பின்பு வெகுசீக்கிரமாக மிகுந்த பலவீனமுண்டாகும் ; கண்ணிலும், மூக்கிலும், வாயிலும் இரத்த நிறமான புள்ளிகள் உண்டாகும்; மரணம் திடீரென்று சம்பவிக்கும் ; அவ்வித மரணத்துக்குச் சற்றுமுன் மூக்கின்வழியாக நுரைதள்ளப்படும்.

6. பிளவைகள். (Carbuncles.) அடைப்பான் வியாதியினால் இறந்த பிராணிகளின் இரத்தமாவது மற்றவஸ்துக்களாவது வாயின்தோல், மூக்கின் உள்தோல்போன்ற சளிச்சவ்வின் மேலாவது, புண்ணான இடத்திலாவது பொருந்துத (Inoculation) லினால் இந்தவியாதி மனுஷரிடத்தில் உண்டாகும்; காய்ந்த தோலுங்கூட இந்தப் பயங்கரமும் பிராணுபாயமுமான வியாதியைப் பரவச் செய்யலாம். ரோமங்களைத் தரம்பிரிக்கும் வேலைசெய்பவர்களில் அநேகர் (இவ்வியாதியினால்) மரணமடைகிறார்கள். இதற்குக்காரணம் அவர்கள் தரம்பிரிக்கும் ரோமத்தில் அடைப்பான்வியாதியினால் இறந்த ஆடுகளின் ரோமங் கலந்திருப்பதுதான். தோல் வியாபாரமும் ரோம வியாபாரமும் தொற்றுவியாதிகளை மிகுதியாகப் பரவச்செய்கின்றன.

அடைப்பான் வியாதிக்கு உண்மையான காரணம் இன்னதென்று தெரிவது முக்கியமானது. இரத்தத்தில் மிகச்சிறிய * வந்தைகள்வளர்ந்து துரிதமாகப் பெருகுவதினுல் இவ்வியாதியுண்டாகிறதென்று நமக்கு இப்போது தெரியும். அடைப்பானுல் சாகும் ஒருபிராணியின் இரத்தம் புல்லின்மேல் விழுந்தாலாவது, அதன்பிரேதம் காட்டுமிருகங்களாலும், பட்சிகளாலும் துண்டுதுண்டாகச்செய்யப்படும்படி நாம் இடங்கொடுத்தாலாவது இந்த வந்தைகள் பூமியில்விழுந்து பெருகுகின்றன. இப்படி விழுந்து ஒருவருஷமானபின்புங்கூட, இவ்வந்தைகள் தாங்கள்விழுந்த இடத்தில் உண்டாகும் புல்லைமேயும் பிராணிகளுக்கு அடைப்பான் வியாதியை யுண்டாக்கலாம். ஆகையால் பற்றும்வியாதி (Communicable disease) களினுல் இறந்த பிராணிகளின் பிரேதங்களைப் பிணஞ்சுடு காளவாயினுலாவது வேறுவகையினுலாவது எரித்துப்போடவேண்டும். எரிப்பதைத்தவிர, எந்த வகையும் பத்திரமானதல்ல. நரிகளும், பருந்துகளும், இவைகளைப்போன்ற மற்றப் பிராணிகளும் அடைப்பான்வியாதியைப் பரவச்செய்கின்றன; ஆனுல் மாமிசபக்ஷணஞ்செய்யும் பிராணிகள் இவ்வியாதியினுல் அபூர்வமாகப் பீடிக்கப்படுகின்றன. இது ஆச்சரியம். எறும்புகள், ஈக்கள், நாய்கூழ்ப்பூச்சிகள்போன்ற மிகச்சிறிய செந்துக்களுங்கூட அடைப்பான் வந்தைகளைக்கொண்டு போவதற்குப் போதுமான பெரிய உடலுடையவைகளாகவிருக்கின்றன. இந்த வகையினுல் அடைப்பான் வியாதி எங்கும் விஸ்தாரமாகப் பரவுகிறது. இந்வியாதியினுல் இறந்த பிராணியை நீங்கள் திறந்துபார்த்தால் இரத்தம் தார் எண்ணெய்போலக் கறுப்பாகவிருப்பதை

* வந்தைகள்.—மற்றத்தாவரங்கள் அல்லது பிராணிகளிலிருந்து தங்களுக்கு வேண்டிய ஆகாரத்தைக் கவர்ந்து அவைகளின் உள்ளேயாவது மேலேயாவது சீவிக்கும் தாவரங்கள் அல்லது பிராணிகள்.

யும், விசேஷமாக வியாதிப் பட்டபாகங்கள் மிகக் கறுப்பாய்வீங்கியிருப்பதுடன் சீக்கிரம் அழுகி நாறக்கூடியதாக இருப்பதையும், தேகத்தில் ஏறக்குறைய எல்லாப் பாகத்திலும் இரத்தப்புள்ளிகளும் தடிப்புகளும் இருப்பதையும் நீங்கள் எப்போதும் பார்க்கலாம்.

**அடைப்பான்வியாதிகளுக்குச் செய்யும் பொதுப்பிரயோகம்.** மேலேசொல்லிய பல ரூபங்களுள்ள அடைப்பான்வியாதியில் நோய்கண்டவுடன் சீக்கிரமாகப் பிரயோகஞ் செய்யவில்லையானால், பின்புவியாதிப்பட்ட பிராணியைக் காப்பாற்றும்படி நாம் செய்யும் எதுவும் பயன்படாது. ஒரு *திரும் அளவு சுத்தமான கார்பாலிக்கமிலமும் (Carbolic acid pure), இரண்டரை ரூபாயெடை நன்ருகப் பொடித்த கறியுப்பும், ஒரு சிறிய எலுமிச்சம் பழத்தளவு உண்டைசெய்வதற்குப் போதுமானமாவும், கருவேலம்பிசின் கலந்த (கோந்து) நீரும் சேர்த்துப் பிசைந்து நாலுவிரற்கடை நீளமாகக் குழவிவடிவா யுருட்டி மெல்லியகாகிதத்திற் பூரணமாகப் பொதிந்து கவளமாகக் குதிரைக்குக் கொடுக்கவும். (உண்டை புதிதாகச் செய்தவுடன் கொடுக்கவேண்டும்; **அது காய்ந்து போனபின் கொடுத்தால், பிராணியை விழுங்கக்கூடாதபடிசெய்து அபாயமுண்டாக்கலாம்.**) பிராணிக்குக் குணமாகக்கூடிய குறிகள் காணும்வரை இந்தமருந்தை நாலுமணிநேரத்திற் கொருமுறை கொடுக்கவேண்டும்.

மாட்டுக்கு மேலே சொல்லிய உண்டை ஒன்றை (ப்பட்டினம்படியில்) அரைப்படி திண்ணமான கூடுகஞ்சியில் கரைத்துக்கொடுக்கவும்.

---

* திரும்.—ஒரு (பட்டினம்படியில் எட்டிலொருபாகமாகிய) ஆழாக்கு (சுமாராக) எட்டு அவுன்ஸ்; ஒரு அவுன்ஸ் எட்டுத்திரும்; ஆகையால் ஒரு திரும் (உத்தேசமாக) ஆழாக்கில் அறுபத்துநாலி லொருபங்கு.

செம்மறியாட்டுக்கும், வெள்ளாட்டுக்கும், கன்றுகளுக்கும் மேற்சொல்லிய உண்டையில் காலில் ஒருபங்கெடுத்துக் கஞ்சியிற் கரைத்துக் கொடுக்கவும்.

மலச்சிக்கு உண்டாகி யிருக்கும் பிராணிகளுக்கெல்லாம் சாந்தமான பேதி மருந்து கொடுக்கலாம்.

தேகத்தில் எந்தப் பாகத்திலாவது உண்டாகும் வீக்கங்களுக்கு முதலில் வெந்நீர்விடவும் அல்லது வெந்நீர் நனைத்த துண்டினால் ஒற்றடங்கொடுக்கவும், பின்பு களிவைத்துக்கட்டவும், அப்பால் ஆவசியகமென்று தோன்றினால் கொப்புள முண்டாக்குங் காரமருந்து பிரயோகிக்கவும் வேண்டும். மூச்சுவிடக்கூடாமையுண்டானால் குரல்வளையை ஒருகத்தியினால் திறந்து சிலவேளை பிராணியின் உயிரைக்காப்பாற்றலாம். ஆனால் இந்தப்பிரயோகம் எப்போதும் வெற்றேரினேரி ஸர்ஜன்களால்தான் செய்யப்படவேண்டும்.

வியாதியின் மூர்க்கம் நீங்கியபின் பிராணியைக் கவனமாகப் போஷித்து அதற்கு நெடுங்காலம் பல விருத்தி மருந்து கொடுப்பது ஆவசியகம்.

அதைப்பு அல்லது நீர்க்கோவை. (Dropsy.) இரத்தத்திலிருந்து ஒருவகை நீர் (Serum) திரண்டிருப்பது. இது மிகச்சாதாரணமாகத் தோலின் கீழும், நெஞ்சிலும் வயிற்றிலும் உண்டாகும். இது பலவீனத்துக் கொரு அடையாளம். மழைகாலத்திலும், புதிதாக முளைத்துத் தண்ணீர் அதிகமாக வுள்ள மிகுந்த இளம்புல்லைப் பிராணிகள் தின்னும் போதும், கோடைகாலத்தினால் அவைகளின்தேகம் மிகவும் இளைத்திருக்கும்போதும், அப்படியிளைத்ததேகம் கோடைகாலம்போய்த் திடீரென்று சீதளகாலம் வந்ததினால் மேலும் அதிகமாக இளைத்திருக்கும் போதும் இவ்வியாதி மிகச்சாதாரணமாக உண்டாகும்.

(அதைப்பு வியாதியின் குணங்கள்.) கால்கள், நெஞ்சு, தாடையின் கீழ்ப்பக்கம், அல்லது வயிறு வீங்கியிருக்கும்; மேலும், வாய் கண் வெளுத்திருப்பது, லேசாகக் கழிச்சல் உண்டாகுந்தன்மை, அவயவங்கள் பலவீனமாகவும் உறுதியில்லாமலும் தங்கள்தொழிலைச்செய்வது, ரோமம் லேசாகப் பிரிக்கப்படக் கூடியதாய்ச் சரசரப்பாகித்தோல் வறண்டிருப்பது இவை போன்ற மற்ற மெலிவுக்குறிகளும் இருக்கும். ஆடுகளில் மிகச்சாதாரணமாகவரும் அதைப்பு சிவந்த நிறமுடையதாய்த் தண்ணீர்போன்ற ஒரு நீர் வயிற்றில் திரண்டிருப்பதுதான். இதினால் ரோமம் உதிரும்.

பிரயோகம். நல்ல போஷணையான ஆகாரங் கொடுத்துவரவும். ஒன்றேகால் ரூபாயெடை வெடியுப்பும், காலேமாகாணி ரூபாயெடை அன்னபேதியும், இரண்டரைரூபாயெடை நிலவேம்பும், ஒன்றேகால்ரூபாயெடை சுக்குப்பொடியும் கஞ்சியிற்கலந்து தினந்தோறும் காலையில் கொடுக்கவும்.

ஆட்டு வைசூரி அல்லது செம்மறியாட்டம்மை (Sheep pox) மனிதருக்குவரும் வைசூரியை மிகவும் ஒத்திருக்கும் நோய். இது இந்தியாவில் மிகச்சாதாரணமானது. தொடைகளினுள்ளும், உதட்டின்மேலும், வாயிலும், மூக்குத் துவாரங்களிலும், தோல் மிருதுவாக இருக்கும் எல்லா இடங்களிலும் முக்கியமாகத் தேகத்தின் சவ்வுகள் எல்லாவற்றிலும் அம்மைமுத்துகள் போன்ற கொப்புளங்கள் உண்டாவதினால் இவ்வியாதியைப் பகுத்தறியலாம். மூக்கிலிருந்து நீரோடிக்கொண்டிருக்கும். கழிச்சலும் மிகுந்த மெலிவும், காய்ச்சலும் உண்டாகும். வைசூரிப் பருக்கள் கொஞ்சமாகவும்; ஒன்றுக்கொன்று தூரமாகவும் இருக்கலாம்; அல்லது, ஒன்றாக நெருங்கிச்சேர்ந்து பெரிய புண்களையுண்டுபண்ணலாம். ஆடு இவ்வியாதி

யடைந்த மற்றப்பிராணிகளோடு இருந்து சுமார் பத்து நாளானபின்பு காய்ச்சல் உண்டாகும்; வியாதி இரண்டு வாரத்துக்குமேல் இருக்கும்; மரணம் மெலிவினால் சம்பவிக்கும். இவ்வியாதி ஆடுகளுக்கு மிகச்சஞ்சாரமுள்ள வியாதி; ஆனால், இதுவும் மனுஷருக்கு வரும் வைசூரியும், அல்லது பசுக்களுக்கு வரும்கோமாரியும் ஒன்றல்ல.

**பிரயோகம்.** எந்த மருந்தும் இவ்வியாதியை நிறுத்தமாட்டாது. ஆட்டுக்கு மிகவும் நல்ல ஆகாரங்கொடுத்துக் கவலையாகப் போஷிப்பது முக்கியமானது. தினந்தோறும் ஒரு சட்டி தண்ணீரில் இரண்டரை ரூபாயெடை வெடியுப்பைப்போட்டுக் குடிக்கக்கொடுத்தால், அது காய்ச்சலைத்தணித்து நன்றாக மூத்திரம் பெய்யும்படிசெய்து பிரயோசனப்படும். வைசூரிப்பருக்கள் வெடித்துப் புண்ணுண்டானால், அந்தப் புண்களுக்குப் பின்வரும் மருந்தெண்ணெயைத் தினந்தோறும் இரண்டுமுறை ஒரு கோழியிறகின் மெதுவான முனையினால் பிரயோகிக்க வேண்டும்.

கற்பூரம் ஒருபாகம்
எண்ணெய் முப்பது பாகம்.

இவைகளுடன் கார்பாலிக்கமிலம் அமையுமானால் அதில் ஒருபாகமும் கூட்டிக்கொள்ளவேண்டும். புண்களைக் கூடியவரை தொடாமற் கவலையெடுக்கவேண்டும். தொட்டு வருத்தப்படுத்தினால் புண்கள் சீழ்க்கொண்டு சுகப்படுவது கடினமாகும்.

**இரத்தமூத்ரி அல்லது இரத்தமூத்திரம்.** (Red water.) அடிக்கடி கால்நடைகளுக்கு வரும்; இது அநேகமாய்ப் பித்தாசயமாகிய ஈரல் பியர்திப்பட்டிருப்பதினால் உண்டாகிறது. இது ஒரு மந்தையில் அநேக பிராணிகளை ஒரேகாலத்தில் தாக்குகிறது. ஆனால், அநேகமாய்த்,

தொற்றுந்தன்மையினால் அவ்விஷம் தாக்குகிறதில்லையெ ன்றும், நெடுங்காலம் முரடான தீனியைக் கொடுத்தலா கியகாரணம் எல்லாமிருகங்களுக்கும் பொதுவாக இருப் பதினால் அவைகளில் அநேகம் இவ்வியாதியினால் ஒரே காலத்தில் துன்பமடைகின்றனவென்றும் நாம் எண்ண வேண்டும். மிகுந்த இளைப்பும், காய்ச்சலும், சிவந்த அல்லது கறுப்பு நிறமான மூத்திரத்தை அடிக்கடி பெய் தலும் இவ்வியாதியின் குணங்கள்.

பிரயோகம். அதைப்பு வியாதிக்குச் செய்யும்படி சொல்லிய பிரயோகத்தையே செய்யவும்.

இரைக்குழல் அடைப்பு அல்லது விழுங்கக்கூடாமை. (Choking.) கால்நடைகள் அந்நிய பதார்த்தங்களையெல் லாஞ் சாப்பிடுவதில் மிகுந்த பிரியமுடையவைகள். அவை கள் தோலின் துண்டுகள், பழஞ்சோடு, சீலைத்துண்டு, கம்பளத்துண்டு, லேசாக விழுங்கக்கூடாத மற்றப்பொரு ள் இவைகளை விழுங்குவதினால், இந்தப்பொருள்கள் இரைக்குழலை அடைத்து விக்கல் உண்டாக்குகின்றன. சில வேளைகளில் முள்ளுள்ள, அல்லது பெரிய முரடான வஸ்துக்கள் இந்தவிதமாக இரைக்குழலில் நின்றுகொண் டு ஆகாரத்தை வாயிலிருந்து வயிற்றுக்குப் போகாமல் தடைசெய்கின்றன. அளவுக்கு மிகக் குறைந்த தண்ணீர் குடிக்கக்கொடுப்பதினாலும், முரடும் வறட்சியுமான ஆகாரத்தைக் கொடுப்பதினாலும் இரைக்குழல் அடை ப்பு உண்டாகலாம். பிராணி வாயைத்திறந்து உமிழ் நீர் வடியவிட்டு அடிக்கடி விழுங்க முயற்சித்தும் விழுங்க மாட்டாமல் நிற்கும். வயிற்றில் வாயு நிரம்புவதினால் சீக் கிரமாகவாவது தாமதமாகவாவது வயிறு உப்பிவிடும். சிலவேளைகளில் கழுத்தின் இடதுபக்கத்தில் வீக்கமுண் டாகலாம். பிராணி ஆறுதலற்று வருத்தப்படும். இவ் வியாதியிருப்பதைத் திட்டமாகத் தெரிந்தபின் ஒரு பிரம்

ஙை வாய்வழியாகத் தொண்டையின்கீழ்விட்டால், அது வயிற்றில் சேராமல் தடைபடும்.

**பிரயோகம்.** ஒரு பிரம்பையாவது திண்ணமான கயிற்றையாவது நன்றாக எண்ணெய்தடவித் தொண்டைக்குள் லகுவாய்ச்செலுத்தி விழுங்கக்கூடாதபடி தடைசெய்துகொண்டிருக்கும் வஸ்துவை (வயிற்றின்) உள்ளே தள்ளிவிடும்படி முயற்சிக்கவும். அந்த வஸ்து லேசாக அசையவில்லையானால் அதை வெளியிலிருந்து கையினால் மெதுவாக அழுத்திப் பிசைந்து உடைக்கும்படி பிரயாசைப்படவும். அடிக்கடி கொஞ்சம் எண்ணெய் உள்ளே விட்டு ஆகாரஞ்செல்லும் பாதையாகிய இரைக்குழலை வழுவழுப்பாகும்படி செய்யவும். யாதொரு மருந்துங் கொடுக்கக்கூடாது. ஆனால், விழுங்கக்கூடாமை குணமானபோது ஒன்றேகால் ஆழாக்குப் பட்டைச்சாராய (Arrack) மும், ஒன்றேகால் ரூபாயெடை சுக்குப்பொடியும், இரண்டரை ஆழாக்குத் தண்ணீரோடு கலந்து கொடுத்தால் களைப்பு நீங்கிக் குணமுண்டாகும்.

**இளங்கன்றுக்கழிச்சல்.** (Scour.) இந்தக்கழிச்சல் இளங்கன்றுகளுக்கு வரும் வியாதி. இது கன்றுகள் பால் குடிக்குங்காலத்தில் வருங்கால் கழியும் மலம் வெள்ளையாகவிருக்கும்; ஆனால், சிலவேளைகளில் இந்த வியாதி பசும்புல் தின்ன ஆரம்பித்தபோது உண்டாகிறது; அப்படியுண்டானால் மலம் பச்சை நிறமாக இருக்கும்.

**பிரயோகம்.** இந்த வியாதி எப்போது வந்தாலும் கன்றைக் கவனமாகப் போஷித்து ஏராளமாகக் கஞ்சி கொடுத்துச் சீமைச்சுண்ணாம்பு, சுக்கு, மிளகாய் இவைகளில் வகைக்குக் காலேமாகாணி ரூபாயெடை பொடித்துத் தினங்கொடுத்துவரவேண்டும்.

இளங்கொடி விழாமை. (Retention of the Membranes) கன்று கருப்பையிலிருக்கும்போது அதைச் சுற்றி மூடியிருக்கும் சவ்வுகள் கன்று வெளியேறியபின் கீழேவிழாதிருப்பது, சனங்கள் சாதாரணமாக எண்ணுகிறபடி அவ்வளவு அபாயமானதல்ல. நாம் ஒன்றுஞ் செய்யாமலிருந்தால் அவைகள் சரியான காலத்தில் இயல்பாகவே வெளியேறிவிடும்; கொஞ்சக்காலம் உள்ளேயிருந்தாலும் தீங்கு செய்யாது. அவைகளை வெளியாக்கும்படி முயற்சிக்கும்போது பலத்தை உபயோகப்படுத்தக் கூடாது. அப்படிச்செய்தால் கருப்பையிலிருந்து இரத்தம் வடியலாம்; அல்லது கருப்பையே சரிந்துவிடலாம்.

கழிச்சலும் சீதபேதியும். (Diarrhœa and Dysentery.) சாணி சுகமான காலத்தில் இருப்பதைப்பார்க்கிலும் மிகவும் இளக்கமாகச் செய்கிறதான குடலைப்பற்றிய வியாதி கழிச்சல், சீதபேதி என்று இரண்டு வகைப்படும். கழிச்சல் மலம் இளகித் தண்ணீர்போலாகச்செய்யும் வியாதி. சீதபேதியில் குடலில் இன்னம் அதிக நோவுண்டாகி மலம் இரத்தங்கலந்திருக்கும். இந்த வியாதிகள் கெட்ட தீனியினாலும், பலவீனத்தினாலும், குளிருக்குட்படுதலினாலும், முக்கியமாய் மிருதுவான தீனியை நிறுத்திக் கரடு முரடான தீனியைக்கொடுப்பதினாலும் உண்டாகின்றன. கோடைகாலத்தில் பசித்துன்பத்தையொழிப்பதற்காகப் பிராணிகள் கடினமாய் புலர்ந்த உபயோகமற்ற பொருள்களை மிகுதியாகச் சாப்பிடும்படி நேரிடுவதால் அந்தக்காலத்தில் சீதபேதி எவ்வளவு அடிக்கடி வருகிறதென்பதை நாம் முன்னமே பார்த்திருக்கிறோம். இந்த வியாதிகளில் காய்ச்சல் மிகத்தெளிவான குறி அல்ல. ஆனால் இந்தவியாதியடைந்த பிராணி வரவர மெலிந்து எலும்பு எண்ணும்படி இளைத்துவிடும்; அதின் பின்கால்கள் அடிக்கடி வடிகிற இளகிய மலத்தினால் அசுத்தமாகி

விடும். தோல் சரசரப்பாய் முறைத்துச் சுகவீனமாக வும், தொடுவதற்கு வறட்சியாகவும் இருக்கும்; சில வேளைகளில் பிராணி துன்பத்தினல் கீழேபடுத்துக்கிடக் கும்; அசுத்தமாய்க் கட்டிபிடித்துத் துர்நாற்றம் வீசும் மலத்தை வெளியாக்கும்போது அதன் முதுகை வில்லைப் போல வளைத்துப் பல்லை நெறநெறவென்று கடித்துப் பெ ருமூச்சுவிடும்; தோலின்மேல் பேன்களும், அவைகளை யொத்த மற்றச் செந்துக்களும் கூடும். பிராணியானது வரவர இளைத்து மிகுந்த நிர்ப்பாக்கியமான நிலைமையில் சாகும்.

பிரயோகம். முதலில் இரண்டரை ஆழாக்குச் சிற்று மணக்கெண்ணெயில் காலேமாகாணி ரூபாயெடை அபின் கலந்து கொடுக்கவும். அபின் கிடைக்கவில்லையானல் அதற்குப்பதிலாக ஒன்றேகால் ரூபாயெடை கஞ்சா இலை ப்பொடியைக் கொடுக்கலாம். பின்பு சீமைச்சுண்ணும்பு, நிலவேம்புப்பொடி, சர்க்கரை இவைகள் ஒவ்வொன்றும் ஒன்றேகால் ரூபாயெடையும், பெருங்காயம் அரையே யரைக்கால் ரூபாயெடையும் சேர்த்துக்கொடுக்கவும். வியாதி வருவதற்குமுன் கொடுத்துவந்த ஆகாரங்களைப் பூரணமாக விலக்கி வேறு ஆகாரங்கள் கொடுக்கவேண் டும்.

காமாலை (Jaundice.) கால்நடைகளுக்கு அடிக்கடி சம்பவிக்கிறது. காய்ச்சலினுலும், கண், மூக்கு, வாய் இவைகளிலுள்ள சளிச்சவ்வு மிகுந்த மஞ்சள் நிறமாக இருப்பதினுலும், மூத்திரமும் தேகமும் இருண்ட மஞ் சள் வருணமாக இருப்பதினுலும் இவ்வியாதியைத் தெரி ந்துகொள்ளலாம். இது அபூர்வமாகத்தான் மரணத்தை உண்டுபண்ணுகிறது.

பிரயோகம். பலமான பேதி மருந்துகொடுத்து நன் ருகப் பேதிபோகும்படி செய்யவும். பிராணியின் வலது

பக்கத்தில் நாசியிருக்குந்தானத்துக்குமேல் கடுகுப்பற்றுப் போடவும். இது செய்வதுமல்லாமல், பின்வரும் மருந்தைத் தினந்தோறும் மூன்றுபோது கொடுக்கவும்.

நவச்சாரம் இரண்டரை ரூபாயெடை.
நிலவேம்பு இரண்டரை ரூபாயெடை.
கஞ்சி ஒரு பட்டினம்படி.

குதிரைச்சயமும் பார்சியும் (Glanders and Farcy.) குதிரைகள், கழுதைகள், கோவேறு கழுதைகள் இவைகளுக்கும் மற்றப்பிராணிகளுக்கும் வரும் அபாயமான ஒரு வியாதியின் இரண்டு ரூபங்கள். மூக்கில் புண்களிருப்பதினாலும், புண்பட்ட மூக்கிலிருந்து ஒட்டிக்கொள்ளுந்தன்மையுடைய ஒருவகையான நீர்வடிவதினாலும், இரண்டுதாடைகளின் மத்தியிலும் கடினமான வீக்கமிருப்பதினாலும் குதிரைச்சயத்தைத் தெரிந்துகொள்ளலாம். தோல் ரணங்களையுடையதாகி, கால் மிகவும் வீங்கியிருந்தால் பார்சியிருக்கிறதென்று தெரியலாம். ஒரேகாலத்தில் மேலே சொல்லிய வியாதியின் இரண்டு ரூபமான இவைகளின் குணங்களும் இருக்கலாம். சுவாசாசயங்களும் சிலந்திகளுக்கு இருப்பிடமாக இருக்கலாம். தோலிலாவது மூக்கிலாவது உள்ள புண்களிலிருந்து வடியும் நீரினால் இவ்வியாதி மற்றக் குதிரைகளையும் பற்றலாம். இந்த நீரிற்கொஞ்சம் கண் அல்லது மூக்கின் உள்ளிருக்குந் தோலின்மேலாவது, திறந்த புண்ணின்மேலாவது விழுந்து அது காரணமாக அநேக மனிதர் இறந்திருக்கிறார்கள். இந்தக் காரணத்தினால் உண்டாகும் மரணம் பயங்கரமாகவும், வருத்தமாகவும் இருக்கும்.

பிரயோகம். இவ்வியாதியைக் குணப்படுத்தும் மருந்து யாதொன்றுமில்லை. இவ்வியாதிக்குப் பிரயோகஞ்செய்ய எத்தனிக்கவாவது, பிறர் எத்தனிக்க இடங்கொடுக்கவாவது கூடாது; ஏனென்னில், அப்படிச்செய்வதில் நாம் வியாதி

விஷத்துக்கிடங்கொடுத்து அது பரவ்[illegible]படி செய்கிறது. இவ்வியாதியினால் பீடிக்கப்பட்ட [illegible]ராணிகள் காலதாமதமில்லாமல் கொல்லப்படவேண்டும்.

**கொப்பூழ் நோவு (Nave ill.)** கொப்பூழ்க்கொடி கன்றினிடத்திலிருந்து தாயினிடம்போய்ச் சிக்குதலினாலாவது, பிறக்கும்போது வயிற்றுக்கு மிகச்சமீபத்தில் அற்றுப்போவதினாலாவது, மற்றக் கன்றுகள் சப்புதலினாலாவது, கன்று பயங்கரமான சயதக (Tuberculosis) ரோகினால் பீடிக்கப்பட்டிருப்பதினாலாவது உண்டாகும்.

**பிரயோகம்.** தாய்க்குக் கொஞ்சம் பேதி உப்பு (Magnesium Sulphate) கொடுத்தால் (அதன் பாலைக் குடிக்கும்) கன்றுக்குப் பேதியுண்டாகும். கொப்பூழை வெந்நீரில் நனைத்துச் சினக்காரத்தை மேற்பிரயோகமாக உபயோகிக்கவேண்டும்.

**கோமாரி அல்லது கோவைசூரி (Cow-pox.)** மிகச்சாந்தமான வியாதி; தன்மையில் ஆட்டுவைசூரியை ஒத்தது. இவ்வியாதியில் வைசூரிப்பருக்கள் பாமடியிலும், முலைக்காம்பிலும் உண்டாகித் தண்ணீர்போன்ற ஒருவகை லேசான நீரைக்கொடுக்கும். இந்த நீரை மனுஷருக்கு அம்மை குத்துவதில் உபயோகப்படுத்தினால் பின்பு வைசூரி வராமல் தடுக்கும்.

**பிரயோகம்.** அநேகமாய் இவ்வியாதிக்கு யாதொரு பிரயோகமும் ஆவசியகமில்லை; சாதாரணமாய் மூன்று வாரம் அல்லது ஒரு மாதத்தில் குணமாகிவிடும்: இருபது ரூபாயெடை பேதியுப்பு கொடுக்கலாம். வைசூரிப் பருக்களல்லது புண்களைச் சுத்தமாக வைக்கவேண்டும். புண்களுண்டானால், ஆட்டுவைசூரிப்புண்களுக்குச் சொல்லியிருக்கிற பிரயோகத்தைச் செய்யவும்.

சயரோகம் (Tuberculosis.) மெதுவாக விருத்தியாகின்ற மிகுந்த பிராணாபாயமான ஒரு கொடிய வியாதி. இது சுவாசாசயத்தையாவது குடலையாவது; தேகத்தின் மற்ற எந்தப்பாகத்தையாவது பீடிக்கும்போது அந்த அந்தக் கருவிகளுக்குத் தக்கபடி பல ரூபமுடையதாகும் விசேஷமுடையது. சுவாசாசயம், குடல் முதலிய கருவிகள் வியாதியான சலம் திரண்டிருப்பதற்கு இடமாகவிருப்பதுடன், ஈரமாக அல்லது உலர்ந்திருக்கும் நிலைமைக்கேற்றபடி பாலாடை அல்லது பாற்கட்டிபோலத் தோற்றுகிறது. வியாதி மெதுவாக விருத்தியாகிறது; மற்ற வியாதிகளென்று மயங்கப்படக்கூடியதாகவிருக்கிறது. சீக்கிரமாகத் தேகம் இளைத்துவிடுதலை எப்போதும் பார்க்கலாம்; வருத்தப்படுத்தும் இருமலும் சாதாரணமாகவிருக்கும். இவ்வியாதியினால் தாக்கப்பட்ட மிருகங்களின் பாலையாவது, மாமிசத்தையாவது சாப்பிடுவதினால் மனிதரும் இவ்வியாதியைப் பெறலாம். மாடுகள்தான் இவ்வியாதியினால் மிகவும் அதிகமாகப் பீடிக்கப்படுவதற்கு உரியவைகளாயிருந்தாலும், மற்ற வகைப் பிராணிகளும் இதனால் அடிக்கடி துன்பமடைகின்றன. நன்றாக வளர்க்கப்பட்ட மாடுகள் மிகச் சாதாரணமாக இவ்வியாதியினால் சாகின்றன. இவ்வியாதி அநேக கன்றுகளைக் கொல்லுகிறது. சில சமயங்களில் கழிச்சல்மாத்திரம் இவ்வியாதியின் குணமாக இருக்கும்.

பிரயோகம். இவ்வியாதியைக் குணப்படுத்தும் மருந்து இதுவரை காணப்படவில்லை. நல்ல சத்துள்ள ஆகாரத்தினாலும், பலவிருத்தி மருந்துகளினாலும் பிராணியைத் தளர்ந்துபோகாதபடி ஆதரிக்கலாம். ஒருவருடைய மாடுகளிலிருந்து இவ்வியாதியை விலக்குவதற்கு மிகச் சிலாக்கியமான மார்க்கம் நல்ல சுகமுள்ள வேறு காளைகளைக் கொண்டுவந்து கன்றுகளுண்டாகும்படி செய்வதே.

**ஜலபயரோகம்** அல்லது நாய்வெறி (Rabies or "Madness" of the dog.) சென்னபட்டினத்திலும் அதைச்சுற்றியும் அதிகமாகப் பரவியிருக்கிறதென்று அங்குள்ள வைத்திய சாலைகளில் இவ்வியாதியினால் அடிக்கடி மனிதர் இறப்பதினால் நாம் தெளிவாகத் தெரிகிறோம். இதைக்கண்டுபிடிப்பது அடிக்கடி வருத்தமாக முடிகிறது. வெறிநாய் இயற்கையான வழக்கத்துக்கு விரோதமாக ஒரு வகையாக நடந்துகொள்ளும்; தனித்துத்திரிவதற்குப் பிரியமாகவிருக்கும்; எதிரேவரும் எந்த மனிதனையாவது, பிராணியையாவதுகடிக்கும் சுபாவம் அதிகமாகவிருக்கும். குலைப்பது ஒரு மாதிரியாகவும், அந்த நாயோடு பழகிய யாரும் வியாதியிருக்கிறதென்று கண்டுபிடிக்கத்தக்கதாகவுமிருக்கும். வாயிலிருந்து உமிழ்நீர் ஒழுகிக்கொண்டிருக்கும்; கண் மிகவும் சிவப்பாகவிருக்கும். சிலகாலஞ் சென்றபிறகு பின்னங்கால்கள் திமிர்வாதமடைந்து மரணஞ் சீக்கிரமாகச் சம்பவிக்கிறது. வெறிநாயின் உமிழ்நீர் புண்ணிற்புகுந்தால் அதின் வியாதியை உண்டுபண்ணுகிறபடியால், அதின் கடி மிகவும் அபாயமானது.

**பிரயோகம்.** கடிபட்டவுடனே புண்ணை நன்றாக உறிஞ்சவேண்டும்; கடிபட்ட பாகம் கால் அல்லது கையாகவிருந்தால் அந்த இடத்தைத் துணியினால் இறுக்கமாகக் கட்டவேண்டும். சிவக்கச்சுட்ட இரும்பையாவது, காடிக்காரம் (Lunar caustic or Silver nitrate), அல்லது பதாசிக்காரம் (Caustic potash) போன்ற காரங்களையாவது கடிபட்ட காயத்தின் ஒவ்வொரு பாகத்திலும் தாராளமாய் உபயோகிக்கவேண்டும்.

தனியாகத்திரியும் நாய்கள் இவ்வியாதி பரவுவதற்கு முக்கிய காரணமாக இருப்பதினாலும், அதனால் மனிதருக்கு மிகவும் அபாயமானவைகளா யிருப்பதினாலும்,

அவைகளைக் கொன்றுவிடவேண்டும். மிகுந்த பிரதான மான பட்டணங்களிலிருக்கும் ஒழுங்குகளினுல் போலீசாராலாவது, மற்றக்காரியஸ்தர்களாலாவது இந்த ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறது.

சுவாசாசய அழற்சி. (Inflammation of the lungs.) இது குளிர்ந்தகாற்றுக்கெதிர்ப்படுதலினுல் உண்டாகிறது. வேலைசெய்யுங் கால்நடைகளிலும், அளவுக்கு மிஞ்சி ஓட்டப்பட்ட பிராணிகளிலும் மிகச்சாதாரணமாகச் சம்பவிக்கிறது. அதிக வருத்தத்தோடும் *கேருதலோடும் சுவாசிப்பதினுலும், மிகுந்த காய்ச்சலினுலும் இந்த வியாதியைத் தெரிந்துகொள்ளலாம். மேலும், பிராணி துன்பப்பட்டு இருமிக்கொண்டு படுக்கையிலே கிடக்கும்; எழுந்து நிற்கமாட்டாது. சுவாசக்கருவிகளின் அழற்சிகளில் பல வகைகள் உண்டு; ஆனுல், அவைகளைப் பகுத்தறிவது கால்நடைக்காரருக்கு முக்கியமல்ல. ஆயினும், கால்நடைகளுடைய (ஒரு பிராணியிலிருந்து மற்ருெரு பிராணியைப்) பற்றும் மிக உக்கிரமான வியாதிகளில் ஒன்ருன "சுவாசாசய வியாதி" (Lung disease) சாதாரணமான சுவாசாசயத்தின் அழற்சியை மிகவும் ஒத்திருக்கும் விஷயத்தைக் கால்நடைக்குடையவர்கள் ஞாபகத்தில் வைக்கவேண்டும். இந்த இரண்டு வியாதிகளை எவ்விதம் பகுத்தறிகிறதென்பதைப்பற்றிப் பின்பு காட்டுவேன்.

பிரயோகம். பிராணியைக் கொஞ்சம் வெப்பமான ஒதுக்கிடத்தில் வைக்கவேண்டும். விலாப்பக்கங்களை வெந்நீரினுல் (கொஞ்சநேரம்) குளிப்பாட்டிப் பின்பு காய்ந்த துணியினுல் நன்ருய்த் துடைத்துக் குளிர்பிடியாதபடி பிராணியின் தேகத்தை வேருெரு துணியினுல் மூட

* கேருதல்.—நெஞ்சிற் சளியிருப்பதினுல் சுவாசிக்கும்போது ஒரு வகைச் சத்தம் உண்டாகுதல்.

வேண்டும். இவ்விதம் வெந்நீர்ப்பிரயோகஞ் செய்வதற்குப் பதிலாகக் கடுகுப்பற்றை உபயோகிக்கலாம்.

வெடியுப்பு ஒன்றேகால் ரூபாயெடை.
* கருப்பூரம் அரையேயரைக்கால் ரூபாயெடை.
பிளருத்தூள் இரண்டரை ரூபாயெடை.
சுக்குப்பொடி ஒன்றேகால் ரூபாயெடை.
நிலவேம்புச்சூரணம் ஒன்றேகால் ரூபாயெடை.

இவைகளைத் தினந்தோறுங் கஞ்சியில் போட்டுக் கொடுக்கவும்.

**திமிர்வாதம். (Paralysis.)** இவ்வியாதியினால்பிராணியானது தன் கால்களில் அல்லது தேகத்தின் மற்றச் சில பாகத்தில் அசையுஞ் சக்தியையாவது, உணருஞ் சக்தியையாவது பூரணமாக இழந்துவிட்டாலும், அதற்குச் சரியான அறிவு இருக்கும். இந்தக் குணத்தினால் திமிர்வாதத்துக்கும் வெயில்நோய்க்கும் உள்ள வித்தியாசந்தெரியும். சாதாரணமாகப் பின்னங்கால்கள்தான் சக்தியை இழக்கின்றன. இடுப்புக்கு ஏதாயினும் தீங்கு நேரிடுவதினாலும், மடித்துப்போன தீனியினாலும், மற்ற நஞ்சுகளினாலும் இவ்வியாதியுண்டாகும்.

**பிரயோகம்.** குடல் சுத்தமாகும்படி பேதிமருந்து கொடுக்கவும். பின்பு நெடுங்காலம் அன்னபேதி காலேமாகாணி ரூபாயெடையும், நிலவேம்பு இரண்டரை ரூபாயெடையும், உப்பு ஒன்றேகால் ரூபாயெடையும் தினந்தோறுங்கொடுத்து வரவும்.

**நாக்கு அழற்சி. (Inflammation of the tongue.)** இது முள்ளுள்ள பூண்டுகளைத் தின்பதினால் நாக்கு கிழிப[illegible]

---

* கருப்பூரம் சூடனென்றுஞ்சொல்லப்படும்.

வதுபோன்ற காயங்களினல் அடிக்கடி உண்டாகின்றது. காய்ச்சல் உண்டாகும்; ஏராளமாக வாயிலிருந்து உமிழ்நீர் வடியும்; நோவிருக்கிற இடம் சிவந்தும் வீங்கியும் இருக்கும்; நாக்கு வாயிலிருந்து தொங்கும்; தீனி தின்னமுடியாது; மிகுந்ததாகமிருந்தும் தண்ணீர் குடிப்பது வருத்தமாகவிருக்கும்.

பிரயோகம். தொண்டையை நன்ருக அடிக்கடி வெந்நீர்விட்டுக் குளிப்பாட்டவும். (வெந்நீர்விட்ட பாகத்தை நன்ருய் அப்போதைக்கப்போது துடைத்துக் குளிர்ந்த காற்றுக்கெதிர்ப்படாதபடி செய்யவும்.) நாற்பது ரூபாயெடை பேதியுப்பு (Sulphate of magnesia) ம், இரண்டரை ரூபாயெடை சோம்புப்பொடியும், இரண்டரை ஆழாக்குத்தண்ணீரில் மிகுந்த கவனத்தோடு கொடுக்கவும். தினந்தோறும் ஒன்றேகால் ரூபாயெடை வெடியுப்பை ஒரு சட்டி தண்ணீரில் போட்டு அழற்சி தணியும்வரை கொடுத்துவரவும். தடிப்பில்லாத கஞ்சி கொடுத்துப் போஷிக்கவும்.

பிரசவசன்னி. (Dropping after Calving.) இது நன்ருக வளர்க்கப்பெற்று முக்கியமாய் மிகுதியாகப் பால் கொடுக்கும்பசுக்களுக்கு ஒருவகைத் திமிர்வாதத்தையும், மிகுந்தபலவீனத்தையும் உண்டாக்கிக்கொண்டுவரும் வியாதி. இதுசாதாரணமாகமூன்ருவது அல்லது நாலாவது ஈற்றில் உண்டாகிறது. அநேக வியாதிகளை இந்த வியாதி என்று மயங்குகிருர்கள். இந்த வியாதி வெளியேயிருந்து கொண்டுவரப்பட்ட பசுக்கள் தவிர, இந்தியாவிலுள்ள மற்றப்பசுக்களில் அபூர்வமாகத்தான் காணப்படுகிறது.

பிரயோகம். இந்த வியாதி வந்த அவசரங்களில் உற்சாகஞ்செய்யும் மருந்துகளை அடிக்கடி மட்டாகக்கொடுத்துப் பசுவைக் கவனமாகப்போஷிக்கவேண்டும்.

புப்புசபரிபுப்புச அழற்சி (Pleuro-pneumonia.) என்னும் வியாதி மாட்டின் சுவாசப்பையைப் பற்றிய வியாதிகளில் மிகுந்த கொரேமும், பிராணாபாயமுமானதாகையால், சுவாசாசய வியாதி (Lung disease) என்று சாதாரணமாகச்சொல்லப்படுகிறது. இவ்வியாதி அடைப்பான், வெக்கை, வாய்நோய் கால்நோய் என்னும் வியாதிகளைப் போல அடிக்கடி இந்தியாவில் உண்டாகிறதில்லை. இவ்வியாதியைச் சுவாசப்பை அழற்சி அல்லது சாதாரணமான இளைப்பை அழற்சி என்று மயங்குகிறதுமுண்டு. ஆனால், நன்றாக அவதானித்துப்பார்க்கும் அநுபவக்காரரால் பிராணி உயிரோடிருக்கும்போது இவ்வியாதி திட்டமாகக் கண்டுபிடித்துத் தீர்மானிக்கப்படக்கூடியது. சுவாசாசயத்தின் சாதாரண அழற்சிக்குரிய சகல குணங்களும் இருப்பதோடு அசாதாரணமான ஒருவகை இருமலும் இருக்கும்; மேலும், பிராணி சுவாசிக்கும்போது ஒருவகையான உறுமற் சத்தங்கேட்கும். சுவாசம் மிகவும் தடைபட்டு நடக்கும். வியாதிக்குணங்கள் மெதுவாக விருத்தியாகிச் சாதாரணமாக மரணத்தையுண்டாக்கும். பிரேதம் திறக்கப்பட்டபோது வழக்கமாக ஒருசுவாசப்பை மாத்திரம் வியாதிப்பட்டு வீங்கிப் பச்சை நிறங்கொண்டு சுகவீனமான ஒருவகை நாற்றமுடையதாக இருக்கும்; அது வெட்டப்பட்டபோது அநேக வருணமுடைய சலவைக்கல்போலவிருக்கும். சுவாசப்பையை நெஞ்சின் சுவரோடு கட்டியிருக்குங் கட்டுகள் வைக்கோல் வருணமாக இருக்கும். நெஞ்சினுள் ஒருவகையான நீர் மிகுதியாகக் கட்டியிருக்கும். இவ்வியாதி மிகவும் மெதுவாக விருத்தியாகும்; பிராணிகளை நெடுங்காலமாகத் தாக்கிக்கொண்டிருக்கும். இது மிகவும் அதிகச் சஞ்சாரமுள்ள வியாதி; ஆனால், நமக்குத் தெரிந்தவரை இவ்வியாதி மாடுகளையும், எருமைகளையும், மான்களையும் மாத்திரம் பற்றுகிறது.

பிரயோகம். பிராணியின் பலம் தளராதபடி சாரா யம்போன்ற உற்சாகமுண்டாக்கும் மருந்துகளினாலும், நல்ல ஆகாரத்தினாலும் ஆதரிப்பதுமல்லாமல் பின்வரும் மருந்தைக் கொடுக்கவும்.

கருப்பூரம் அரையேயரைக்கால் ரூபாயெடை
சுக்குப்பொடி இரண்டரை ரூபாயெடை.
சோம்புப்பொடி இரண்டரை ரூபாயெடை.
பட்டைச்சாராயம் ஒன்றேகால் ஆழாக்கு.
கஞ்சி ஒருபட்டினம்படி.

இவைகளைக் கொடுக்குமுன் நன்றாய்க் கலக்கும்படி செய்யவேண்டும். விலாப்பக்கங்களில் கடுகுப்பற்றுப்போடவும்; போட்டு ஒருமணி நேரமானபின் பற்றைவெந்நீரினால் கழுவி, உடனே துணிகொண்டு நன்றாய்த்துடைத்துக் காயச்செய்வது முக்கியமானது. முதற்பற்றினால் குணம் உண்டாகவில்லையானால் மறுநாளும் மேற்சொல்லியபடி பற்றுப்போடவேண்டும்.

முதுகன்றிருமல் (Hoose or Husk.) இது மிகவும் முதிர்ந்த கன்றுகளுக்கு வரும். இது சுவாசக்குழலில் ஒருவகைக் கிருமிகள் திரண்டிருந்து பிராணியைப் பலவீனப்படுத்துவதினால் உண்டாகும் சுவாசாசய அழற்சி. இதில் மிகத்தொந்தரவான இருமல் இருக்கும். கன்றுகள் அநேகம் ஒருகாலத்திலேயே இவ்வியாதியினால் பிடிக்கப்படும். அவைகளிற் சில கன்றுகள் தேக இளைப்பினாலேயே செத்துப்போம்.

பிரயோகம். இந்த வியாதியில், மற்றவந்தை வியாதிகளிற் செய்யவேண்டியதுபோல, நோயுற்ற பிராணிகளைக் கவனமாகப்போஷித்து அவைகளின் தேகபலத்தைக் கூடிய சகலவகைகளினாலும் ஆதரித்துக் காப்பாற்றவேண்டும். சுவாசாசயத்திலுள்ள கிருமிகளுக்கு நஞ்சூட்டும்

படி வெற்றேரிநேரி ஸர்ஜன்கள் (Veterinary Surgeons) கன்றுகளைக் குளோரின் (Chlorine) என்ற நச்சுவாயுவைச் சுவாசிக்கும்படி செய்வார்கள்; ஆனால், இந்தப்பிரயோகமானது மிகவும் அபாயமானதாகையால் சாதாரணமாகக் கால்நடை வைத்திருப்பவர்கள் செய்யக்கூடாது.

முலை அழற்சி (Garget.) பசுவின் முலையின் அழற்சி அல்லது எரிவு. அடி முதலிய காயத்தினாலும், கறவைப் பசுவைக் குளிர்ந்த காற்றுக்காவது பெருமழைக்காவது உட்படும்படி செய்வதினாலும், விலைக்குக்கொடுக்கும் பசுவின்மடி பெரிதாகவும் பால் அதிகமாக இருப்பதாகவுந் தோற்றும்படி அதைப் பால்கறவாமல் விட்டுவைப்பதினாலும் இவ்வியாதியுண்டாகும். இந்த வழக்கம் இங்கிலாந்தில் இருப்பதுபோல இங்கு சாதாரணமாக இல்லை. (வியாதியின் குணம்.) பசு காய்ச்சலுள்ளதாகவிருக்கும்; மடி தொடப்பட்டால் வலியெடுப்பதினாலும், அழுத்தப்பட்டால் நோவுண்டாவதினாலும் நடக்கும்போது பின்கால் இரண்டையும் விரிவாக வைத்துநடக்கும். மடி வீங்கிக் கடினமாகவிருக்கும்; பால் கொடாது; கொடுத்தால் பால் இரத்தமும் சீழும் கலந்திருக்கும்.

பிரயோகம். நாற்பது ரூபாயெடை பேதியுப்பும் (Sulphate of Magnesia), இரண்டரை ரூபாயெடை சுக்குப்பொடியும், இரண்டரை ஆழாக்குத் தண்ணீரில் பசுவுக்குக் கொடுக்கவும். பிராணியின் முலையை வெந்நீரில் (கொஞ்சநேரம்) முழுகவைக்கவும். (பின்பு அதையும் அதைச்சுற்றியுள்ள பாகத்தையும் நன்றாய்க் காய்ந்த துணியினால் துடைக்கவும்.) தினந்தோறும் ஒன்றேகால் ரூபாயெடை வெடியுப்பை ஒரு சட்டி தண்ணீரில் போட்டு அழற்சி தணியும்வரை பிராணி குடிக்கும்படி செய்துவரவும்.

வந்தைகள் அல்லது சீவசீவிகள் (Parasites.) இவைகள் பிராணிகளாகவிருக்கும், அல்லது தாவரங்களாகவிருக்கும். இவைகள் மற்றப்பிராணிகள் அல்லது தாவரங்களின் உள்ளேயாவது மெலேயாவது வசித்து அவைகளிடத்திலிருந்து தங்களுக்கு வேண்டிய ஆகாரத்தைக் கிரகிக்கும். (வந்தைகள் மற்றத் தாவரசீவன்கள் அல்லது பிராணிசீவன்களின்மேல் சீவித்தலால் சீவசீவிகளென்று சொல்லப்பட்டன.) சொற்ப வந்தைகள் தீங்கு செய்வது அபூர்வம்; ஆனால், அவைகள் மிகுந்து திரளாகவிருந்தால், மிகக்கொடிய வியாதிகளையுண்டுபண்ணலாம். அவைகளால் ஆடுமாடுகளிலுண்டாகும் சிலவியாதிகளைப் பற்றி இங்கு குறிப்பாகச் சொல்லுகிறேன்.

## I. உள்வந்தைகள் (Internal Parasites.)

ஊழ்த்தல்நோய் (Rot.) இது செம்மறியாடுகளில் மிகவும் அடிக்கடி காணப்படுகிறது. இவ்வியாதியையுண்டுபண்ணும் வந்தைகள் ஈரலில் வளர்கின்றன. இவைகள் சிலவேளைகளில் மாடுகளிலும், குதிரைக்குட்டிகளிலும் கூடக்காணப்படுகின்றன. இவைகள் பிராணியை மெலிவாக்கி மரணத்தையுண்டுபண்ணுகின்றன. பிராணி மிகவும் மெலிந்து பலவீனம் அடைகிறது. அதன் கண்களும், வாயும் மிகவும் வெளுத்துப்போகின்றன. அல்லது மஞ்சள் நிறமாகிவிடுகின்றன. ஆட்டின் மயிர் லகுவாயுதிரக்கூடியதாயிருக்கும்; அதன் வயிற்றிலாவது, தொண்டையிலாவது, காலிலாவது அதைப்பு (Dropsy) இருக்கும். நோயடைந்த பிராணி மெலிந்து எலும்புக்கூடு போலாகியபின்புதான் சாகிறது. மிகப்பள்ளமான குளத்து நிலங்களிலும், நூதனமாக வெள்ளம் வந்து வடிந்த இடங்களிலும் மேயும் ஆட்டுமந்தைகளில் இவ்வியாதி மிகச்சாதாரணமாகவிருக்கும்.

ஜாதுகள் (Hydatids.) தண்ணீர் நிறைந்த சலப்பை போன்ற பிராணிகள். இவைகள் இந்தியாவிலுள்ள கால் நடைகள் ஏறக்குறைய எல்லாவற்றினுடைய ஈரலிலும் சுவாசாசயத்திலும் காணப்படலாம். சில வேளைகளில் ஈரலும் சுவாசாசயமுந் தங்கள் தொழிலைச் சரியாகச்செய்ய முடியாதபடி அவைகள் அவ்வளவு மிகுதியாகவிருக்கின்றன; ஒரு பெரிய ஜாது வெடித்து அதிலுள்ள சலம் வயிற்றினுள்ளாவது, மார்பினுள்ளாவது பெருகுவதினால் மரணம் நேரிடுகிறது. ஜாது அடிக்கடி காணப்பட்டபோதிலும், அசௌக்கியமுண்டாகும்படி அவ்வளவு பெரிதாகவிருக்கிறதில்லை. ஒரு சுகமான பிராணி கொல்லப்பட்டபோது அதினுள்ளே அநேக ஜாதுகளிருப்பதைப் பார்க்கலாம். ஆகையால், அவைகள் அபூர்வமாகத்தான் தீங்குசெய்யத்தக்கவைகளாகின்றன. அவைகளிருப்பதினால் மாமிசம் உதவாதென்று தள்ளக்கூடாது. சலப்பைபோன்ற ஜாதுகள் இருக்கும் பாகங்களை ஒருக்காலும் நாய்களுக்குத் தின்னக்கொடுக்கக்கூடாது; அவைகளை எரித்துச் சாம்பலாக்கிப்போட்டவேண்டும்.

தலைச்சுழற்சி (Gid or Turnsick.) ஒரு வகையான வந்தை மூளையிலிருப்பதினால் உண்டாகும் வியாதி. இது மிகச் சாதாரணமாக ஆடுகளில் உண்டாகும்; ஆனால் சிலவேளைகளில் மாடுகளிலும் காணப்படும். இவ்வியாதியின் முக்கியமான குணங்கள் வெறித்த பார்வையும், ஒரே திசையில் இடைவிடாமல் சுற்றிச்சுற்றி வருதலுந்தான். இவ்விதமாக வியாதியடைந்த பிராணிகளின் தலையை நாய்க்குத் தின்னக்கொடுக்கக்கூடாது.

தேகத்தின் உள்ளே வாழும் வந்தைகளுக்குச்செய்யும் போதுப்பிரயோகம். கறியுப்பை யூகமாக உபயோகிப்பதனால் இந்த வந்தைகளைத் தொலைத்துச் சௌக்கியம் செய்யலாம்; ஆனால், அப்படிச் செய்வதைப்பார்க்கிலும், தர

யுப்பின் உபயோகத்தினுலேயே இவைகளை வராமல் தடுப்பது லேசான்து. பிராணி பலவீனமாகவிருந்தால் காலேமாகாணி ரூபாயெடை அன்னபேதியும், அரையேயுரைக்கால் ரூபாயெடை சுக்குப்பொடியும், ஒன்றேகால் ரூபாயெடை நிலவேம்புப்பொடியும், ஒன்றேகால் ரூபாயெடை கறியுப்புப்பொடியும் கலந்து பிராணிகளுக்குச் சரியான பலம் வரும் வரையும் தினந்தோறும் கொடுக்கவும். பின்பு உப்பைமாத்திரம் மேற்சொல்லிய அளவாக ஒவ்வொரு நாளும் ஆகாரத்தோடு கொடுத்துவரவும். ஊழ்த்தல்நோயுள்ள ஆடுகள் கொல்லப்பட்டால் அவைகளின் ஈரலை நெருப்பிலாவது, நீரிலாவது வேகவைத்து நாசஞ்செய்துவிடவும். சலப்பைபோன்ற மேலே சொல்லிய் செந்துக்கள் பிராணி சாகுமுன் அபூர்வமாகத்தான் காணப்படுகின்றன. அவைகளிலிருக்கும் ஈரலையும், சுவாசாசயத்தையும் எரித்துவிடவும்; அல்லது நீரில் வேகவைக்கவும். தலைச்சுழற்சி அபூர்வமாகத்தான் சௌக்கியப்படும். இவ்வியாதியினுல் இறந்த பிராணியின் மூளையையும் எரிக்கவாவது, நீரில் வேகவாவது செய்யவும்.

## II. வெளிவந்தைகள் (External Parasites.)

தோலைப்பற்றிய வியாதிகளில் மிகத்தொந்தரவான சில வியாதிகள் தாவரவந்தைகள் அல்லது பிராணி வந்தைகளாலுண்டாகின்றன. அநேகமாய் ஒருவகை நுட்பமான சுளான்களாலேயே உண்டாகின்றன. நுட்பமான பிராணிகள் தோலின் கீழ் துளைசெய்வதினுல் உண்டாகும் வியாதிக்குக் கோடுஞ்சொறி (Mange) என்று பெயர். இதே வியாதி ஆடுகளுக்கு வந்தால் அசறு (Scab) என்று சொல்லப்படும். இவ்விதமான வியாதியையடைந்த பிராணிகள் ரோமத்தையிழந்து மிகுந்த தினவெடுப்பதினுல் அதைத் தணிக்கும்படி சுவர் முதலானவைகளின்மேல்

தங்கள் தேகத்தைத்தேய்த்துச் செந்தோல் வெளிப்படும்படி செய்துவிடுகின்றன. இந்த வியாதி ஒரு ஆட்டிலிருந்து மற்ெருரு ஆட்டுக்கும், ஒரு மாட்டிலிருந்து மற்ெருரு மாட்டுக்கும் போகும்; ஆனல் ஒருமாடு ஒரு ஆட்டிலிருந்து அசறை வாங்கிக்கொள்ளவாவது, ஒரு ஆடு ஒரு மாட்டிலிருந்து கொடுஞ்சொறியை வாங்கிக் கொள்ளவாவது செய்யாது. கொடுஞ்சொறி மிகச் சாதாரணமான தொற்று வியாதிகளில் ஒன்று. இது மரணத்தையுண்டுபண்ணுதானலும், பிராணியைச் செழிக்கவொட்டாமல் மெலிவான ஸ்திதியிலேயே வைத்திருக்கும்.

படர்தேமல் அல்லது பற்று (Ringworm.) தேகத்தில் வட்டமான பொட்டுகள் உண்டாகும்படி உரோமம் உதிரும் வியாதி. இது இளம்பிராணிகளில் மிகுதியாகக்காணப்படும். ஒருவகையான தாவரம் தேகத்தில் வளர்வதினல் உண்டாகிறது. இது அபாயமானதில்லையாகையால் மிக முக்கியமான வியாதியல்ல. இது மனிதனையும், மற்றப்பிராணிகளையும் மிகவும் தொற்றும் வியாதி.

தேகத்தின் வெளியேவாழும் வந்தைகளுக்குச்செய்யும் பொதுப்பிரயோகம். வியாதிப்பட்ட பிராணிகளைச் சுகமான பிராணிகளிலிருந்தும் புறம்பாக விலக்கிவைக்கவும். பிராணி மிகவும் மெலிவாகவிருக்கவில்லையானல் பேதிமருந்து கொடுக்கவும். சவர்க்கார (ஸோப்பு Soap) மும், தண்ணீரும் உபயோகித்து வியாதிப்பட்ட தோலைக்கழுவி நன்றாகத்துடைத்து அதின்மேல் இரண்டரை ரூபாயெடை கந்தகத்தூளை, ஆழாக்கு நல்லெண்ணெய், அல்லது தேகத்தில் அழற்சியுண்டாக்காத வேறு எண்ணெயில் போட்டுக் கலப்பதினலாகும் தைலத்தை நன்றாய்த் தேய்த்துத் தடவவும். தினந்தோறும் இரண்டரை ரூபாயெடை கந்தகம் உள்ளுக்குக் கொடுப்பதினல் நன்மையுண்டாகும்.

வயிற்றுப்பொருமல் அல்லது வயிற்றுப்பசம் ("Hoven" or "Blown.") விழுங்கக்கூடாமையினல் அடிக்கடியுண்டாகிறது. வயிற்றுப்பசமானது அநேக சமயங்களில் பிராணி விழுங்கக்கூடாமலிருப்பதற்கு மிகத்தெளிவான அடையாளமாகவிருக்கிறது. பிராணிகள் தண்ணீர் அதிகமாக உள்ள புதுப்புல்லைத் தின்றபோதாவது, நெடுங்காலம் பட்டினி கிடந்தபின் அதிக ஆகாரத்தை ஆத்திரத்துடன் தின்றபோதாவது வயிற்றுப்பொருமல் உண்டாகும். மெலியச்செய்யும் வியாதியினல் வருந்தும் பிராணிகளிலும், நஞ்சிடப்பட்ட பிராணிகளிலும் இவ்வியாதி காணப்படலாம். ஆகாரம் ஊசிப்போவதில் உண்டாகும் வாயுவினல் ஆடு, மாடு, மற்ற அசைபோடுமிருகங்களின் நாலு இரைப்பைகளில் பெரியது ஊதியிருப்பதுதான் இவ்வியாதி. பிராணி வருத்தத்தோடு சுவாசிக்கும்; (இவ்வியாதியினல் சாகும் சாவு மூச்சுமுட்டுதலினல் நேரிடுகிறது.) மூக்கை உயர்த்தி நீட்டிக்கொண்டு நிற்கும்; கவலையாகப் பார்க்கும்; வயிறு மிகப்பெரிதாகப் புடைத்திருக்கும்; இதைப் பிராணியின் இடது பக்கத்தில் மிகவும் நன்றாகப்பார்க்கலாம்; புடைத்திருக்கிற பாகத்தில் விரற்கணுவினலாவது, கையினலாவது தட்டினல் மத்தளத்தொனிபோலச் சத்தம் உண்டாகும். சிலவேளைகளில் பிராணிகள் அளவுக்கு மிஞ்சிய ஆகாரத்தைப் புசிப்பதினல் வயிறு வீங்குகிறது. இதுவும் வயிற்றுப்பொருமலில் உண்டாகும் குணங்களைப்போன்ற குணங்களையுண்டாக்கும்; ஆனல் இதில் வயிற்றுப்புடைப்பு குறைவாகவும், மத்தளத்தொனியுண்டாகாமலும் இருக்கும்; மேலும், வயிற்றுப்பொருமலிலுள்ள அவ்வளவு வருத்தமிராது; அதைப்போல் அவ்வளவு அடிக்கடிவரவுமாட்டாது. ஆடு மாடுகளுக்குள்ள நாலு இரைப்பைகளில் ஒன்று புஸ்தகத்தில் தாள்கள் இருப்பதுபோல அடுக்காக உள்ள ஒரு சவ்வினல் மூடப்பட்டிருக்கிறது.

இதில் ஆகாரம் லேசாகத்திரண்டு மிகுந்த வருத்தமும் வியாதியும் உண்டாக்கலாம். பிராணி மிகவும் வருத்தப்பட்டு ஒருவகையாக உறுமும்; இதனால் இவ்வியாதியைச் சுவாசாசய வியாதியென்று தப்பாக நினைக்கும்படி நேரிட்டிருக்கிறது. உண்மையாக ஒரு பிராணி சுவாசாசய வியாதியினால் பிடிக்கப்பட்டிருந்தால், அவ்வியாதியின் தன்மையை நீங்கள் கண்டுபிடித்துத் தீர்மானிப்பது வருத்தமாகவிருக்கும். பிரேதத்தைச் சோதனை செய்துபார்த்தால், பிராணி வயிற்றுப்பொருமலினால் இறந்ததா, அல்லது சுவாசாசய வியாதியினால் இறந்ததா என்பதைத் திட்டமாகத் தெரியலாம். பின் சொன்ன வியாதி இருந்ததென்று காணப்பட்டால், அது பரவாமல் தடுப்பதற்கு முன்னெச்சரிக்கையாய்ச் செய்யவேண்டியவைகளைச் செய்யலாம். சுவாசாசய வியாதியின் குணங்களில் இருமலும் உண்டு. ஆனால், வயிற்றைச்சேர்ந்த வியாதியில் இருமல் அபூர்வமாகத்தான் இருக்கும். சில சமயங்களில் கால்நடைகள் ஊசிகளையும், கம்பித்துண்டுகளையும், கடினமானமுள்ளுகளையும், மற்றக் கூர்மையான பதார்த்தங்களையும் விழுங்கிவிடுகின்றன; இவைகள் வயிற்றைத்துளைத்து இரத்தாசயத்திற்சேர்ந்து சுவாசாசயத்தின் அழற்சிக்குரிய குணங்கள்போன்ற குணங்களைக் காட்டி மரணத்தையுண்டாக்குகின்றன.

**பிரயோகம்.** வயிற்றுப்பொருமல் உண்டான மாடு விழுங்கக்கூடாதபடி ஏதாயினும் தொண்டையை அடைத்துக்கொண்டிருக்கிறதாவென்று பார்க்கவும்; (விழுங்கக்கூடாமை அல்லது இரைக்குழலடைப்பைப் பார்க்க.) விழுங்கக்கூடாமையில்லையானால் பத்துருபாயெடை கரிப்பொடியைக் (கஞ்சியில் கலந்து) கொடுக்கவும். பின்பு சுக்குத்தூள், மிளகாய்த்தூள், மிளகுத்தூள் இவைகளைக் கலந்து கொடுக்கவும். இவைகளுடன் சில வேளைகளில்

நாற்பது ரூபாயெடை பேதியுப்பும் (Sulphate of Magnesia) கொடுக்கவேண்டியிருக்கும். இவ்வளவு மருந்து களுங் கலந்து (புட்டினம்படி அரைப்படி தண்ணீரில்) கரைக்கப்பட்ட பானம் இரைப்பையைப்பற்றிய அநேக வியாதிகளுக்குத் தகுதியான மருந்தாகவிருக்கிறது. வயிற்றுப்பொருமலினால் சிலவேளைகளில் மரணம் மிகவுஞ் சொற்பநேரத்தில் சம்பவிக்கிறது. மருந்து கையிலில்லையானால், மாட்டின் இடதுபக்கத்து வயிற்றில் மிகவும் உப்பிப் புடைத்துக்கொண்டிருக்கிற பாகத்தில் ஒரு கத்தியினால் குத்தி வருத்தத்தை நீக்கலாம். குத்தினவுடனே உள்ளேயிருந்து காற்று வேகமாகச் சத்தத்துடன் வெளிப்படும்; பிராணிக்குக் குணமுண்டாகும். குத்தினதினால் உண்டான புண்ணுக்குப் பொதுவாகப் புண்களைக் குணப்படுத்துவதற்காக (௪-வது அதிகாரத்தில்) சொல்லியிருக்கிற பிரயோகத்தைச் செய்யவும். இந்தப் பிரயோகம், மற்றச் சகல பிரயோகமும் பிரயோசனமில்லாமலாவது, செய்ய மார்க்கமில்லாமலாவது போனபோது சாக்கிரதையுடன் யூகமாகச் செய்யப்படவேண்டும்.

**வாதம் (Rheumatism.).** பிராணி மிகுதியாக நொண்டுவது இவ்வியாதிக்கு முக்கியமான அடையாளம். இது அநேகமாய்க் கிழமான பிராணிகளையே பீடிக்கிறது. குளிருக்கும் ஈரத்துக்கும் உட்படுதலே இதற்குக்காரணம். பிராணி அசைவதற்கு மனமில்லாததாகவிருக்கும். பொருத்துகள் வீங்கி மிருந்த உஷ்ணமுள்ளனவைகளாகவிருக்கும்.

**பிரயோகம்.** பேதிமருந்து கொடுக்கவும். காய்ச்சலைத் தணிக்கும்படி குடிக்கிற தண்ணீரில் வெடியுப்பைப்போட்டுக் கொடுக்கவும். [illegible]டான இரண்டரை ஆழாக்கெண்ணெயில் ஏழரை ரூபாயெடை கருப்பூரத்தை இளகிக்கரையும்படி செய்[illegible] சூடிருக்கும்போதே

வீங்கியிருக்கிற பாகங்களில் பூசித் தேய்க்கவும். இதற்குப்பின் தினந்தோறும் இரண்டரை ரூபாயெடை கந்தகத்தை இரண்டுமுறை கொடுத்துவரவும்.

* வாய்நோய் கால்நோய் (Foot and Mouth disease.) மிகத்தொற்றும் சஞ்சாரமுமுள்ளதாய்ச் சகலவகைப் பிராணிகளையும்பற்றும் வியாதி; யானையும், மனிதனுங்கூட இவ்வியாதியினால் துன்பமடைகிறதுண்டு; சாதாரணமாகக் கோழிகளுக்கு இவ்வியாதி மிகப்பிராணபாயமாக முடிகிறது; காய்ச்சலிருக்கும்; வியாதியின்பேரினால் நாம் தெரிகிறபடி வாயிலும், காலிலும் கொப்புளம் உண்டாகும்; ஆனால் சில சமய்ங்களில் வாய்மாத்திரமும், வேறு சில சமயங்களில் கால்மாத்திரமும் இவ்வியாதியினால் பீடிக்கப்படுகிறது. ஒரு கூட்டமான பிராணிகளுக்கு இவ்வியாதி வந்தால் நிச்சயமாக அவைகளில் சில பிராணிகளில் வாயிலும், காலிலும் வியாதியிருப்பது காணப்படும். வாயிலுள்ள கொப்புளங்கள் வெண்மையான சலப்பைகள்போலவிருக்கும்; இக்கொப்புளங்கள் வெடிக்கலாம்; வெடித்தபின் சிவந்ததோல் மீந்திருக்கும்; இக்கொப்புளங்கள் நாக்கு, வாயின் முகடாகிய அண்ணம், ஈறு முதலிய இடங்களில் காணப்படும். கால்வீங்கிப் பிராணி நொண்டி ஆகிறது. குளம்புக்கு மேலேயிருக்கிறதோலைச் சுற்றியும், முக்கியமாய்க்குளம்பின் பிளப்பிலும் கொப்புளங்கள் சீக்கிரமாக உண்டாகும். பிராணி அடிக்கடி காலை உதறும். உமிழ்நீர் வாயிலிருந்து கொடிபோல ஒழுகும். பிராணி ஆகாரந்தேடிச் செல்லக்கூடாதபடி கால் முடமாகவும், சாதாரணமாக ஆகாரத்தைத் தின்னக்கூடாதபடி வாய் புண்ணாகவும் இருப்பதால் தேக சக்தியை வெகு சீக்கிரமாக இழந்து

* வாய்நோய் கால்நோய்.—இது வாய்க்கோமாரியென்றும், கா்க்கோமாரியென்றும் சில இடங்களில் சொல்லப்படுகிறது.

விடும். ஆகையால், அதற்கு மிகுந்த பலத்தைக்கொடுக்கும் ஆகாரம் ஆவசியகமானது. இவ்வியாதியினால் இந்தியாவில் நேரிடும் பிராணசேதம் அநேகமாகப் பட்டினியினால் உண்டாகிறது ; ஏனென்றால், இங்கிலாந்தில் இவ்வியாதியினால் மாடுகள் மிகவும் அபூர்வமாகத்தான் சாகின்றன. இவ்வியாதியடைந்த பிராணி பசுவானால் பால் மிகவும் குறைந்துவிடும். அந்தப்பால் குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட்டால் அது மிகுந்த வயிற்றுக் கழிச்சலையுண்டுபண்ணும்.

பிரயோகம். மலச்சிக்கிருந்தால் சாந்தமான பேதி மருந்து கொடுக்கவும்; ஆனால் பிராணிக்குப் பலவீனமுண்டாகிவிடாதபடி கவலையெடுக்கவேண்டும். காய்ச்சல் தணியும்வரை தினந்தோறும் ஒன்றேகால் ரூபாயெடை வெடியுப்பைத் தண்ணீரில்போட்டுக் குடிக்கும்படி செய்யவும். பிராணியின் பலம் தளர்ந்துபோகாமல் நிலவேம்பு; அன்னபேதிபோன்ற பலவிருத்தி மருந்துகளும், திண்ணமான கஞ்சிபோன்ற மென்மையான ஆகாரங்களும், மிருதுவான இளம்புல்லும் கொடுக்கவும். புண்களுக்குப் பின்வரும் மூன்று கலவை மருந்துகளுள் எதுவாயினுமொன்றைப் பிரயோகஞ்செய்யவும்.

1. சீனக்காரம் ஒருபாகம்.
   தண்ணீர் இருபதுபாகம்.

| | | |
|---|---|---|
| 2. | துத்தம் ஒருபாகம் ... ...<br>தண்ணீர் முப்பதுபாகம் ... | துத்தத்தைக் கொதிநீரில்கரையச்செய்து ஆறியபின்பு உபயோகிக்கவும். |
| 3. | கார்பாலிக்கமிலம் ஒருபாகம்.<br>எண்ணெய் இருபதுபாகம். | தேங்காயெண்ணெயாவது, நல்லெண்ணெயாவது உபயோகிக்கலாம். |

காலையும் மாலையும் புண்களைக்கழுவி மெதுவாய்த் துணி கொண்டு ஒற்றியபின் மருந்துபோடவேண்டும்.

* வெக்கை (Rinderpest.) இத்தேசத்தில் அநேக இடங்களில் அடிக்கடிவருகிற பிராணுபாயமான வியாதி. பிராணி தொற்றுக்குட்பட்டு ஒரு வாரத்துக்குமேல் இரண்டு வாரத்துக்குள்ளாகச் சுகவீனப்படுகிறது. இவ்வியாதி மந்தையில் வெகு சீக்கிரமாகப் பரவுகிறது. ஆரம்பத்தில் இவ்வியாதியின் தன்மையைத்தீர்மானிப்பது வருத்தம்; ஆனால் பின்பு மிகத்தெளிவான குணங்கள் காணப்படும். இவைகளில் ஏறக்குறையக் கீழே விழுந்துவிடும்படியான மிகுந்த பலவீனமும், தேகத்தின் சதைகள் விசேஷமாக இழுத்துச் சுழித்தலும், ஒருவகையான நாற்றத்தோடுங்கூடி ஊடே ஊடே இரத்தங்கலந்த இளகிய மலங் கழியச்செய்யும் கொடிய கழிச்சலும், மூக்கு வாய்களின் சளிச்சவ்விலும், பெண்குறியையும் பால்மடியையும் மூடியிருக்குந்தோல்போன்ற மிருதுவான தோல்களிலும் கொப்புளங்களுண்டாகும். மிகவும் விபரீதமான ஒருவகை இருமலும் சாதாரணமாக இருக்கும். செத்தபின் இரைப்பைகளும், குடல்களும் முக்கியமாக வியாதிப்பட்டிருப்பதாகக் காணப்படும்; இரத்தக்குழல்களிலிருந்து தப்பிய இரத்தத்தின் பெரிய தடிப்புகள் தேகத்தின் பல பாகங்களிலும் காணப்படும். மாடுகள் இவ்வியாதிக்குட்படுகின்றன. ஆடுகள் இவ்வியாதியை மாட்டிலிருந்து பெற்றுக்கொள்ளக்கூடும். இது மிகவும் அதிகமாக (ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியை)ப் பற்றும் தன்மையுள்ள வியாதி. இதைச் சாதாரணமான சீதபேதியென்று மயங்கிவிடலாகாது. சீதபேதியில் வாயில் வெடிப்பு கிடையாது. இவ்வியாதியை

* வெக்கை வியாதி பெரியநோவென்றும், பிச்சைநோவென்றும், இரத்த சுரமென்றும் சொல்லப்படுகிறது.

இதிலும் குறைந்த அபாயமுடைய வாய்நோய் கால்நோயென்று மயங்குதலுங்கூடாது.

பிரயோகம். இவ்வியாதியின் ஆரம்பத்தில் ஏதாயினும் பிரயோசனமுள்ளவைகளாகக் காணப்பட்ட மருந்துகள் அடைப்பான் வியாதியின் பிரயோகத்தில் சொல்லியவைகள்தான். பட்டைச்சாராயமுதலிய உற்சாகஞ்செய்யும் மருந்துகளினாலும், கவனமாகப் போஷிப்பதினாலும் பிராணியின் பலந்தளர்ந்துவிடாதபடி காப்பாற்றவும்; பேதி ஆரம்பித்தபோது காலேமாகாணி ரூபாயெடை மாசக்காய்த்தூளும், அரையே அரைக்கால் ரூபாயெடை சீமைச்சுண்ணாம்புத்தூளும், அரைக்காலேயரைமாகாணி ரூபாயெடை அபினும், அரைப்படி திண்ணமான சுடுகஞ்சியில் கரைத்துப் பேதிநிற்கும் வரை தினம் இரண்டுமுறை கொடுக்கவும்.

**வெயில்நோய் (Sunstroke.)** மிகுந்த வெப்பமான வெயிலில் நெடுநேரம் நிற்பதினால் மூளையில் உண்டாகும் ஒருவகை அழற்சி. நுகத்தில் கழுத்து இறுக்கமாகக் கட்டப்பட்டுக் கோடைகாலத்தில் பகல் முழுமையும் வேலை செய்யும் எருதுகளுக்கு இந்த வியாதி அடிக்கடி சம்பவிக்கிறது. இதன் குணம் பல மாடுகளில் பலவிதமாகவிருக்கும்; ஆனால், பின்வரும் இரண்டு குணங்கள் மிகவும் விசேஷமாகக் குறிக்கப்படவேண்டியவைகள். முரட்டுத்தனமாய் அங்கும் இங்கும் ஓடித்திரியும் பைத்தியமும், சிவந்த கண்களோடு கூடிய கொடுங்காய்ச்சலும் இருக்கும்; அல்லது பிராணி உணர்ச்சியிழந்து கீழே கிடந்து மெதுவாகவும், வருத்தமாகவும் மூச்சு விடும்படி தேக சக்தி முழுமையும் இழந்திருக்கும்.

பிரயோகம். உற்சாகமுண்டாக்கும் பட்டைச்சாராயமும், ஏதாயினும் பேதிமருந்துங்கொடுக்கவும். அடிக்கடி

குளிர்ந்த சலத்தைத் தலையில் பிரயோகிக்கவும்; பிராணியை நல்ல நிழலுள்ள ஒதுக்கிடத்தில் வைக்கவும்.

கால்நடை வைத்திருப்பவர்கள் ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப் பற்றிக்கொள்ளும் வியாதிகளையும், மற்றச் சாதாரண வியாதிகளையும் எப்படிப் பகுத்தறிகிறதென்பதைப்பற்றித் தெளிவாகத் தெரியும்படி நான் இப்போது சொல்லலாம். வியாதி முதற்பிராணியை அல்லது இரண்டாவது பிராணியைத் தாக்கினபோது கால்நடை வைத்திருப்பவர்கள் அது எந்தவகை வியாதியென்று கண்டுபிடிப்பது வருத்தம்; ஆனால், ஒரு மரணம் நேரிட்டபோது பிணத்தைத் திறந்துபார்த்தால் வியாதி சாதாரணமானது, அல்லது தொற்றுனதென்று தீர்மானிக்கலாம். தேகத்தின் எந்தப்பாகத்திலாவது ஏதாவது வியாதியிருப்பதாகக் கண்டுபிடித்தால், தகுந்த எச்சரிக்கை எடுக்கவேண்டும். தொற்று வியாதிகளில் காணப்படும் மேலே சொல்லிய வித்தியாசங்களைக் கண்டுபிடித்தால், வியாதி பரவாமல் தடுப்பதற்குச் செய்யவேண்டிய முக்கியமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். ஆனால், வியாதி சாதாரணமானதென்று தெரிந்துகொண்டால், மற்றப் பிராணிகள் விஷயத்தில் யாதொரு அபாயமுமில்லையென்று மனோசமாதானத்துடனிருக்கலாம். ஒரு பிராணி இறந்தபின் அதைச் சோதித்துப் பார்ப்பதினால் வியாதியின் தன்மை இன்னதென்று தீர்மானமாகத் தெரிந்துகொள்ளுகிறோம். சிலவேளைகளில் வியாதியின் குணங்கள் நம்மை மயங்கும்படி செய்வதினால் நாம் எப்போதும் வியாதி இன்னதென்று திட்டமாகச் சொல்லுதல் கூடாமையாக இருக்கிறது. வியாதி சம்பவிக்கும் வகையைத் தெரிவது உபயோகமானது: தாவணி அல்லது சந்தை சிலநாளுக்குமுன் சமீபத்தில் இருந்திருக்கலாம். தப்பின அந்நியமாடு ஊர்மாடுகள் மத்தியில் வந்து

போயிருக்கலாம். நூதனமாக வாங்கப்பட்ட சில மாடு கள் பழைய மாடுகளோடு நிறுத்தப்பட்டிருக்கலாம். இந் தவகைகளினுல் வியாதி ஒரு கிராமத்தில் கொண்டுவரப் பட்டிருக்கலாம். குறைந்த தீவனம் பெற்றுக்கொண்டிரு ந்த மாடுகளில் அநேக மாடுகள் மழை ஆரம்பத்தில் திடீ ரென்று திரளாக உண்டாகும் புல்லை அதிகமாகத் தின் பதினுல் மரணமடைகின்றன. இந்த மரணத்துக்குக் கா ரணம் அநேகமாய் வயிற்றுப்பொருமலாக இருக்கவேண் டும். (மேலே பார்க்க.) நீடித்த வறண்ட கோடைகாலத் துக்குப்பின் இரத்தங்கலந்த மலங்கழியும் கழிச்சலினுல் அநேக பிராணிகளிறந்தால் வியாதி அநேகமாய்ச் சாதா ரணமான சீதபேதியாகவிருக்கலாம். எந்தவகை வியாதி யினுலாவது சடுதி மரணம் நேரிடலாம். மரணம் சம்ப வித்தவின் பிரேதத்தைச் சோதித்துப்பார்த்தல் எப்பொழுதும் ஆவசியகமானது.

ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப் பற் றிக்கொள்ளும் வியாதிகள் விஷயத்தில் செய்யவேண்டிய தடுக்கும் பிரயோகம்.

(1) நீங்கள் (ஒவ்வொருவரும்) தப்பி அலையும் மற்ற மாடுகள் ஒன்றும் உங்கள் மாடுகளுடன் சேராத படி தடுக்கவேண்டும்.

(2) நூதனமாக விலைக்கு வாங்கப்பட்டாவது, நெடுந் தூரம் புதிதாகப் பிரயாணஞ்செய்தாவது, பிர யாணத்தில், அல்லது சந்தையில், அல்லது தா வணியில் அந்நிய மாடுகளுடன் நின்றிருப்பதா கத் தெரியப்பட்டாவது இருக்கிற மாடுகளை மற்ற மாடுகளிலிருந்தும் புறம்பாக வைக்கவேண்டும்.

(3) எந்தப் பிராணியாவது எதாயினும் வியாதியடை ந்திருப்பதாகக் குணங்காட்டியபோதெல்லாம்,

அதை மற்றச் சுகமாகவுள்ள பிராணிகளினின் றும் பிரித்துப் பிரத்தியேகமாக வைத்து அது குடிக்குந் தண்ணீரை அதிருக்குமிடத்திற்குக் கொண்டுபோய்க் கொடுக்கவேண்டும்.

(4) எந்தப் பிராணியாவது (ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப்) பற்றிக்கொள்ளுந்தன்மையுடைய வியாதியினால் வருந்துவதாகக் கண்டால், அதை உடனே மற்றப் பிராணிகளைவிட்டுப்பிரித்துப் போலீசாருக்கும், ஜில்லாக் கால்நடை இன்ஸ்பெக்டருக்கும் அறிவித்து அதை மற்ற எல்லாப் பிராணிகளிடத்திலுமிருந்து குறைந்தபட்சம் நூறுகஜ தூரத்திலாவது திட்டமாகப் பிரத்தியேகப்படுத்தி வைக்கவேண்டும். அதின் படுக்கை, அதன்மேலேபோடும் மற்றச் சாமான்கள், அதின் மலம், அதின் தேகத்திற் பட்டுக்கொண்டிருந்த மற்ற வஸ்துக்கள் இவைகளையெல்லாம் எரித்துப்போடவேண்டும். வியாதிப்பட்ட பிராணிகளை ஒருவர் அல்லது அதிகமானபேருடைய பொறுப்பில் வைத்து அவைகளை அவர்கள் கவனமாகப் போஷிக்கும்படி செய்து அவர்கள் எந்தவகையாகவாவது மற்றப் பிராணிகளின் சமீபத்திற் போகாதபடி செய்யவேண்டும். வியாதிப்பட்ட பிராணிகளிருக்கும் வைத்தியசாலையில், அல்லது அதின் பக்கத்தில் நாய் முதலியவைகள் வரவொட்டாமல் கூடியவரை தடுக்கவேண்டும்.

(5) வியாதிப்பட்டபிராணியிருந்த தொழுவை இன்ஸ்பெக்டர் உங்களுக்குச் சொல்லும்பிரகாரம் அபசஞ்சாரிகளாற் சுத்தி கரிக்கவேண்டும்; அந்த இடமெங்கும் கந்தகத்தை எரித்துச் சுவர்மேலும்

தரைமேலும் (கார்பாலிக்கமிலம் "Carbolic acid" போன்ற) அப்சஞ்சாரிகளைத் தண்ணீரிற கலந்து தெளிக்கவேண்டும். தளத்தில் கொஞ்சம் வெட்டியெடுத்துவிட்டுப் புது மண்ணினால் தளம்போடவேண்டும். சகல மரவேலைகள் சுவர்கள் முதலியவைகளைச் சுத்திசெய்து வெள்ளையடிக்கவேண்டும்.

(6) கார்பாலிக்கமிலம் (Carbolic acid), சிங்குகுளோரைடு (Chloride of Zinc) என்னும் மருந்துகளிலொன்று கலந்த நீரினால் வியாதிப்பட்ட பிராணிகளோடு நின்ற சகல பிராணிகளையும் பூரணமாய் நன்றாகக் கழுவவேண்டும். அவைகளை மற்றப்பிராணிகளிலிருந்து பிரித்துப் புறம்பாக வைத்து வியாதியாரம்பத்தின் அடையாளங்களைக் கண்டுபிடிக்கும்படி ஒவ்வொருநாளும் சோதிக்கவேண்டும். வியாதி தோன்றினால், அது தோன்றப்பட்ட பிராணிகளை, இன்னம் வியாதியணுகியிராத மற்றப் பிராணிகளை விட்டு உடனே பிரித்துப் பிரத்தியேகமாக வைக்கவேண்டும்.

(7) பிராணிகள் யாதொன்றும் வியாதிப்படவில்லையென்று திட்டமாகத் தெரியும்படி கிராமத்திலுள்ள சகல பிராணிகளும் அடிக்கடி பரிசோதிக்கப்படவேண்டும்.

(8) பிரயாணஞ்செய்யும் பிராணிகளை மற்றப் பிராணிகளுடன் கலக்கும்படி இடங்கொடுக்கக்கூடாது. அவைகளை அளவுக்கு மிஞ்சிய தூரமாகவாவது, கடுமையாகவாவது ஓட்டக்கூடாது. அவைகளைப் பகலில் வெப்பம் அதிகமாக இருக்கும்போதும்

ஓட்டக்கூடாது. அவைகளைப் பாதையில் நன்
றாகப்போஷித்துக் கவனமாகத் தண்ணீர் கொடு
க்கவேண்டும்.

(9) வியாதிகண்டு குணமான பிராணிகளை நன்றாகக்
கழுவி ஒருமாதமாவது மற்றப் பிராணிகளுடன்
கலவாமல் பிரத்தியேகமாக மேய்ந்து வரும்படி
செய்யவேண்டும்.

(10) வியாதிப்பட்ட பிராணிகளுக்குச் செய்த பிர
யோகத்தில் உபயோகிக்கப்பட்ட சகல வஸ்துக்
களையும், படுக்கைக்கு உபயோகிக்கப்பட்ட சகல
வைக்கோலையும், மலத்தையும், காயங்கட்டிய
துணி முதலியவைகளையும், பிரேதங்களையும்
எரித்துப்போடவேண்டும். இந்த விஷயத்திற்கு
என்றால் ஏற்படுத்தப்பட்டுக் கவர்ன்மெண்டா
ரால் அநுசரிக்கப்பட்டிருக்கிற பிணஞ்சுடுகொள
வாய்கள் (Cinerators) மிகத் தகுதியானவை
கள்.

கடைசியாக, இந்த வியாதிகள், நாம் மருந்துகளை
யுபயோகித்து யாதொன்றும் அதிகமாகச் செய்வதற்
கிடங்கொடாமலே, நடந்தேறி முடிகின்றன என்பதை
யாவரும் தெளிவாகத் தெரியவேண்டும். வெக்கை
(Rinderpest) வியாதி குணமாக்கப்பட்டதாக நாம் அடி
க்கடி கேள்விப்படுகிறோம்; ஆனால் இவ்வியாதிக்குத்
தவறாத நிச்சயமான பரிகாரம் யாதொன்றுமில்லையென்றும்,
சில சமயங்களில் இவ்வியாதியடைந்த பிராணிகள் இயல்
பாகச் சௌக்கியமடைகின்றனவென்றும், கவனமாகப்
போஷிக்கப்பட்டு, நன்றாகப் பராமரிக்கப்பெற்று, சுக
மான இடங்களிலிருக்கிற பிராணிகளில் சொஸ்தமாகு
வது அதிகமாகவும், வியாதியின் கோரம் குறைவாகவும்

இருக்குமென்றும், வியாதிகள் உண்டானபின் அவைகள் தாங்களாகவே தொலைந்துபோகுமியல்புடையவைகளென்றும், இவ்விதமாக இயல்பாகவே வியாதிகள் தொலைந்துபோம்போது அவைகளைக் குணப்படுத்தும்படி செய்யும் உபாயங்கள் உண்மையாகவே வியாதிக்கு உபயோகமான பரிகாரங்களாக இருந்தனவென்று தப்பாக எண்ண இடம் உண்டென்றும் நமக்கு மிகவும் நன்றாகத்தெரியும். இந்தத்தப்பு இதுபோன்ற வியாதியின் விசேஷ குணங்களை நன்றாகத் தெரிந்திராத யாரையும் மிகவும் தப்பபிப்பிராயங்கொள்ளும்படி செய்யக்கூடியது. மேலும் சாதாரணமான வியாதிகள் (ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப்) பற்றும் வியாதிகளென்று மயங்கப்படுவதும் சாதாரணமானவகைகளினால் குணமாகுவதும் உண்டு. நம்மால் இந்த வியாதிகளைக் குணமாக்குவது கூடாமையாகவிருந்தாலும், தேகத்திற் புகுந்த விஷவஸ்து வெளியேறும்படி இயல்பாகவே தேகத்தில் நடக்கும் (கருவிகளின்) முயற்சிகளுக்கநுசரணையாய் நாம் மிகுந்த உதவி செய்யலாம்; இப்படி உதவி செய்வதற்கு நாம் முதலாவது பிராணியின் பலந்தளர்ந்துவிடாதபடி ஆதரிக்கவேண்டும். இரண்டாவது, மூத்திரம் ஊறுங் கருவிகளையும், தோலையும், பித்தமுண்டாகும் ஈரலையும், குடலையும் அவைகள் தங்கள் தங்கள் தொழிலை விரைவாய்ச் செய்யும்படி எழுப்பி இரத்தத்தைச் சுத்திகரிக்கும்படி அவைகள் செய்யும் முயற்சிகளுக்கு உதவி செய்யவேண்டும். வியாதி ஒரு ஜில்லாவில் பரவிக்கொண்டிருக்கும்போது, அல்லது அது ஒரு குறித்த இடத்திலுண்டாயிருக்கும்போது சுகமாகவிருக்கிற பிராணிகளுக்குக் கறியுப்பு, வெடியுப்பு, நிலவேம்பு, அன்னபேதி இவைகளைச் சிலபோது கொடுப்பது உபயோகமாகவிருக்கும். இதே மருந்துகளையே இவ்வியாதிகளினால் பிடிக்கப்பட்டிருக்கிற பிராணி

களுக்கும் கொடுக்கலாம். பின் வருவனவைத் தினந்தோறும் ஒருபோதுவீதம் ஒருவாரம்வரையும் கொடுக்கலாம்.

| | |
|---|---|
| அன்னபேதி காலேமாகாணி ரூபாயெடை ... ... ... | ஒருமாட்டுக்கு இரண்டரை ஆழாக்குத் தண்ணீரில் கொடுக்கவும். |
| நிலவேம்பு இரண்டரை ரூபாயெடை | |
| கறியுப்பு ஒன்றேகால் ரூபாயெடை | |
| வெடியுப்பு அரையே யரைக்கால் ரூபாயெடை ... ... ... | |

பிரேதங்களைப்புதைப்பது மிகச்சாதாரணமான தப்பிதமாக இருக்கிறது. தண்ணீர் சேர்ந்திருக்க சுடுகுண்ணும்பில் புதைப்பதுங்கூடத் திருப்தியானதல்ல. பிரேதத்தை வெறுந்தரையில்போட்டு மூடினாலோ, அது அழுகி நாறிக் கொடூரமான வியாதிகள் பல திசையிலும் பரவுவதற்காதாரமான மத்தியதானமாகிறது. பிரேதங்கள் புதைக்கப்பட்டபோது [அவைகள் முக்கியமாய் ஏதாவது தொற்று வியாதி (Contagious disease) யினாலாவது, சஞ்சார வியாதி (Infectious disease) யினாலாவது பற்றப்பட்டிருந்தால்], அவைகளிலிருந்து விஷம் பெருகி மண்ணில் விருத்தியாகிப் புதைக்கப்பட்ட இடத்தைச் சுற்றியுள்ள இடங்களில் மேயும் பிராணிகளின் தேகத்தினுள் பிரவேசிக்கக்கூடும்; மேலும், அந்த விஷம் நீர்த்தாழ்வுகளின் வழியாய்ச் சென்று குளங்களிற் சேரக்கூடும். பிரேதக்குழி கல்லினாலும் முட்செடிகளாலும் மூடப்பட்டிருந்தாலும், பிணந்தின்னும் பிராணிகள் பிரேதத்தைத் தோண்டி வெளியே எடுத்துவிடலாம். சக்கிலியர் தோலுக்காகவும், பறையர் மாமிசத்துக்காகவும் பிணங்களைத் தோண்டி எடுக்கலாம். இவ்விதஞ் செய்வதினால் அவர்களும் கொடிய வியாதிகளுக்குள்ளாகலாம். தோலைத் துண்டுதுண்டாக வெட்டிப்போடுவதுங் கூடப் போதுமானதல்ல. பிரேதங்களைப் பிணஞ்சுடு காள

வாய்களில் எரிப்பதுபோன்ற அவ்வளவு நல்ல பூரண மான ஏற்பாடு யாதொன்றுமில்லை.

வியாதிப்பட்ட பிராணிகளைப்பற்றி மிகச்சாதாரண மாக ஒருவரும் கவலையெடாமல் அவைகளை அவைக ளுடைய ஆகாரமுதலியவற்றைத் தேடிக்கொள்ளும்படி விட்டுவிடுகிருர்கள். இந்த நிலைமையில் பிராணிகளின் சாவு அதிகமாகவிருப்பது ஆச்சரியமென்று நினைக்க இடமில்லை.



FIG. 4.



FIG. 1.



FIG. 2.



FIG. 5.



FIG. 3.

/Signed J. Mills V. S. A. V. D.
Inspector of Cattle Diseases
Madras Presidency

C. [illegible] LITH. MADRAS.

## ௩-—வது அதிகாரம்.

## பிராணிகளுக்கு அடைப்பான் வராமல் அடைப்பானீர் பொருத்திக் காத்தல்.

இது பிராஞ்சுதேசத்தில் பாரிசு நகரவாசியாகிய பாஸ்டியர் என்பவருடைய ஏற்பாடு.

---

மண்ணீரல் அடைப்பான், கருங்கால், தொண்டை அடைப்பான், பிராக்கசி (அல்லது நீரடைப்பான்), அடைப்பான் காய்ச்சல் என்பவைபோன்ற பல பெயரினால் தெரியப்பட்டிருக்கிற அடைப்பான் வியாதியானது பூததிர்ஷ்டிக் கண்ணாடியின் உதவியில்லாமல் கண்ணுக்குத் தெரியாத அதிருட்பமான ஒருவகைச் செந்துக்கள் பிராணியின் இரத்தத்திற் (புகுந்து) பெருகுவதினால் உண்டாகிறது. இவ்வியாதியினால் இறந்த பிராணியொன்றின் இரத்தத்திற் சில துளியெடுத்துச் சுகமாகவிருக்கிற மற்றொரு பிராணியின் தோலின் கீழ் (இரத்தத்திற் பிரவேசிக்கும்படி) செலுத்தினால் இரண்டல்லது மூன்று நாளில் மரணம் சம்பவிப்பது பெரும்பாலும் நிச்சயமாகவிருக்கிறது. இவ்விதமாகவெடுக்கப்படும் இரத்தத்திலுள்ள அடைப்பான் வந்துகள் மிக உக்கிரமான நிலைமையோடுங் கூடியிருக்கின்றன. அவைகள் வளர்வதற்கேற்ற சாரங்கலந்த நீரில் அவைகளை வளரும்படி செய்தால் அவைகளின் உக்கிரம் மாறுமலிருக்கும். சாஸ்திர சங்க (Academy of Sciences) த்தாரின் அறிக்கைப் பத்திரிகைகளில் விஸ்தாரமாக விவரிக்கப்பட்டிருக்கிற

உபாயத்தை யனுசரித்துப் பாஸ்டியர், சேம்பர்லாந்து, ரோக்கல் என்பவர்கள் அடைப்பான் வந்தைகளின் உக்கிரத்தை மிகவுங் குறைத்திருக்கிறார்கள்; அவர்கள் பல தரமான வீரமுடைய (அடைப்பான் வந்தையுள்ள) தொற்றுநீர் உண்டாக்குகிறார்கள். இவ்வகையாக, மிகக் கொரேமுடையதாய் நிச்சயமாக மரணத்தை விளைவிக்கத் தக்கதாகவும், அடைப்பான் வியாதியைச் சாந்தமான ரூபத்தில் உண்டாக்கத் தக்கதாகவும், பூரணமாகத் தீங்கற்றதாய் வியாதியையுண்டுபண்ணுததாகவுமுள்ள பல தரமான தொற்று நீர்களை அவர்கள் செய்யக்கூடும்.

2. ஒரு பிராணியின் தோலின்கீழ் கொரேமகுறைக்கப்பட்ட (அடைப்பான் வந்தையுள்ள) தொற்றுநீரைச் செலுத்திய காரணத்தினால் அது சாந்தமான அடைப்பான் வியாதியடைந்தபின் கொஞ்சக்காலம் அவ்வியாதி பிராணபாயமான ரூபத்தில் அதைத் தாக்கமுடியாது; அந்தப்பிராணி குறைந்தால் ஒரு வருஷபரியந்தமாவது அடைப்பான் வியாதியினால் சாகுதல் கூடாமையானது. இந்த உண்மை அடைப்பான் நீர் பொருத்துங்கொள்கைக்கு ஆதாரமாகவிருக்கிறது. பிராணிகளில் அநேகத்துக்கு நிச்சயமாக மரணத்தையுண்டாக்கும் இவ்வியாதியினால் அவைகள் பீடிக்கப்படாமல் இரண்டுமுறை அடைப்பானீர் பொருத்திப் பாதுகாத்தல்வேண்டும். சொற்பக் காய்ச்சலைமாத்திரம் உண்டுபண்ணும் (முதலாம் அடைப்பானீர் ஆகிய) மிகப் பலங்குறைந்த தொற்றுநீர்கொண்டு முதற்பொருத்தஞ் செய்யவேண்டும். இப்படிச் செய்தபின் பன்னிரண்டு நாளுக்குமேல் பதினைந்து நாளுக்குள், (இரண்டாம் அடைப்பானீர் ஆகிய) அதிகப்பலமுள்ள தொற்றுநீரினால் இரண்டாம் பொருத்தஞ்செய்யவேண்டும்; முதலாம் அடைப்பானீரினால் காக்கப்படாத பிராணிகளுக்கு இரண்டாம்

அடைப்பானீரினல் பொருத்தஞ்செய்தால் அவைகளில் சிலவற்றிற்கு மரணஞ்சம்பவிக்கலாம். முதற்பொருத்தத்தினல் குறைவாகவாவது காப்புச்செய்யப்பட்டிருப்பதினல் பிராணிகளுக்கு இரண்டாவது பொருத்தத்தினல் சொற்பக்காய்ச்சல்மாத்திரம் உண்டாகிறது. அவைகள் (இரண்டு பொருத்தத்தினலும்) பூரணமாகக் [illegible]டபின், அவைகளை அடைப்பான் வியாதிகள் பற்றுவது அசாத்தியமாகிவிடுகிறது. செம்மறியாடுகள், வெள்ளாடுகள், கால்நடைகள், எருமைகள், குதிரைகள், கழுதைகள், கோவேறுகழுதைகள் இவைகளும் மற்றப் பிராணிகளும் (அடைப்பான் வியாதியணுகாமல்) மேற்சொல்லியபடி காப்புச் செய்யப்படக்கூடும்.

## அடைப்பானீர் பொருத்தும் முறை.

1. *அடைப்பானீர் (படத்தின் 1-வது உருவிற் காட்டியிருக்கிறபடி) கண்ணாடிக்குழலில் வைக்கப்பட்டு இறுக்கமாக (ரப்பர்) மூடிகொண்டு மூடப்பட்டு வேண்டிய இடங்களுக்கு அனுப்பப்படுகிறது. ஒரு குழலில் 50, 100, 200, அல்லது 300 செம்மறியாடுகள் அல்லது வெள்ளாடுகளுக்காவது, 25, 50, 100, அல்லது 150 கால்நடைகள், எருமைகள், அல்லது குதிரைகளுக்காவது பொருத்தஞ்செய்வதற்குப் போதுமான அடைப்பானீர் இருக்கிறது. இந்தக் குழல்களின்மேல் "முதலாம் அடைப்பானீர்" அல்லது "இரண்டாம் அடைப்பானீர்" என்று பெயரெழுதப்பட்டிருக்கிறது. இந்த நீரிற் கொஞ்சம் பிராணியின் தோலின்கீழ் செலுத்தப்படவேண்டியது. இவ்விதஞ் செய்வதற்கு, மனிதருடைய தோலின்

* அடைப்பானீரும் பிராவாஸ் பீர்ச்சாங்குழலும் வேண்டியவர்கள் பின்வரும் விலாசக்காரருக்கெழுதி வருவித்துக்கொள்ளலாம். "Monsieur F. Boutroux Vaccin charbonneux 28, Rue Vauquelin Paris."

கீழும், வீட்டு மிருகங்களின் தோலின் கீழும் மருந்துநீர் பாய்ச்சும்படி ஐரோப்பிய வைத்தியரும், வெற்றேரிநேரி ஸர்ஜன்களும் உபயோகிக்கிற (2-வது உருவிற் காட்டியிருக்கும்) பிராவாஸ் பீர்ச்சாங்குழல் (Pravaz Syringe) உதவும். முதலில் பீர்ச்சாங்குழலில் அடைப்பானீரை நிரப்பவேண்டும். இதற்காக, * குழலூசியின் துளையை அந்நிய வஸ்துக்கள் அடையாமல் அதில் சொருகி வைத்திருக்கும் கம்பியை வெளியே எடுத்துவிடவேண்டும். பின்பு குழலூசியைப் பீர்ச்சாங்குழலின் முனையிற் பொருத்திக்கொண்டு அடைப்பானீரைக் குலுக்கி, அதில் அவ்வூசியை முழுகச்செய்து († தாம்பியத்தை உயர்த்துவதினால்) அந்த நீரை மெதுவாக உயர இழுக்க வேண்டும். (இவ்விதம் செய்வது 3-வது உருவிற் காட்டப்பட்டிருக்கிறது.) பீர்ச்சாங்குழல் அதன் தொழிலைச் சரியாகச் செய்யுமானால், அது பூரணமாக நிரம்பிவிடும்; தாம்பியத்தின் கீழ் (வாயு அடங்கிய) ஒரு சிறிய குமிழிதான் இருக்கும். ஆயினும், அதிகமாக அல்லது குறைவாகத் தாம்பியம் உலர்ந்திருப்பதினாலாவது, குழலூசி நன்றாகப் பொருந்தாததினாலாவது அநேக சம

---

* குழலூசி.—இரண்டுபக்கமுந்திறந்த குழலாகவும், ஊசிபோலவும் இருப்பன. இது பிராவாஸ் பீர்ச்சாங்குழல் உபயோகிக்கப்படும்போது அதின் முனையில் இருக்கவேண்டும்.

† தாம்பியம் (Piston).—ஒரு சிறிய அல்லது பெரிய குழலின் (உட்சுற்றளவே தனக்குச் சுற்றளவாக உடையதாகி அக்குழலின்) உள்ளே சரியாகப்பொருந்தி மேலுங்கீழும் மாறிமாறி அசைக்கப்படுகின்ற மிகக்குறுகிய தம்பம் தாம்பியமென்று சொல்லப்படும். இங்கு பீர்ச்சாங்குழலினுள்ளே நீரை இழுக்கவும், இழுத்த நீரை வெளியே பீர்ச்சவும் உபயோகமாகும் தம்ப வடிவமான பொருள் தாம்பியமென்று சொல்லப்பட்டது; தாம்பியத்தை முனையிற்கொண்டு அதை அசையச்செய்யும் தடித்த கம்பி தாம்பியத்தண்டு (Piston-rod) என்று சொல்லப்படும்.

யங்களில் அடைப்பானீர் பீர்ச்சாங்குழலில் பூரணமாக நிரம்பாமல் (மிகுந்த வாயு நிறைந்த) பெரியகுமிழி தாம்பியத்தின் கீழ் நின்றுவிடுகிறது. இப்படி நேரிட்டால், தாம்பியத்தை இரண்டு அல்லது மூன்று தடவை மேலே இழுத்துக் கீழே தள்ளுவதினால் அது கலைந்துவிடும்; குழலூசி இறுக்கமாகப் பொருந்தியதாகவிருந்தால், பீர்ச்சாங்குழல் முழுமையும் நிரம்பிவிடும். தாம்பியம் நனைந்திருப்பதும் குழலூசி பொருந்தியிருப்பதும் அத்தியாவசியகமான விஷயங்கள்.

2. ஆயினும், சில அசம்பாவிதத்தினால் தாம்பியம் மிகவும் உலர்ந்திருந்து வாயுதப்பிக் குழலிலிருக்கும்படி நேரிட்டால், பீர்ச்சாங்குழலை நீரில் கொதிக்கவைத்துக் கொதிநீர் சகச்சூடாகும் வரை ஆறவைத்துப் பின்பு பீர்ச்சாங்குழலை அந்த நீரினாலே இரண்டு மூன்றுதரம் நிரப்பித் தாம்பியத்தை ஊறி விம்மச்செய்யவேண்டும். இவ்விஷயத்துக்குத் தண்ணீரென்று கொதிக்கவையாத நீரை உபயோகிக்கக்கூடாது. (கண்ணாடிக் குழலைத் தண்ணீரில் போட்டபின்புதான் அந்த நீரைக் கொதிக்கவைக்க வேண்டும்; அந்தக்குழலைக் கொதித்த நீரில்போட்டால் வெடித்துப்போம்; அதைக் கழுவுவதற்குக்கொதித்த நீரை இளஞ்சூடாக ஆற்றி உபயோகிக்கவேண்டும்.)

3. தாம்பியத்துக்குமேல் நீர் ஏறினால், அது சீர்கெட்டதென்றும், அதை மாற்றவேண்டுமென்றுந் தெரிந்துகொள்ளவேண்டும். ஒரே ஒரு தாம்பியம்மாத்திரம் இருந்தால், பிராவஸ் பீர்ச்சாங்குழற்பெட்டி (யின் மூடியிலுள்ள அறை) யிலிருக்கும் சிறு * சாவியினால் அதை இறுகச்செய்துகொள்ளவேண்டும்.

4. செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும்.—பீர்ச்சாங்குழலை (அடைப்பானீரினால்) நிரப்பியபின் (அதற்கு

---

* சாவி திறவுகோலென்றுஞ் சொல்லப்படுகிறது.

வெளியில்) தாம்பியத்தண்டில் அளவைக்குறிக்கும்படியிருக்கும் பித்தளை வளையத்தைத் (திருக்கிக்கொண்டுபோய்)த் தாம்பியத்தண்டில் (1-என்று குறிக்கப்பட்டிருக்கும்) முதலாவதுலக்கத்தில் நிறுத்தவேண்டும். (இவ்விதம் பீர்ச்சாங்குழலை ஒழுங்குபடுத்தி அடைப்பானீர் பொருத்தப்போகிறவருக்கு) உதவியாக ஒருவர் பொருத்தஞ்செய்யப்படவேண்டிய ஆட்டைப்பிடித்து (4-வது உருவிற் காட்டியிருக்கிற) நிலைமையில் கெட்டியாக வைத்துக்கொண்டிருக்கவேண்டும்; பொருத்தஞ்செய்பவர் பிராணியின் வலது தொடையின் மத்தியில் தோலின் கீழ் குழலூசியை (ச் சாய்வாக ஒரு விரற்கடை) இறக்கி, அளவு வளையம் பீர்ச்சாங்குழலில் தட்டும்வரை தாம்பியத்தையுள்ளே தள்ளவேண்டும். இவ்விதமாக ஒரு ஆடு பொருத்தஞ்செய்யப்பட்டபின் பீர்ச்சாங்குழலை வெளியே எடுத்து அளவு வளையத்தை (உயரச்சுற்றிக்கொண்டுபோய்)த் தாம்பியத்தண்டிற் குறிக்கப்பட்டிருக்கும் 2-வது லக்கத்தில்நிறுத்தியபின் இரண்டாவது பிராணி பொருத்தஞ்செய்யப்படுகிறது. பிரவாஸ் பீர்ச்சாங்குழல் இவ்விதமாக எட்டு ஆடுகளுக்குப் பொருத்தஞ்செய்வதற்குப் போதுமான அடைப்பானீர் கொள்ளும். பீர்ச்சாங்குழல் வெறுமையானவுடன் திரும்ப அதை முன்போலவே நிரப்பிக்கொள்ளவேண்டும். கொஞ்சம் பழகியபின் ஒரு மனிதன் ஒருமணி நேரத்தில் நூற்றைம்பது ஆடுகளுக்குப் பொருத்தஞ்செய்யக்கூடும். முதற்பொருத்தமானபின் பன்னிரண்டு நாளுக்குமேல் பதினைன்கு நாளுக்குள் இரண்டாவது அடைப்பானீரினால் இரண்டாம் பொருத்தஞ் செய்யப்படவேண்டும்; ஆனால் இரண்டாவது பொருத்தத்தைப் பிராணியின் இடது தொடையில் செய்யவேண்டும். முதற்பொருத்தம் வலது தொடையில் செய்யப்பட்டபடியால், இரண்டாவது பொருத்தம் இடது தொடையில் செய்யப்படவேண்டியதாகவிருக்கிறது.

5. துஜிணா முதலானவை.—செம்மறியாடுகளுக்கும், வெள்ளாடுகளுக்கும் உபயோகிக்கப்படும் அடைப்பானீரோ மாடுகள், குதிரைகள், கழுதைகள், கோவேறுகழுதைகளுக்கும் உபயோகிக்கப்படலாம்; ஆனல் பெரிய பிராணிகளுக்குப் (பொருத்தும் நீரின்) பிரமாணம் இரட்டிப்பாகவிருக்கவேண்டும்.—அதாவது, அளவுவளையத்தை (சிறிய பிராணிகளுக்குப் பொருத்தஞ்செய்யும்போது) முதற் பிராணிக்கு 1-லக்கத்திலும், இரண்டாம் பிராணிக்கு 2-லக்கத்திலும், அப்பால் அடுத்த ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வொரு லக்கமாகத் தள்ளியும் வைத்ததற்குப் பதிலாக(ப் பெரிய பிராணிகளுக்கு) முதலாவது 2-லக்கத்திலும், இரண்டாவது 4-லக்கத்திலும், அப்பால் இரண்டிரண்டு லக்கம் தள்ளியும் வைக்கவேண்டும். ஒரு பீச்சாங்குழலில் சிறிய பிராணிகள் எட்டுக்குப் போதுமானதாயிருந்த நீர் பெரிய பிராணிகள் நாலுக்குப் போதுமானதாயிருக்கும். சிறிய பிராணிகளில் தொடையில் பொருத்தஞ் செய்வதற்குப் பதிலாகப் பெரிய பிராணிகளில் மாடுகளுக்குத் தோட்பட்டையின் (அதாவது முன்கால் மூலத்தின்) பின் பக்கத்திலும், குதிரை, கழுதை, கோவேறுகழுதைகளுக்குக் கழுத்தில் கழுத்து வளையம் முதலியவை படக்கூடாத பாகத்திலும் பொருத்தஞ் செய்யவேண்டும்.

6. பெரிய பிராணிகளின் தோலை ஊசியினல் துளைப்பது கடினமாகவிருக்கும்; ஆகையால், தோலிற் சிதைவு நேரிடாதபடி கவலையெடுத்துப் பீச்சாங்குழலுக்கு நேரான போக்கில் (சாய்வாகக்) குத்தித் துளைசெய்யவேண்டும். ஊசியை லகுவாக உட்செலுத்துவதற்கிசைவாக இடது கையினல் கொஞ்சந்தோலை இழுத்துப் பிடித்துக்கொள்வது நல்ல உபாயமாகவிருக்கிறது. எந்த ஊசியினல் ஆடுகளுக்குப் பொருத்தஞ்செய்கிறேமோ

அந்த ஊசியினாலேயே பெரிய பிராணிகளுக்கும் பொருத்தஞ்செய்யக்கூடாது. பெரிய பிராணிகளுக்குச் சிறிய ஊசியை உபயோகிப்பதினாலுண்டாகும் அபாயத்தை விலக்கும்படி அவைகளுக்கு உதவும் அதிகப் பலமுள்ள ஊசியொன்று பிராவாஸ் பீர்ச்சாங்குழற்பெட்டியில் வைக்கப்பட்டிருக்கிறது.

7. அடைப்பானீரைத் தோலின்கீழ்ப் பாய்ச்சுவதற்கு அந்த நீர் பரிபூரணசுத்தம் உடையதாகவிருக்கவேண்டியது மிகவும் முக்கியமானது. அது சுத்தமில்லாததாயிருந்தால், அதாவது நன்றாகக் கொதியாத நீரினாலாவது, தூசியினாலாவது, வேறு அந்நிய வஸ்துக்களினாலாவது பழுதாக்கப்பட்டிருந்தால், பிராணியின் இரத்தத்தில் சாந்தமான அடைப்பானீரல்லாமல் நுட்பமான பிராணிகள் அல்லது தாவரங்களும் சேரலாம்; கரப்பான் (Erysipelas), இரத்த அழுகல் (Septicæmia) போன்ற வியாதிகளின் வித்துகளும் சேரக்கூடும்; இந்தக் காரணத்தால் வேறு வியாதிகளுண்டாகலாம்; அல்லது பொருத்தம் 'பிரயோசனம் அடையாமல் தடைபடலாம். பிராஞ்சு தேசத்திலுள்ள பாரிசு நகரத்திலிருந்து வரும் அடைப்பானீர் பூரண சுத்தமுடையதாகவிருக்கிறது. அதை உடனே எடுத்து உபயோகிக்கலாம்; ஆனால் பீர்ச்சாங்குழலும் சுத்தமாகவிருக்கவேண்டியது ஆவசியகம். உபயோகிக்கப்படிராத புதுப் பீர்ச்சாங்குழல்கள் சுத்தமாகவிருக்கின்றன; ஆயினும் ஒரு பீர்ச்சாங்குழல் ஒருநாள் பொருத்தஞ்செய்வதில் உபயோகிக்கப்பட்டபின், அதன் தாம்பியத்தண்டின் கடைசியிலுள்ள தாம்பியத் தோல்வில்லைகளை மாற்றி வேறு புதுத்தோல்வில்லைகள் போட்டாலொழிய, அந்தப் பீர்ச்சாங்குழலை மறுபடியும் உபயோகிக்கக் கூடாது. பொருத்தஞ்செய்யும் பிரயோகமானது மிகுந்த நுட்பத்துடன் செய்யப்படவேண்டியதாகவிருக்கிறது. பீர்ச்

சாங்குழல் ஒருமுறை உபயோகிக்கப்பட்டபின் சில நாளாகிவிட்டால், அதிற் சேர்திருத்தவேண்டிய பாகங்களைச் சேர்திருத்திப் பூரணமாகச் சுத்திசெய்த பின்புதான் உபயோகிக்கவேண்டும்.

8. அடைப்பானீர் குளிர்ச்சியாகவிருக்கும்படி, அதை ஒரு நிலவறையில் வைக்கவேண்டும். ஒருநாள் திறக்கப்பட்ட அடைப்பானீர்க்குழலிலிருந்து மறுநாளிலாவது, அதற்குப்பிந்திய நாள்களிலாவது நீரெடுத்து உபயோகிக்கக்கூடாது. ஆகையால், ஒருநாளில் திறக்கப்பட்ட குழலிலுள்ள நீரையெல்லாம் அந்த நாளிலேயே உபயோகிக்கவேண்டும்; நீர் மிஞ்சினால் அதை யாதொரு தாமதமுமில்லாமல் தள்ளிவிடவேண்டும்.

9. பொருத்தஞ்செய்பவருக்குச் சாவகாசங் குறைவாக இருந்தாலாவது, அளவுக்கு அதிகமான பிராணிகளுக்குப் பொருத்தஞ்செய்யவேண்டியிருந்தாலாவது, அவர் தம் வேலையை அவசரமாகச் செய்யும்படி நேரிடலாம்; அதனால் ஊசி தோலைத்துளைத்துச் செல்லாமல் தோலின்மேலே தவறிப்போய் நீரை வெளியே பாய்ச்சிவிடலாம்; அல்லது அவர் அளவு வளையத்தை உயரத் தள்ள மறந்துவிடலாம்; பின்பு அவர் தாம்பியத்தைத் தள்ளினாலும் நீர் தோலின் கீழ்ப் பிரவேசிக்கமாட்டாது. அவசரத்தினால் இந்த அபாயங்கள் நேரிடும். இவ்விதமாக முதலாவது அடைப்பானீர் பொருத்தப்பட்டது சந்தேகமாயிருந்தால், அதிகப் பலமுள்ள இரண்டாவது அடைப்பானீர் பொருத்தப்பட்டபோது மரணம் நேரிடலாம்.

10. பொருத்தஞ் செய்யப்பட்டுக்கொண்டிருக்கும் பிராணிகள், பொருத்தஞ்செய்பவருக்கு உதவியாக அவைகளைப் பிடித்துக்கொண்டிருப்பவர் கையைவிட்டு வேலை முடியுமுன் தப்பிப்போகாதபடி மிகுந்த கவலையெடுக்க

வேண்டும். அவைகள் தப்பினல் பொருத்தஞ்செய்யப்பட்டிருக்கும் பிராணிகளுடன் கலந்துவிடலாம்; அப்படிக் கலந்து அவைகளுடன் இரண்டாவது பொருத்தஞ்செய்யப்படலாம்; இப்படிப் பிசகிப்போன பிராணிகள் முதலாம அடைப்பானீரினல் காக்கப்படாதவைகளாகையால், அதிகப்பலமுள்ள இரண்டாம் அடைப்பானீரினல் மரணமடையலாம்.

11. மற்ெறாரு துர்ச்சம்பவமுண்டு; அதாவது ஊசித்துவாரத்தில் வாயு நிற்பதுதான்; இந்தத் துர்ச்சம்பவமும் உண்டாகாமற் கவலையெடுக்கவேண்டும். ஊசியில் வாயு நின்றால், பொருத்தஞ்செய்பவர் தாம்பியத்தைத் தள்ளும்போது, அடைப்பானீருக்குப் பதிலாக வாயுதான் (பிராணியின் தோலின்கீழ்) பாய்ச்சப்படும். ஆகவே, பொருத்தம் நிறைவேறமாட்டாது. இந்தத் துர்ச்சம்பவம் அடிக்கடி உண்டாகிறது.

12. பொருத்தஞ்செய்யப்பட்ட இடங்களில் மாடுகளுக்கும், எருமைகளுக்கும் இதுவரை கழலையுண்டாகியிருப்பதில்லை. பொதுவாகக் குதிரைகளுக்கும், விசேஷமாக இளங்குதிரைகளுக்கும் சில வேளைகளில் சிறிய அல்லது பெரிய கழலைகள் உண்டாகியிருக்கின்றன. ஆனல், உண்டாகிய கழலைகள் யாதொரு பிரயோகமும் இல்லாமலே சொற்பகாலத்தில் மறைந்துவிடுகின்றன. இளங்குதிரைகள் இரண்டுமுறை பொருத்தஞ்செய்யப்படுவதற்குப் பதிலாக மூன்று முறையாக முதல் இரண்டு முறை முதலாம் அடைப்பானீரினலும், மூன்றும் முறை இரண்டாம் அடைப்பானீரினலும் பொருத்தஞ்செய்யப்பட்டால் கழலையுண்டாகிறதில்லை. இது உண்மையென்று ரூபிப்பதற்கு வேண்டிய திருஷ்டாந்தங்கள் அதிகரித்துக்கொண்டிருக்கின்றன.

## பீர்ச்சாங்குழலைச் சுத்திசெய்யும் வகை.

பீர்ச்சாங்குழலின் மேற்பாகத்தை(க் கண்ணறைக்குழலின்மேலிருக்கும் அரும்பு வைத்த மூடியைத் திருக்கிக் கழற்றியபின்) பிரித்தெடுக்கவும். தாம்பியத்தண்டின் முனையிலிருக்குஞ் சுரை (Nut) யைத் திருக்கிக்கழற்றி அதற்குமேலிருக்கும் இரண்டு தாம்பியத்தோல்வில்லைகளை எடுத்துவிடவும்.

கண்ணறைக்குழலின் இரண்டு அந்தங்களுக்கும் பீர்ச்சாங்குழலின் உடலாகிய நிக்கல்வெள்ளி (Nickel silver) க்கூட்டின் இரண்டு தலையிலுட்பக்கங்களுக்கும் இடையில் (பக்கத்துக்கொன்றாக) இருக்கும் இரண்டு தோற்றழுவணை (Leather washers or cushions) களையும் எடுத்துவிடவும்.

கார்பாலிக்கமிலம் ஒரு பாகமும் தண்ணீர் நாற்பது பாகமும் சேர்த்து அந்த நீரில் பீர்ச்சாங்குழலையும் ஊசியையும்போட்டு இருபது நிமிஷங் கொதிக்கும்படி செய்யவும்.

பின்பு பீர்ச்சாங்குழலின் சகல பாகங்களையும் பிரித்து அவைகளை உள்ளும் புறமும் துப்புரவான துணிகொண்டு மிகுந்த கவனத்துடன் சுத்திசெய்யவும்.

நிக்கல்வெள்ளிக்கூட்டின் இரண்டு தலையின் உட்பக்கத்திலும் இரண்டு புதிய தழுவணைகளை (ப் பக்கத்துக்கொன்றாக) வைக்கவும். தாம்பியத்தண்டின் முனையில் இரண்டு புதுத் தாம்பியவில்லைகளைப்போட்டுச் சுரையைத் தாம்பியத்தில் (பீர்ச்சாங்குழற் பெட்டி மூடியின் அறையிலுள்ள சிறு சாவியினால்) திருக்கிச்சேர்க்கவும்.

பின்பு பீர்சசாங்குழலின் பல பாகங்களையும் ஒன்றாக இணைக்குமுன் தாம்பியவில்லைகளுக்குச் சுத்தமான

மாட்டுக்கொழுப்பு நெய் (அல்லது தேங்காயெண்ணெ)யை நன்றாகத்தடவி அந்தத்தாம்பிய வில்லைகளை ஒன்றுக்கொன்று எதிர்த்திசையில் மாறிப்படிந்துகிடக்கும் நிலைமையில் தோற்றமுவனைகள் செய்வதற்காக இருக்கும் நிக்கல்வெள்ளி அச்சினுள்ளே பலமுறை செலுத்தவும். இது கண்ணாடிக்குழல் உடைந்துபோகாமல் அதினுள் தாம்பியம் சுலுவாகச்செல்லும்படி செய்யப்படுகிறது.

(மேலே சொல்லியபடி ஆயத்தப்படுத்தப்பட்ட தாம்பியத்தைக் கண்ணாடிக் குழலுள் செலுத்தியபின், கண்ணாடிக்குழலை நிக்கல்வெள்ளிக் கூட்டினுள்ளே தள்ளி,) கூட்டோடு அதற்கு மேலேயிருக்கும் மூடியை நன்றாகத்திருக்கி இறுக்கமாகச்சேரும்படி செய்யவும். கண்ணாடிக்குழலின் இரண்டு மூடியிலும் வாயு தப்பி நிற்காதபடி இப்படிச்செய்யவேண்டும். பீச்சாங்குழல் உபயோகிப்பதற்குத்தக்க நிலைமையோடிருந்தால், அதின் கடைசியாகவும், குழலூசியைப் பொருந்தும் பாகமாகவும் உள்ள காம்பின் தலையை ஒரு விரலினால் இறுக்கமாக அடைத்துக்கொண்டு தாம்பியத்தை உயர இழுத்துப் பின்பு பீச்சாங்குழலைத் தாங்காமல் விட்டுவிட்டால், அது—அடைத்துக்கொண்டிருக்கும் விரலில் வேறு யாதொரு ஆதாரமுமில்லாமலே—தொங்கும்.

மையுறிஞ்சு காகிதம் (Blotting paper) கொண்டு ஊசிகளையொற்றியுலர்த்தவும்; அது ஊசிகளின் துளையில் தங்கியிருக்கும் நீரையுறிஞ்சி எடுத்துவிடும். ஊசிகளைச் சாணைக்கல்லில் தீட்டிக் கூர்மையாக்கவும்.

ஊசியின் துளைகள் அடைபட்டுப்போகாதபடி அவைகள் ஒவ்வொன்றினுள்ளும் (பீச்சாங்குழற்பெட்டி மூடியின் அறையிலிருக்கும் கம்பிக்கட்டிலிருந்து) ஒரு கம்பியெடுத்துச் செலுத்தவும்.

குறிப்பு.—பீர்ச்சாங்குழலுபயோகிக்கப்பட்டபோதெல்லாம் அதைச் சுத்திசெய்யவேண்டும்.

இப்போது சொல்லியவைகளெல்லாம் பிராஞ்சு பாஷையிலிருந்து சரியாக இங்கிலீஷில் என்னால் (J. Mills, V. S.) மொழிபெயர்க்கப்பட்டவைகள்.

---

*பின் வருவது பிராணிகளுக்கு அடைப்பான் வராமல் அடைப்பானீர் பொருத்திக் காத்தலைப்பற்றிச்சென்னை மெயில் பத்திரிகையில் அப்பத்திராதிபர் எழுதியிருப்பதின் சாரம் :—*

பிராணிகளுக்கு அடைப்பான் வராமல் பாஸ்டியர் என்பவர் கண்டுபிடித்த அடைப்பானீர் பொருத்தலானது பிரயோசனமுள்ளதென்பதைப்பற்றி யாதொரு சந்தேகமுமிருந்ததில்லை. ஆடு, மாடு, பன்றி இவைகள் விஷயத்தில் விஸ்தாரமாகச் சோதனைசெய்துபார்த்ததில், அடைப்பானீர் பொருத்தல் அடைப்பான் வராமல் (பிராணிகளைச்) காக்கிறதென்பது ஸ்திரப்படுத்தப்பட்டது. ஆனால், ஒரு அம்சம் தீர்மானிக்கப்படவேண்டியதாயிருந்தது ; அதாவது, அடைப்பானீர் பொருத்தலின் பயன் எவ்வளவுகாலம் நிலைநிற்குமென்பதே. மனுஷரில் வைசூரிப்பால் பொருத்தலின் சத்துவமானது எப்படி நீடித்திராமலிருக்கிறதோ, அப்படியே பிராணிகளில் அடைப்பானீர் பொருத்தலின் பயனும் நெடுங்காலம் நில்லாததாகவிருக்கிறது. அடைப்பானீர் பொருத்தலின் பயன் ஆறுமாதமிருக்குமென்று உத்தேசமாகச் சிலர் கணக்கிட்டிருந்தார்கள். இதைச் சோதித்தறியும்படி ஹிரால்ட்டு விவசாய சாஸ்திர சங்கத்தார் தென் பிராஞ்சுக்கே உரித்தான மூன்று சாதி ஆடுகள் விஷயத்தில் சோதனை நடத்தினார்கள். இவைகளில் லார்லாக்கு என்னும் ஒரு சாதி ஆடுகளின் பாலிலிருந்துதான் பேர்பெற்ற ரோக்குபோர்ட்டுப் பாற்கட்டியானது செய்யப்படுகிறது. பரீட்சித்துப் பார்ப்பதற்காக முப்பத்தாறு ஆடுகளைப் பிரத்தியேகப்படுத்தி, (முதலாம் இரண்டாம் அடைப்பானீர்களால் பொருத்தஞ்செய்து), 1882-ம் ௵ மே மாதத்தில் மாண்டிபில்லியர் விவசாய வித்தியாசாலைத்தலத்தில் விட்டுவைத்தார்கள். 1883-ம் ௵ மே மாதத்தில் மேற்சொல்லிய மூன்று சாதியில் சாதிக்கு இரண்டாடாக ஆறு ஆடுகளைப் பிரித்தெடுத்து அவைகளுக்கு (அடைப்பான்) விஷப்பால் பொருத்தினார்கள். அவைகள் அவ்

விஷத்தின் செய்கையினால் மரணமடையவில்லை. அடுத்த நவம்பர் மாதத்தில் முன்போலவே வேறு ஆறு ஆடுகள் விஷயத்தில் பரீட்சை நடத்தியதும் அனுகூலமாகவே முடிந்தது. பின்னும் ஆறுமாதஞ் சென்றபின் வேறு ஆறு பிராணிகள் முந்திய மாதிரியாகவே பரீட்சை நடத்தப்பட்டன. இந்தப்பரீட்சையுந் திருப்திகரமாகவே முடிந்தது; அடைப்பானிர் பொருத்திக்காக்கப்பட்டிராத பிராணிகளை இந்தப் பரீட்சைக்குட்படுத்தியதில் அவைகள் இறந்துவிட்டன. 1882-ம் வருஷத்தில் அடைப்பானிர் பொருத்தப்பட்ட ஆடுகள் 1884-ம் வருஷ மே மாதத்தில் (அடைப்பான) விஷப்பாலின் செய்கையை நிராகரித்துச் சாகாமலிருந்தன. ஆகவே அடைப்பானிர் பொருத்தினால் இரண்டுவருஷகாலம் அவ்வியாதியினால் மோசம் வராதென்று தெரிகிறோம்.

பின்வருவதும் மெயில் பத்திராதிபர் பிரசுரஞ்செய்ததின்கருத்து :—

ஸ்விட்ஜர்லாந்தில் பிரிபர்க்கிலுள்ள வெட்டெரினரி வித்தியா போதகாசிரியராகிய ஸ்ரீயல் என்பவர் அடைப்பானிர் பொருத்தல் பிராணிகளுக்கு அடைப்பான் வராமல் காக்கிறதென்று சொல்லுகிறார். இது பாஸ்டியர் கண்டுபிடித்த உண்மையை உறுதிப்படுத்தும் ருஜுவாகிறது. ஸ்விட்ஜர்லாந்தில் வருஷந்தோறும் இரண்டுலட்ச ரூபாய்க்கதிகக் கிரயம்பெறும் 2500-கால்நடைகள் சேதப்படுகின்றன. ஸ்ரீமது ஸ்ரீயல் 1884-ம் வருஷத்தில் இளமையான கிடாரிகளும், எருதுகளும் ஆக 2199-பிராணிகள் அடைப்பானிரினால் பொருத்தஞ்செய்யப்பட்டனவென்று சொல்லுகிறார். அடைப்பானிர் பொருத்தப்பட்ட பிராணிகளில் 1499-பிராணிகளைப்பற்றி இதுவரை முடிவு தெரிந்திருக்கிறது. இவைகளில் இரண்டு மாத்திரம் தவறிவிட்டன. இவ்விரண்டும், ஒன்று (அடைப்பானிர் பொருத்தும்படி) செய்த காயத்திலிருந்து அளவுக்கு மிஞ்சி இரத்தம் வடியும்போதும், மற்றொன்று உக்கிரமான உஷ்ணதினத்திலும் பொருத்தஞ்செய்யப்பட்டதினால் தவறிவிட்டன. இந்த அதிசொற்பமான தவறுதல், அடைப்பானிர்பொருத்திக் காக்குமுறைக்கு யாதொரு குறைவுமுண்டாக்காமல், அதை ஸ்தாபிக்கவே செய்கிறது. ஈரித்த மேய்ச்சல் நிலம் அடைப்பான்வியாதி உண்டாகுவதற்கு அநுகூலமாயிருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவ்வித நிலங்களில் மேய்ந்த கால்நடைகளில் பொருத்தஞ்செய்யப்பெற்றவை அடைப்பான் வியாதியினின்றும் தப்பிக்கொண்டன; பொருத்தஞ்செய்யப்படாதவைகளோ தாக்கப்பட்டன. இந்தவருஷம் ஸ்விட்ஜர்லாந்தில் 20000-பிராணிகளுக்குப் பொருத்தஞ்செய்யப்போகிறார்கள். பொருத்தஞ்செய்வதில் கருவியை வாலெலும்புவரை போகும்படி செய்யக்கூடாது; அப்படிச்செய்தால் பொருத்துகளில் சில பாகத்துக்கு நஷ்டம் நேரிடலாம்; உஷ்ணகாலத்தில் பொருத்தஞ்செய்தலும் கூடாது.—சென்னை மெயில், 5—2—85.

## ௯-வது அதிகாரம்.

## ரணவைத்தியம்.

அபானப்பிரயோக நீர் (Enema or Clyster.) தனி வெந்நீராகவாவது, சவர்க்காரம் அல்லது எண்ணெய் கலந்த வெந்நீராகவாவது இருக்கும்; இதில் சிலவேளைகளில் மருந்துகள் கலந்து பிரயோகிப்பதும் உண்டு. அப்படிப்பட்ட பிரயோகத்தினால் உண்டாகும் பயன், அந்த மருந்துகளை வாய்வழியாகக் கொடுக்கப்பட்டபோது உண்டாகும்பயனை யொத்திருக்கிறது. பொதுவாக, மலக்கட்டுள்ள சகல பிராணிகளுக்கும், விசேஷமாக, பேதிமருந்தின் செய்கையைத் தாங்கமாட்டாதபடி இளைத்திருக்கிறவைகளும் மலச்சிக்கினால் வருத்தப்படுகிறவைகளுமான பிராணிகளுக்கும் அபானப்பிரயோக நீர் மிகவும் உபயோகமானது. பீர்ச்சாங்குழலினாலாவது, Y இவ்வடிவமுடையதாகச் செய்யப்பட்ட *புன (Funnel) லினாலாவது நீரை அபானத்துட்செலுத்தலாம். (புனலின் கீழேயிருக்கும் குழற்பாகத்தை எண்ணெய் தடவி அபானத்துள் இதமாகச்செலுத்தி, அகன்றவாயிற் சலம் விட்டால், சலம் கடைக்குடலிற் பிரவேசிக்கும். பிரவேசித்த நீர் கொஞ்சநேரம் அங்கு தங்கியிருக்கும்படி புனலை வெளியேவிடாமல் வைத்துக்கொண்டிருந்து பின்பு எடுத்துவிட்டால், உள்ளேயிருக்கிற மலம் தண்ணீரோடு வெளியேவரும். இந்தப்

---

* புனல்.—Y இவ்வடிவமாகச்செய்யப்பட்ட வாயகன்ற குழல். அபானத்துட் சலத்தைப் பிரயோகிப்பதற்குபயோகமாக Y இவ்வடிவமுடையதாக ஒரு தகரப்புனல் செய்துவைத்துக்கொள்வது நன்மை.

பிரயோகத்தை அநேகமுறை செய்வதினால் மலமெல்லாம் வெளியே வந்து மலச்சிக்கு நீங்கிவிடும்.) பிர்ச்சாங்குழலாவது மேற்சொல்லிய புனலாவது இல்லாத போது, இருபுறமும் திறந்த ஒரு தோற்பையை ஒரு மூங்கிற் குழலோடுகட்டி அதைப் புனல்போல உபயோகிக்கலாம்.

* உரைந்தபுண் (Gall cr abrasion.) தோலில் எதுவாவது உரசுதலினாலுண்டாகும் புண். உரசும் பொருள்களின் பெயருக்குத் தக்கபடி உரைந்த புண்கள் பெயரிடப்படும். அவைகள் நுகத்தடியினால் உண்டானால், சாதாரணமாகக் கழுத்துப்புண்ணென்று சொல்லப்படுகிற "நுகத்தடிப்புண்" (Yoke-gall) என்றும், கயிற்றினால் உண்டானால் கயிறு வெட்டுப்புண்ணென்றும் அவைகளையுண்டாக்கும் காரணங்களைக்கொண்டு பெயரிடப்படுகின்றன. மிகச்சாதாரணமான உரைந்தபுண் கழுத்துப்புண்தான். செம்மையாகச் செய்யப்படாமலும், மாட்டின்கழுத்திற்படும் பாகம் போதுமானபடி ஒப்புரவாக்கப்படாமலும் இருக்கிற நுகத்தடியினாலும், வண்டி முன்னும் பின்னும் சமபாரமுடையதாகவிருக்கும்படி கவலையெடாமல் முற்பாரம் அதிகமாகவிருக்க விடுதலினாலும் கழுத்துப்புண் உண்டாகிறது. உரைந்த புண்கள் தோல் தேய்க்கப்பட்டு உரிந்திருப்பதினால் லகுவாகத் தெரிந்துகொள்ளப்படும். இந்தப்புண்கள் மிகுந்த வருத்தத்தைச் செய்கின்றனவென்பது எப்பொழுதும் கவனிக்கப்படாமல் பிராணிகள் மிகுந்த துன்பத்துக்குள்ளாக்கப்படுகின்றன.

பிரயோகம். பிராணிகளுக்கு இந்தப்புண் உண்டாவதற்குக் காரணமாயிருந்த எதையும் அகற்றிப் பிராணியை வேலையில்லாதிருக்கும்படி செய்யவும். பலமான சீனக்

---

* உரைந்தபுண்.—உரஞ்சபுண்—வழிந்தபுண்—வழியுண்டபுண்.

கார நீரையாவது, சாந்தமான கார்பாலிக்கெண்ணெயையாவது பிரயோகிக்கவும். ஈக்கள் அணுகாதபடி புண்ணை மூடவும்.

கட்டு (Ligature.) ரணவைத்தியத்தில் கட்டுதலுக்கு, பட்டு, சணல்நார், ரோமம், பஞ்சு, நரம்பு இவைகளில் எதினுலாவது ஆகிய கயிறு உபயோகமாகும். இக்கயிறுகள் கழலைகளை யகற்றுவதிலும், இரத்தம் வடியும் இரத்தக்குழல்களையும், விஷ ஜெந்துக்கள் கடித்த இடத்துக்குமேலுள்ள பாகத்தையும் கட்டுவதிலும் உபயோகிக்கப்படுகின்றன. கூடியபோதெல்லாம் இந்தக் கயிறுகளைக் கார்பாலிக்கமிலம் கலந்த நீரில் நனைத்து உலரச்செய்து பிரயோகிக்கவேண்டும்.

கழலை (Tumour.) தேகத்தின் எந்தப்பாகத்திலாவது தோன்றி நிலைப்பாக வீங்கியிருக்கும் புடைப்பு; மிருதுவாகவாவது கடினமாகவாவது இருக்கும். கால்நடைகளில் கழலைகள் சாதாரணமாகக் கழுத்தில் * திமிலுக்குச் சமீபமான பாகத்திலுண்டாகும். இந்த இடத்தில் நுகம் அடிக்கடி அழுத்துவதினால் தோலும், அதின் கீழுள்ள பாகங்களும் கொஞ்சங்கொஞ்சமாகச் சின்னமாகி ஒன்றல்லது அதிகமான கழலைகள் உண்டாகின்றன. ஒரு கழலை வன்கழலையா, மென்கழலையாவென்பது தொட்டுப்பார்ப்பதினால் எளிதாக நிச்சயிக்கப்படும்; முந்தியது உளைவுள்ளதாகவும், நீரடங்கியிருப்பதுபோலத் தோற்றுவதாகவும் இருக்கும்; பிந்தியது கட்டியானதாகவும், அழுத்தும்போது பதியாததாகவுமிருக்கும்.

பிரயோகம். பொதுவாகச் சகல கழலைகளையும், விசேஷமாக நெடுங்காலஞ்சென்ற கடினமான கழலைகளையும் கத்தியினால் பரிகரிக்கவேண்டும். இப்படிச் செய்யக்கூடவில்லையானால், கொப்புளமருந்து பிரயோகித்த

---

* திமில் இமிலென்றும் சொல்லப்படுகிறது.

லாவது, சூட்டுக்கோலாற் சுடுதலாவது, காரமருந்து வைத்தலாவது, (கழலையினடியைக் கயிற்றினால்) கட்டியழுக வைத்தகற்றுதலாவது செய்துபார்க்கலாம். கத்தியையுபயோகிப்பதில் பெரிய இரத்தக்குழல்களையாவது வெட்டுப்படாமல் மிகுந்த சாக்கிரதையெடுக்கவேண்டும். ஏதாவது * இரத்தநாளம் அல்லது † நாடிகளின்மேலாவது பக்கத்திலாவது இருக்கிற கழலைகளுக்குக் கத்தியையுபயோகியாமல் வேறெந்தப் பிரயோகமாயினும் செய்யவேண்டும்.

களி (போல்ட்டிஸ் Poultice.) உபயோகத்தின் தன்மைக்குத் தக்கபடி, மா, தவிடு முதலிய பல பொருள்களிலெதினாலாவது இறுகிய கூழ்போலச் செய்யப்படுவது. களிவைத்துக் கட்டுதலினால் வருத்தமும், அழற்சியும் குறைந்து சீக்கிரம் சீழுண்டாகிக் குணம் பிறக்கிறது. தவிடு அல்லது ‡ ஆளிவிதை (Linseed) ப் பொடி கொதிநீரில்போட்டுப் பசைபோலச்செய்யப்பட்டால் நல்லகளியாகும். வெந்த ¶ காணத்தை மசித்து மெல்லிய பையில் (சூடிருக்கும்போதே) போட்டுப் பிரயோகித்தால் நெடுநேரம் சூடு குறையாது.

புண்களுக்குக் கட்டும் களியில் கரிப்பொடியைச் சேர்த்துக்கொண்டால் அது நாற்றம் உண்டாகாமல் தடுத்துக் குணஞ்செய்யும்.

---

* இரத்தநாளங்கள்.—தேகத்தின் பாகங்களிலிருந்து இரத்தத்தை இரத்தாசயத்துக்குக் கொண்டுவரும் குழல்கள்.

† நாடிகள் இரத்தாசயத்திலிருந்து இரத்தத்தைத் தேகத்தின் பாகங்களுக்குக் கொண்டுபோகும் குழல்கள்.

‡ ஆளிவிதை ஆழிவிதையென்றும், அலிசிவிதையென்றும், சிறுசணல்விதையென்றும் சொல்லப்படுகிறது.

¶ காணத்துக்குக் கொள்ளென்றும் பெயருண்டு.

காயங்கள் (Wounds) பலவகைப்படும். அவைகள் எந்தக்காரணத்தால் உண்டாகின்றனவோ, அந்தக்காரணம் பற்றிப் பெயரிடப்படுகின்றன. அவைகள் சாதாரணமாகக் குத்துக்காயம் (Punctured wound), கிழிப்புக்காயம் (Lacerated wound), அடிக்காயம் (Contused wound), வெட்டுக்காயம் (Incised wound), குண்டுக்காயம் (Gunshot wound) என்று வழங்கப்படுகின்றன.

1. குத்துக்காயம் கூர்மையான முனையுள்ள எழுத்தாணிபோன்ற ஆயுதங்களினாலும், முள்ளுகள் கற்றாழையிலே நுனிபோன்றவைகளினாலும் செய்யப்படும் ஊறுபாடு.

2. கிழிப்புக்காயம் புலி நகத்தினாற்கிழித்தல், பிராணி மேலேவிழுந்து இழுக்கப்படுதல்போன்ற காரணத்தினால் உண்டாகிறது.

3. அடிக்காயம் தடிக்கம்புபோன்ற கூர்மையில்லாத ஆயுதங்களினால் செய்யப்படுகிறது.

4. வெட்டுக்காயத்துக்கு மிகக்கூர்மையான கத்தியும் மற்றக்கருவிகளும் காரணமாகவிருக்கின்றன.

5. குண்டுக்காயம் சகலவகைத் துப்பாக்கிக்குண்டுகளாலும் பீரங்கிக்குண்டுகளாலும் உண்டாகிறது.

பிரயோகம். இரத்தம் வடிந்துகொண்டிருந்தால் அதை முதலில் நிறுத்தவேண்டும். பின்பு காயத்தைத் துப்புரவுசெய்து நேரிட்ட தீங்கை நிவர்த்திசெய்யவேண்டும்.

இரத்தக்குழல்களைக் கட்டுவதினால் இரத்தம் வடியாமல் நின்றுவிடும். ஆனால், இது தகுந்த வைத்தியரல்லாத மற்றவர்கள் செய்வது வருத்தமானது. ஆகையால், வேறு உபாயங்களைக் கையாளவேண்டும்.

அவ்வுபாயங்கள் இறுக்கமாக (த்துணிப்பாளங்கள்கொண்டு) கட்டுதல், பஞ்சு சணல்நார் முதலிய மெதுவான வஸ்துக்களைப் புண்ணில் திணித்தல், பனிக்கட்டி அல்லது குளிர்ந்த சலத்தைப் பிரயோகித்தல், சூட்டுக்கோல் கொண்டு சுடுதல் இவைகள்தான். சூட்டுக்கோலானது இரத்தம் வடியும் இரத்தக்குழல்களின் வெட்டுவாயை நன்றாக அடைத்துவிடும். மருந்துகளில், சீனக்காரம், துத்தம், அன்னபேதி, காசுக்கட்டி இவைகளில் ஒன்றைக் குறைந்த தண்ணீரில் அதிகமாகக்கரைத்து அந்த நீரை இரத்தம் வடியும் இடங்களில் பிரயோகஞ்செய்து பார்க்கலாம்.

காயத்தைச் சுத்தசலத்தினால் சுத்திசெய்யவேண்டும். கார்பாலிக்கமிலம் இருந்தால் அதில் ஒரு பாகமும், தண்ணீரில் நூறுபாகமுஞ்சேர்த்து அந்த நீரை உபயோகிப்பது நல்லது. மணல், முள், மரத்துண்டு முதலிய அந்நிய வஸ்து ஏதாவது இருக்கிறதாவென்று கவனமாகப் பார்த்து, இருந்தால் வெளியே எடுத்துவிடவேண்டும்; எடுக்காவிடில், அது அழற்சியுண்டாக்கிச் சௌக்கியமாகாமல் தடைசெய்யும்.

காயத்துக்குப் பரிகாரம் செய்வதைப்பற்றி நாம் இப்போது கவனிக்கவேண்டும். ரணம் பெரிதாகவிருந்தால் அழுக்கில்லாத பட்டுச்சரடு அல்லது வேறு சரடு கொண்டு தைக்கவேண்டும். இது கூடிய சீக்கிரத்தில் செய்யப்படவேண்டும்; இல்லையானால் பின்பு காயத்தின் இரண்டு ஓரங்களையும் ஒட்டும்படி செய்வது நிச்சயமாய் வருத்தமாகிவிடும். தைப்பது எவ்விதம் செய்யவேண்டுமென்பது சனங்களுக்குச் சாதாரணமாகத் தெரியாததாகையால், அதை எப்பொழுதும் செய்யமுடியாது. ஆகையால், கவனமாகக் காயத்தின் இரண்டு ஓரங்களையும் நன்றாகச்சேரும்படி செய்து அவைகள் விலகாதபடி (துணிப்பாளங்கள் கொண்டு) கட்டவேண்டும்.

அடிக்காயங்கள் உள்ள பாகங்கள் அடிபட்டிருப்பதி ஞல் அவைகளில் அதிகமான அல்லது குறைவான வீக்கம் உண்டாகும். வீக்கந்தணியும்படி வெந்நீரில் நனைத்த துணியினல் ஒற்றடங்கொடுக்கலாம்; அல்லது களிவைத்துக் கட்டலாம்.

ஆழமாக இல்லாத லேசான காயங்களைச் சுத்தமாக வைத்து, அவைகளின்மேல் * துவர்நீர் (Astringent lotion) அல்லது * புண்ணாற்றும் நீரைப் (Healing lotion) பிரயோகஞ்செய்வதே போதுமானது.

ரணம் விஸ்தாரமானதாகவும் பிராணியைச் சில நாள் கஷ்டப்படும்படி செய்யக்கூடியதாகவும் இருந்தால், பிராணிக்குப் பேதிமருந்து கொடுத்துக் குடலைச் சுத்தஞ்செய்யவேண்டும். அதன் ஆகாரத்தையும் குறைக்க வேண்டும். ஒரு பிராணி இயல்பாகச் செய்துகொண்டிருந்த தேக முயற்சியைச்செய்ய மார்க்கமில்லாமற் போனபோதாவது, அது வழக்கமாக உள்ள வேலையைச் செய்யாமலிருக்கும்போதாவது அதற்குக் கிரமமாகக் கொடுக்கப்படும் ஆகாரத்திலும் குறைந்த ஆகாரமே கொடுக்கவேண்டும்.

ரணங்குணமாகும்படி (ங-வது அதிகாரத்திற் சொல்லியபடி செய்யப்பட்ட) கார்பாலிக்கெண்ணெய், கார்பாலிக்கு நீர் (Carbolic lotion), துத்தநீர், சீனக்காரநீர், சாயக்காடியுப்புநீர், வெள்ளைத்துத்தநீர் இவைகளில் எதையாவது தினந்தோறும் இரண்டுமுன்றயாவது பிரயோகஞ்செய்யவேண்டும். ரணத்தின் ஓரங்கள் மிகச்சிவந்து தோன்றிச் சீக்கிரங்குணமாகாமலிருந்தால், சுத்தமான கார்பாலிக்கமிலத்தையாவது துத்தப்பொடியையாவது

---

* துவர்நீர், புண்ணாற்றும் நீர் இவைகளைச் செய்யும்முறை ங—வது அதிகாரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

இரண்டு மூன்று முறை பிரயோகிக்கவேண்டும். இந்தப் பிரயோகத்தினால் ரணத்தில் குணப்படும் முயற்சியுண்டாகும்.

எப்பொழுதும் ஞாபகத்தில் வைக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு; அதாவது ஊறுபட்ட பாகங்களில் ஈக்கள் உட்கார இடங்கொடாதிருப்பதே; இடங்கொடுத்தால் அவைகள் அந்தப்பாகங்களில் முட்டையிட்டுவிடலாம்; அம்முட்டைகளிலிருந்து (வெண்ணிறமான சிறிய) புழுக்கள் உண்டாகிச் சதையைத்தின்று ரணங் குணமாகுவது கஷ்டமாகும்படி செய்துவிடலாம்.

ரணத்தில் ஈக்கள் உட்கார்ந்து அரிப்புண்டாக்கும்படி இடங்கொடுப்பதினாலும், அதில் குளிர்ந்த காற்று வீசும்படி பிராணியை வைப்பதினாலும் தாடைச்சன்னி (Lock-Jaw) என்ற பிராணபாயமான வியாதியுண்டாகலாம்.

காரத்திரி (Seton.) நாடாவாகவாவது கயிறாகவாவது இருக்கலாம். இது * காரத்திரியூசி (Seton needle) யிற் கோர்த்து அதனால் தோலின்கீழ்ச் செலுத்தி வெளியே இழுக்கப்படுகிறது. காரத்திரிகளின் செய்கை பலமான கொப்புளமருந்தின் (Blister) செய்கையைப்போலவேயிருக்கிறது; மேலும் அவைகளின் செய்கை எவ்வளவுகாலம் ஆவசியகமாயிருக்குமோ அவ்வளவு காலமும் இருக்கும்படி செய்யப்படக்கூடியதாகவிருக்கிறது. காரத்திரியைப் பிரயோகிக்கும் வகை மிகவும் லேசானது. தோலில் ஒரு அங்குல நீளம் கீறி,

---

* இரும்பினாற்செய்த காரத்திரியூசி இல்லையானால், அரை அங்குல அகலமும், ஆறுமுதல் பன்னிரண்டங்குல நீளமும், எருமைத்தோலின் திண்ணமும் உள்ளதாக மூங்கிலினால் ஊசி செய்து உபயோகிக்கலாம்.

முன்னமே நாடா கோக்கப்பட்டிருக்கிற ஊசியைப் புகுத்து, அது வெளிப்படவேண்டிய இடத்திலும் கீறி, ஊசியை வெளியே இழுத்துக் கழற்றியெடுத்துவிட்டு நாடாவின் இரண்டு முடிவிலும் தடிப்பான முடிச்சுப்போடவேண்டும். வெறுமுடிச்சுக்குப் பதிலாகக் குச்சிவைத்து முடிவது மிகவும் நல்லது. காரத்திரியின் செய்கை குறையாமலிருக்கும்படி அதில் ஏதுவாயினும் கொப்புள்மருந்து தடவி அதை ஊடே ஊடே அசைத்துவிடவேண்டும். அதைத் தினந்தோறும் துப்புரவுசெய்து கொப்புளமருந்து தடவிக்கொண்டு வரவேண்டும். ஆவசியகமானால், பழந்திரியை எடுத்துவிட்டுப் புதுத்திரி போடவேண்டும். இயற்கைக்கு விரோதமாக எலும்பு வளர்ந்திருப்பதற்கும் கழலைகளுக்கும் காரத்திரிகளைப் பிரயோகிக்கலாம். (வளர்ந்திருக்கும் எலும்புக்கு மேலுள்ள தோலில் திரி கோக்கப்படவேண்டும்.)

கிட்டி (Clamps) விதையெடுத்தல், கழலையையழுகி விழச்செய்தல்போன்றவைகளில் உதவும்; மரத்தினலாவது இரும்பினலாவது செய்யலாம். இவ்வதிகாரத்தில் விதையெடுப்பதைப்பற்றி விவரிக்கும்போது சொல்லப்பட்ட கிட்டி இரும்புக் கிட்டிதான். அது இந்தியாவெங்கும் உபயோகப்படும் பாக்குவெட்டி (Nut-crackers) யை மிகவும் ஒத்திருக்கும்; ஆனல் அதிலுள்ள இரண்டு முனையும் மொட்டையானதாக இருக்கும்.

* கிருமிகள் (Maggots) மிகச்சிறிய வெண்மையான புழுப்போன்ற செந்துக்கள். காயங்களிலாவது புண்களிலாவது ஈயாடும்படி இடங்கொடுப்பதினல் அவைகள்

---

* ஒரு புண்ணிற் கிருமிபற்றியிருந்தால் அதில் "செத்தைவைத் திருக்கிறது" என்று சொல்வதுண்டு.

முட்டையிட, அம்முட்டையிலிருந்து கிருமிகள் பிறக்கின்றன. இவைகள் பிராணிக்குடையவர்கள் ரணமுள்ள பிராணிகளைப்பற்றிக் கவலையெடாததினுல் உண்டாகின்றன. கவலைபெடுத்தால் இவைகள் விலக்கப்படக்கூடியவைகள்தான். கிருமிகள் அவைகளிருக்கும் புண்ணில் அரிப்பெடுக்கச்செய்து, சதையைத்தின்று, அழற்சியுண்டாக்குகிறபடியால், சில சமயங்களில் மிருந்த அபாயமுள்ளவைகளாகின்றன.

பிரயோகம். காயமாவது புண்ணாவது உண்டானுல் ஈயாடாமல் அதை மூடிவைப்பது மிகச்சிலாக்கியமான தடுக்கும் பிரயோகம். மூடுவது கஷ்டமாகவிருந்தால் விசிறியினுல் வீசுதலினுலாவது கார்பாலிக்கெண்ணெய் போன்ற மருந்துகளைப் பூசுதலினுலாவது ஈ அணுகாமல் தடுக்கலாம். விரல்களினுலாவது *சாவணத்தினுலாவது எடுக்கக்கூடிய கிருமிகளையெல்லாம் எடுத்துவிடவும். பின்பு கார்பாலிக்கமிலம் ஒருபாகமும் கருப்பூரம் பன்னிரண்டு பாகமும் சேர்த்துச்செய்த மருந்தையாவது, கார்பாலிக்கமிலம் ஒருபாகமும் வேப்பெண்ணெய் இருபது பாகமுஞ்சேர்த்துச்செய்த மருந்தையாவது பிரயோகிக்கவும். கருப்பூரத்தயிலம் தனியாகவாவது, எண்ணெயுடன் சேர்க்கப்பட்டாவது உபயோகிக்கப்பட்டால் நன்மை செய்யும்.

குளம்பழுகல் (Foot-rot.) செம்மறியாடுகளுக்கும் வெள்ளாடுகளுக்கும்வரும் ஒருதொற்றுவியாதி. பிராணியைத் தொற்று அணுகிச் சற்றேறக்குறைய ஆறுநாளில் வியாதி தோன்றும். இதனுல் முதலில் ஒரு கால்மாத்திரம் பிடிக்கப்படலாம்; ஆனுல் பின்பு வெகு சீக்கிரத்தில் மற்றக்கால்களும் நோவடையும். ஒரு கால் அல்லது

* சாவணம்.—இடுக்கி—சிறு குறடு.

அதிகக்கால்கள் கொண்டுதல் இவ்வியாதியின் ஆரம்பத்தில் விசேஷமாகக் குறிக்கப்படவேண்டிய குணமாகவிருக்கிறது. காலில் சூடும் வருத்தமும் உண்டாகும். குளம்பின்மேலுள்ள தோல் வீங்கிக் கொப்புளிக்கும். கொப்புளங்களில் சீக்கிரம் சீழ்பிடித்து மஞ்சள் வருணமும் மிகுந்த துர்க்கந்தமுமுள்ள நீர் வடியும். கொஞ்சநாளில் பொருக்கு (Scab or crust) உண்டாகும். பின்பு ரணம் முதிர்ந்து குளம்பிற் சிலபாகமாவது முழுமையுமாவது பிரிந்து விழுந்துவிடும். பிராணி மந்தமுள்ளதாகவும், காய்ச்சலுள்ளதாகவும், தீனிதின்னப் பிரியமில்லாததாகவுமிருக்கும்; சரியான பிரயோகஞ் செய்யாவிட்டால் சீக்கிரம் மெலிந்து மிகுந்த துன்பமடைந்து சாகும்.

பிரயோகம். நோய்த்த பிராணிகளைச் சுகமுள்ள பிராணிகளினின்றும் பிரித்துப் பிரத்தியேகமாக வைப்பதும், ஆரம்பத்திலேயே பிரயோகஞ்செய்வதும் வியாதியை அநேகமாய்த்தடுத்துக் குணஞ்செய்யக்கூடிய மார்க்கங்களாகவிருக்கின்றன. ஆரம்பத்தில் பிரயோகஞ் செய்யாமல் அசட்டையாயிருந்துவிட்டால், பின்பு வியாதியைக் குணப்படுத்தலாமென்னும் நம்பிக்கை வைக்கவேண்டியதில்லை. காலை நன்றாகச் சுத்திசெய்து பலமான அபசஞ்சாரிகளிலொன்றைப் பிரயோகிக்கவும். குளம்பைவிட்டு அதின் பாகங்கள் பிரிந்துகொண்டிருந்தால், அந்தப்பாகங்களையகற்றிவிடவும். துத்தங்கலந்த நீரையுபயோகிப்பதினால் மிகுந்த பிரயோசனமுண்டு. புண்ணில் ஈயாடாமல் தார் எண்ணெய் பூசவேண்டும். * நீற்றிய சுண்ணாம்பு (Slaked lime) காய்ந்ததாக இருப்பதை ஒரு அங்குல கனம் நிலத்தில் பரப்பி வாரத்தில்

* நீற்றிய சுண்ணாம்பு "தாளித்த" சுண்ணாம்பென்றும் சொல்லப்படுகிறது.

இரண்டுமுறை அதின்மேல் வியாதிப்பட்ட ஆடுகள் சௌக்கியமாகும்வரை நடக்கும்படி செய்யவும். இது ஒவ்வொரு ஆட்டுக்கும் தனித்தனி பிரயோகஞ்செய்வது அசாத்தியமாகுஞ் சமயங்களில் முக்கியமாக உபயோகமாகும். அயலில் இவ்வியாதி பரவிக்கொண்டிருக்குங் காலங்களில் ஈரமான நிலங்களில் ஆடுகள்போய் மேயாதபடி தடுக்க வேண்டியது முக்கியமானது.

குளம்புச்சிலந்தி (Foul) கால்நடைகளின் குளம்புப் பிளவுகளின் மத்தியில் அழுக்கடைய விடுதலினாலும், பொதுவாகக் குளம்பைப்பற்றிக் கவலையெடாததினாலும் உண்டாகும் நோய். குளம்பின்மேல் மிகுந்த சூடும் வீக்கமும் இருக்கும். பிராணி நொண்டும். நீண்டகாலம் பரிகாரஞ்செய்யவில்லையானால், சீழ் உண்டாகிக்குணப்படுவது தாமதமாகும். இவ்வியாதியினால் பிராணி இறப்பதும் உண்டு. வியாதி கொரமாகவிருந்தால் காய்ச்சலையுண்டாக்கிப் பிராணியை மிகவும் மெலியச்செய்யும்.

பிரயோகம். குளம்பின் பிளவு மத்தியில் அழுக்கு முதலிய அந்நிய வஸ்துக்களிருப்பதையும், குளம்பு அளவுக்கு அதிகமாக உள்நோக்கி வளர்ந்து உறுத்திக்கொண்டிருப்பதையும் அகற்றிக் குளம்பை வெந்நீர்கொண்டு பூரணமாகச் சுத்தமாக்கிச் சூடுள்ள களிவைத்துக் கட்டவும். பின்பு (சீனக்காரத்தூள்போன்ற) துவர் மருந்துகளையும், கார்பாலிக்கெண்ணெய்போன்ற அபசஞ்சார மருந்துகளையும் பிரயோகிக்கலாம். பிரயோக ஆரம்பத்தில் பேதிமருந்து கொடுப்பதினால் நன்மையுண்டாகும். வியாதி தீரும்வரை ஆகாரத்தைக் கொஞ்சங் குறைத்துக்கொடுக்கவும். ஈயாடாதபடி துணிப்பாளத்தினால் குளம்பை மூடிக்கட்டவும்.

கொப்புளமருந்துகள் (Blisters) பிராணிகளுக்குச் செய்யப்படும் வைத்தியத்தில் ஏராளமாக உபயோகப்படுகின்றன; அவைகள் வருத்தம், அழற்சி, பலவகை

முடங்கள் இவைகளை நிவர்த்திப்பதில் மிகுந்த உதவி யைச் செய்கின்றன. கொப்புளமருந்துகள் அநேக மிருக்கின்றன. அவைகளில் சீன எரிவண்டு (Chinese Fly), ஸ்பானிய எரிவண்டு (Spanish Fly), கடுகு, கருப் பூரத்தயிலம் இவைகள் சிலாக்கியமானவை. பலமாக வாவது லேசாகவாவது கொப்புளமுண்டாக்கவேண்டிய தற்குத் தக்கபடி கொப்புளமருந்தின் காரம் ஒழுங்குபடு த்தப்படவேண்டும். (௫-வது அதிகாரத்தில் கொப்புள மருந்துகளைப்பார்க்க.)

கொப்புளமருந்து பிரயோகிக்கப்படவேண்டிய பாக த்திலுள்ள மயிரைக் கத்தியினாலாவது கத்தரியினாலாவது அகற்றித் தோலை நன்றாக (த் தண்ணீரினால்) சுத்திசெய்து (அது உலர்ந்தபின்) அதின் திண்மைத்துக்குத் தக்க படி கால்மணிமுதல் அரைமணிவரை மருந்தை நன்றா கத் தேய்க்கவேண்டும். தேய்க்கப்பட்ட பாகத்திலிருந்து பொசியும் நீர்படுக் கொப்புளமுண்டாகாதபடி அதற் குக் கீழேயுள்ள பாகத்தில் கொழுப்பல்லது எண்ணெய் தடவவேண்டும். வயிறு அல்லது நெஞ்சைக் கொப்பு ளிக்கும்படி செய்யவேண்டியிருந்தால் சொற்ப பாகத் தில்தான் கொப்புளமருந்து தேய்க்கவேண்டும். முழு மையும் கொப்புளிக்கும்படி செய்துவிட்டால் பின்பு இரண்டாம்முறை கொப்புளமருந்து போடும்படி ஒரு வேளை நேரிடும்போது முன் (கொப்புளமருந்து) பிர யோகஞ்செய்த இடத்திலேயே திரும்பப் பிரயோகஞ் செய்வதில் அநேகமாய் யாதொரு பிரயோசனமுமிராது.

கொப்புளமருந்து பிரயோகிக்கப்பட்டிருக்கும் பா கத்தைப் பிராணி கடிக்கவாவது தேய்க்கவாவது செய் யாமல் கவலையெடுக்கவேண்டும். அறியாமையினாலாவது கவலையீனத்தினாலாவது இவ்விதம் கவலையெடுக்கப்படாத பிராணிகளின் தேகத்தில் அவலட்சணமான தழும்புகள்

உண்டாக்கியிருக்கின்றன. மருந்து பிரயோகிக்கப்பட்டு இரண்டல்லது மூன்றுநாள் சென்றபின் கொழுப்பையாவது எண்ணெயையாவது கவனமாகப் பிரயோகிக்கவும்; சவர்க்காரமுந் தண்ணீருங்கொண்டு புண்ணை (த் தினந்தோறுஞ் சுத்திசெய்து) உலர்ந்தபின் திரும்பக் கொழுப்பல்லது எண்ணெயைப் பிரயோகிக்கவும்.

ஒரு இடத்தில் இரண்டாம்முறை கொப்புளமருந்து பிரயோகிப்பது ஆவசியகமாகவிருந்தால், முதற்பிரயோகமானபின் மூன்றுவாரமாவது சென்றபின்புதான் இரண்டாம் பிரயோகஞ் செய்யவேண்டும்.

சுளுக்கு (Sprain). [தேகத்தின் அசையுந்தொழிலைச்செய்யும் கருவிகளாகவும் சாதாரணமாகச் சதையென்று சொல்லப்பட்டவைகளாகவும் இருக்கிற] தசை (Muscle) களாவது, [அவைகளின் பாகமாகி அவைகளைப் பொருத்து (Joint) களோடும் இணைக்கும்] தசைநார் (Tendon) களாவது, (பொருத்துகளிலுள்ள எலும்பின் அந்தங்களை அவைகளின் இடம்விட்டுப்பெயராமல் இருக்கும்படி செய்துகொண்டிருக்கும்) பொருத்துப்பந்தனி (Ligament) களாவது விசையாக இழுக்கப்படுதலினாலுண்டாகும் நோவு சுளுக்கென்று சொல்லப்படுகிறது. மிகச்சாதாரணமாகப் பொருத்துப்பந்தனிகளில்தான் சுளுக்குண்டாகிறது. (குளம்புக்குமேலிருக்கும்) காற்குழைச்சு அடிக்கடி சுளுக்குக்கிடமாகிறது. நொண்டுதலினாலும், தொடுவதில் சூடாகவும் வருத்தமுள்ளதாகவும்இருப்பதினாலும் காற்குழைச்சு சுளுக்கியிருப்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

**பிரயோகம்.** பிராணியை (வேலையில்லாமல்) பூரணமாய் ஓய்வாகவிருக்கும்படி செய்து, (சுளுக்கியிருக்கிற பாகத்தில்) வெந்நீர்ப்பிரயோகஞ்செய்வதும், இறுக்க

மாகத் துணிப்பாளங்கொண்டு கட்டுவதும், (ரு-வது அதிகாரத்திற் சொல்லியிருக்கிற) சவர்க்காரப்பூச்சுத்தயிலம் (Soap Liniment) கொண்டு நன்றாகத் தேய்ப்பதும் நல்ல பிரயோகங்கள். லேசான சுளுக்குகளில் இந்தப்பிரயோகங்களே போதுமானவைகளாகவிருக்கும்; ஆனால் சிலவாரங்கழிந்தும் சுளுக்கு குணப்படுவதாகத்தோன்றவில்லையானால், பலமான கொப்புளமருந்தைத் (Blister) துபயோகிக்கவும்; இதினாலும் குணம் பிறக்கவில்லையானால், சூடுபோடவும். சுளுக்கின பாகத்துக்கு உட்னே பிரயோகஞ்செய்வதும், பிராணி பூரணமாக வேலையில்லாமலிருக்கும்படி செய்வதும் விசேஷமாகக் கவனிக்கவேண்டிய முக்கியமான விஷயங்கள். பிராணி வேலையில்லாமலிருக்கும்போது (முன் சொன்னபடியே) அதற்கு ஆகாரத்தைக் குறைத்துக்கொடுக்கவேண்டும்.

சூடுபோடுதல் (Actual cautery) சிவக்கக்சுட்ட சூட்டுக்கோலால் தோல் கருகித் தீய்ந்துவிடும்படி பலரூபமாகப் பல வியாதிகளில் செய்யப்படுகிறது.

சுளுக்கு, எலும்பு சுபாவத்துக்கு விரோதமாக வளர்ந்து பெருத்திருத்தல் (Bony enlargement), பலவகை முடம் இவைகளுக்குச்செய்யும் பிரயோகங்களில் சூட்டுக்கோல் சரியாக உபயோகிக்கப்பட்டால் மிகுந்த நன்மையைச் செய்யும். அதை மிகவும் அடிக்கடியாவது (தேகத்தில்) விசாலமாயாவது பிரயோகிப்பதினால் கெடுதியுண்டாகும். வியாதிப்பட்ட இடம்மாத்திரம் சூடுபோடப்படவேண்டும். இத்தேசத்தில் உடையவர்கள் சிலர் பிராணிக்கு அநுகூலமுண்டாகுமென்று நினைத்து அதன் தேகமெல்லாம் சூடுபோட்டு அநாவசியமான வருத்தத்தையுண்டாக்குகிறார்கள். சூட்டுக்கோல் அளவுக்கு மிஞ்சிக் காய்ச்சப்பட்டிருந்தால் அது தோலைத்துளைத்துச்சென்று இரத்தக்குழல்களைத் திறந்துவிடுவதும்

அல்லாமல், அந்தக்கேடான தழும்பையுண்டாக்கும், சூடு மத்தியதரமானதாக இருக்கவேண்டும். சூட்டுக்கோலைக் கூடியவரை லேசாகவும் சீக்கிரமாகவும் பிரயோகிக்க வேண்டும். சூடுபோடப்பட்ட பாகத்தில் தார எண்ணெய் தடவிப் பிராணி அதைக்கடியாதபடி தலையையுயர்த்திக்கட்டிச் சிலநாள் அந்த நிலைமையிலேயேயிருக்கும்படி செய்யவும். (இப்படிக் கட்டியிருக்குங் காலத்தில் ஒரு கச்சந்தி அல்லது அணியைப் பிராணிக்கெதிரில் கட்டி அதில் ஆகாரத்தைப்போட்டுப் பிராணியைப் போஷிக்கவும்.) ஒருவாரஞ்சென்றபின் கொழுப்பு அல்லது எண்ணெயை மெதுவாகவும் சாக்கிரதையாகவும் பிரயோகிக்கவும். இதனால் பொருக்கு இளக்கமாகிக் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழேவிழுந்துவிடும். சூடுபோட்ட இடத்தில் சதை துருத்திப் புடைத்துக் கொண்டிருந்தால், சினக்காரப் பொடியையாவது துத்தப்பொடியையாவது பிரயோகிக்கவும்.

தப்பைகள் (Splints) மரம், தகரம், அல்லது தோலினால் செய்யப்பட்டு முறிந்தவெலும்பின் உடைந்த தலைகளை அவைகளின் தானத்தில் ஒன்றாகப்பொருந்தியிருக்கும்படி செய்வதற்காக உபயோகிக்கப்படுகின்றன. தோலையூறுபடுத்தாதபடி தப்பைகள் மெதுவாக இருக்கின்றனவாவென்பதைப்பற்றிக் கவலையெடுக்கவேண்டும்.

*தாடைச்சன்னி (Tetanus or Lock-Jaw) † நரம்பு (Nerve) களைத் தாக்குகின்ற மிகப்பிராணபாயமான வியாதி. இது காயங்களினாலாவது, வேறு அறியக்கூடாத

---

* தாடைச்சன்னி.—ஏர்ப்பு.

† நரம்பு.—தேகத்தின் உணர்ச்சிக்கும் அசைவுக்கும் ஆதாரமாகவும், வெண்மையான இழை (Fibre) களாற் செய்யப்பட்ட கொடிபோன்றதாகவும் இருப்பது.

காரணங்களினாலாவது உண்டாகலாம். இவ்வியாதியடைந்த பிராணி அதிகமாக அசையமாட்டாது; அசையும்படி கட்டாயப்படுத்தினால், மிகவும் விறைத்து நடக்கும்; வாயிலிருந்து நுரைத்த உமிழ்நீர் வடியும். தலையைக் கையினால் உயர்த்தினால் நடுக்கமுள்ள இழுப்பு உண்டாகும். வியாதி அதிகரிக்க அதிகரிக்கத் தாடைகள் பலமாய் நெருங்கிப் பூண்டுபோம். கடைசியாக வாய்க்குள் எதுவும் செலுத்துவது கடினமாகிவிடும். காய்ச்சல் அதிகமாகவிருக்கும். பிராணி களைப்பினால் சொற்பநாளிலிறந்துவிடும்.

பிரயோகம். இவ்வியாதியைக் குணப்படுத்தத்தக்க குறிப்பான பரிகாரம் (Special cure) இதுவரை கண்டுபிடிக்கப் படவில்லை. மிகவுஞ்சொற்ப பிராணிகள்தான் இவ்வியாதியினால் தாக்கப்பட்டபின் பிழைத்திருக்கின்றன. பிராணியை வெளிச்சமுஞ் சந்தடியுமில்லாத ஒதுக்கிடத்தில் நிறுத்திக் கஞ்சிபோன்ற சலரூபமான ஆகாரங்களை அதற்குச் சமீபத்தில் வைக்கவும். பலமான பேதிமருந்தை அதிகமாகக் கொடுக்கவும். இழுப்பைச் சாந்தப்படுத்தும்படி அபினும் கஞ்சாவும் கொடுக்கவும். பிராணி குணமடைந்தால் அதற்கு முக்கியகாரணம் பூரணமான அமரிக்கையும் கவனமான போஷணையுமென்றே நினைக்கவேண்டும். இவ்வியாதியில் மருந்தினால் அநேகமாய்ப் பிரயோசனமுண்டாகிறதில்லை.

தேள்கொட்டல் (Scorpion-sting). இதனால் சிறிய பிராணிகள் தவிர வேறு பிராணிகளுக்கு அபூர்வமாகத்தான் மரணம் உண்டாகிறது. ஆனால் தேள் விஷத்தினால் மிகுந்த கடுப்பும் வருத்தமும் உண்டாவதைப்பற்றிச் சந்தேகமில்லை. தேள்கொட்டிய இடத்தைத் தெரிவது வருத்தமல்ல; அந்த இடத்தில் வீக்கம், சூடு, வருத்தம் இவைகளுடன் துடிப்பும் இருக்கும். கொட்டுப்

பட்ட இடம் காலிலிருந்தால், அதற்கு நொண்டுதல் எப்போதும் அடையாளமாக இருக்கும்.

**பிரயோகம்.** கொட்டுண்ட இடத்துக்குமேல் கட்டவும். உற்சாகமருந்து கொடுக்கவும். காயத்தில் கொடுக்கிருந்தால் அதைச் சாவணத்தினாலாவது வேறுவகையினாலாவது எடுத்துவிடவும். இபிகாக்கு (Ipecacuanha) வேர்ப்பொடியில் காரமுள்ள நவச்சார நீர் (Strong Liquor Ammoniæ) போதுமானபடி விட்டுக்கலந்து கொட்டிய இடத்தில் பற்றாகப் பூசவும். இது செய்யக்கூடவில்லையானால் நவச்சாரத்தைக் (கொஞ்சம் நீர் கலந்த) சுண்ணாம்புடன் சேர்ந்து மதித்துக் கொட்டுவாயில் சிலபோது பூசவும்.

**தையல்** (Sutures or stitching) காயங்களின் ஓரங்களைப் பொருத்தி அவைகள் பொருந்தின நிலைமையிலேயே இருக்கும்படி செய்வதற்கு உபயோகமாகவிருக்கிறது. இவ்விதம் தைப்பதற்குப் பட்டுநூல், நரம்பு, கம்பி, சாதாரணமான பஞ்சுநூல் இவைகளில் எதுவும் உதவும். இழை ஏற்றுவதற்கு வளைவுள்ள ஊசி (Suture needle) வசதியாகவிருக்கும்; அது இல்லையானால், தோலைத் துளைக்கக்கூடிய பலமுள்ள எந்த ஊசியும் போதும். இழையைக் கூடுமானபோதெல்லாம் கார்பாலிக்கமிலம் கலந்த நீரில் தோய்த்து உபயோகிக்கவேண்டும்.

**பாளங்கட்டுதல்** (Bandaging). காலில் நேரிடும் எவ்வகையான ஊறுபாடுகளிலும் சுளுக்கிலும் துணிப்பாளம் அல்லது பிளானல் (Flannel) பாளங்களை மிகுந்த இறுக்கமில்லாமல் ஸ்திரமாகக் கட்டுவதினால் நன்மையுண்டாகும். அவைகள் மூன்றுமுதல் நாலு அங்குல அகலமும், நாலுமுதல் ஆறு (சாதி) அடி நீளமும் உடையவைகளாகவிருக்கவேண்டும். பாளத்தின் ஒரு தலையை எட்டு

அல்லது பத்து அங்குல நீளம் நேர்பாதியாகக் கிழித்துக் (கிழிபட்ட இரண்டந்தங்களையும் ஒன்றுனொன்றாக மாட்டி ஒருமுடிச்சுப்போட்டுக்) கொள்ளவேண்டும். பாளங் காலிற்சுற்றப்பட்டபின் இந்த இரண்டந்தங்களும் ஒன்றுக்கொன்று மாறாகச்சுற்றப்பட்டுக் கடைசியில் முடிச்சுப்போட உதவும். ஒருபாளத்தைச் சரியாகக் கட்டுவதற்குப் பின்வருகிறபடி செய்யவேண்டும். கிழிபட்ட பாகத்தை மடக்கிக்கொண்டு, அந்தத் தலையிலிருந்து பாளத்தை இறுக்கமாக (ப்பாய்சுருட்டல் போல) ச் சுருட்டிக்கொள்ளவேண்டும். இப்படிச் சுருட்டிய சுருட்டைக் காலிற்சுற்றும்போது சுருட்டு அவிழ்ந்துகொண்டுவந்து கிழிபட்ட பாகம் மிஞ்சியவுடன் அதன் இரண்டுபாகங்களையும் ஒன்றுக்கொன்று மாறாகச் சுற்றி முடிச்சுப்போடவேண்டும். திண்ணமான கம்பளப் பாளம் (நனைக்கப்பட்டால்) மிகுந்த தண்ணீர் பிடிக்கும். ஆகையால் காலில் எந்தப்பாகத்திலாவது தண்ணீராவது வெந்நீராவது பிரயோகஞ்செய்யவேண்டியிருந்தால், கம்பளப் பாளத்தைக்கட்டித் தண்ணீரல்லது வெந்நீரினால் நனைக்கலாம்.

**பிதுக்கம்** (Hernia or rupture) எதாயினும் ஊறுபாட்டினாலாவது, (இருமுதல், மலசலங்கழித்தல், பெரும் பாரத்தையிழுத்தல் அல்லது சுமத்தல் முதலிய செய்கைகளில்) மிகுந்து முக்குதலினாலாவது குடல் அல்லது மற்ற உறுப்புகளின் உறைகளில் துவாரம் உண்டாக, அத்துவாரங்களின் வழியாய் அவ்வுறுப்புகள் பிதுங்கிவிடலாம். சாதாரணமாக வயிற்றின் பின்பாகத்தில் (அதாவது பின்கால்களுக்குச் சமீபித்த பாகத்தில்) பிதுக்கம் நேரிடுகிறது. இதை வயிற்றில் கழலைபோலப்புடைப்புண்டாவதினால் லகுவாகத் தெரிந்துகொள்ளலாம். கன்றுகளில் கொப்பூழ்ப்பிதுக்கம் (Umbilical hernia) சாதாரணமாக உண்டாகலாம்.

பிரயோகம். பிதுக்கத்தினால் சாதாரணமாக மிகுந்த வருத்தம் உண்டாகிறதில்லை; ஆகையால் அதற்குப் பிரயோகம் அநேகமாய் அவசியமில்லை. ஆயினும் பிரயோகஞ் செய்யவேண்டியிருந்தால், புடைத்திருக்கிற பாகத்தை உள்ளே தள்ளி அதன் சவ்வில் சேர்த்துச் சிறு மெத்தை அல்லது துணியைத் துக்கட்டி அந்த இடம் விட்டுப் பெயராதபடி செய்யவும்.

புண் (Ulcer). தேகத்தில் எந்தப்பாகத்திலாவது அழற்சியுண்டாக, அவ்வழற்சியதிகரிப்பினால புண் உண்டாகிறது. புண்கள் பலவகைப்படும். சில புண்கள் லகுவாகவும், சில புண்கள் பிரயாசமாகவும் குணமடையும். பிரயாசமாகக் குணப்படும் புண்கள் விசேஷ காரணங்களாலுண்டாகி மிகுந்த தொந்தரவு செய்கின்றன. அவைகளைச் சௌக்கியப்படுத்துவதற்கு மிகுந்த பொறுமையும் பலமான மருந்தும் வேண்டும். பிராணியின் தேகத்திலெந்தப் பாகத்திலாவது புண்பாடு (Ulceration) உண்டாயிருப்பதாகத் தெரியவந்தவுடன் அதன் விஷயத்தில் கவனம் செலுத்தவேண்டும்; ஏனெனில், புண்பாடு அநேக சமயங்களில் தேகத்திலுள்ள மற்ற வியாதியைக்குறிக்கும் அடையாளமாகவும், பரவித் தானுள்ள பாகத்தை நாசஞ்செய்யக்கூடியதாகவுமிருக்கிறது.

புண் முதலில் ஒருவகை உலர்ந்த புண் (Abrasion) ஆகத்தோன்றி வட்டவடிவாக வரவர விசாலித்து வளரும். அதற்கும் அதைச்சுற்றியுள்ள வியாதிப்படாத பாகத்துக்கும் மத்தியில் மோதிரம் போன்ற விளிம்பு இருக்கும். அது சிவந்த நிறமுடையதாகவிருக்கும். அதிலிருந்து வடியும் சீழ் நாற்றமுடையதாகவாவது, நாற்றமில்லாததாகவாவது இருக்கலாம். இளைத்த பிராணிகளில் புண் உண்டாவது அதிகச் சாதாரணமாகவிருக்கிறது.

பிரயோகம். ஆரம்பமுதல் கடைசிவரை ஒருநாள் காரமருந்து (Caustic) ம், மறுநாள் துவர்ப்புமருந்து (Astringent) மாக மாறிமாறி உபயோகிக்கும் பிரயோகத்தைப்பார்க்கிலும் நன்மையைச்செய்வதுவேறொன்றுமில்லை. காரமருந்துகள் புண்ணில் குணப்படும் முயற்சியுண்டாக்குகின்றன. துவர்ப்பு மருந்துகள் புண்ணிலிருந்து பொசியும் நீரை யிறுகச்செய்கின்றன. காரமருந்துகள் கிடைக்கவில்லையானால் சூட்டுக்கோலைப் புண்ணின்மேல் எச்சரிக்கையோடு அதிகமாக அழுத்தாமல் பிரயோகிக்கலாம். பிராணி மெலிவாயிருந்தால், புண்ணுக்குப் பிரயோகஞ்செய்துகொண்டிருக்குங்காலத்தில், பல விருத்தி மருந்தும் நல்ல ஆகாரமும் கொடுக்கவும்.

* பொருத்துப்பெயர்வு (Dislocation) ஒரு பொருத்தில் இணைந்திருக்கும் எலும்புகள் இடம்விட்டுப் பெயர்தல். இது கொஞ்சம் அபூர்வமாகத்தான் நேரிடுகிறது. நேரிடும்போது பின்னங்காலின் அடிப்பொருத்துதான் சாதாரணமாகப் பெயர்ந்துபோகிறது. (இந்தப்பொருத்து பெயர்ந்துபோனால் "உண்டை நழுவிப்போய்விட்டது" என்று சொல்வதுண்டு.) இந்தப்பெயர்வு நேரிட்டால்பிராணி காலை முன்னுக்குக்கொண்டுவர முடியாமல், குளம்பின் முனை பூமியிற்பட்டுத் தேயும்படி காலை இழுத்துக்கொண்டு நடக்கும்.

பிரயோகம். இடம்விட்டுப்பெயர்ந்த எலும்பை அதின் தானத்துக்குக் கொண்டுவரும்படி ஊறுபட்ட காலின் (குளம்புக்குமேலிருக்கிற) குஞ்சசில் ஒரு கயிற்றைக்கட்டி அதைக் முன்காலிரண்டுக்கும் ஊடாகக் கொண்டுவந்து கழுத்தில் கயிற்றினால் ஒரு வளையம்

* பொருத்துப்பெயர்வு.—மூட்டுப்பெயர்வு.

போட்டு அந்த வளையத்தில் மாட்டி இழுத்து, ஊறுபட்ட காலை முன்னுக்குக்கொண்டுவந்து அது அந்த நிலைமையிலிருக்கும்படி கயிற்றை இறுக்கமாக முடிய வேண்டும். ஊறுபட்ட காலை முன்னுக்கு இழுக்கும்போதே இடம்பெயர்ந்த எலும்பை அதன் தானத்திற் சேரும்படி உள்ளேயழுத்தித் தள்ளவேண்டும். பின்பு அந்தப்பொருத்தில் கொப்புளமருந்து பிரயோகிக்க வேண்டும். **பிராணியைப் பூரணமாய் அமரிக்கையாக இருக்கும்படி செய்யவும்.**

**முறிவு (Fractures).** கொம்புகள், முழங்காலெலும்பு, இடுப்பெலும்பு இவைகள் சாதாரணமாக முறியக் கூடியவைகளாயிருக்கின்றன. ஒரு எலும்பு முறிந்திருக்கிறதா, இல்லையாவென்று தெரியவேண்டுமானால், அந்த எலும்பிருக்கும் பாகத்தைக் கையினால் நன்றாகத் தடவிப்பார்த்து; அதை அசைப்பதில் தகர்ந்த எலும்புத்துண்டுகள் ஒன்றோடொன்று உராசுதலினால் உண்டாகுந்தொனி இருக்கிறதா, இல்லையாவென்று காது கொடுத்துக்கேட்டுப் பார்க்கவேண்டும். முழங்கால் எலும்பு உடைபட்டிருந்தால், பிராணி காலைப் பூமியில் ஊன்றமாட்டாது; நோவுள்ள காலில் பாரம் உறைக்க இடங்கொடாது. மேலும், ஊறுபட்ட பாகத்தைத் தொட்டால் மிகுந்த வருத்தமிருப்பது தெரியும்.

**பிரயோகம்.** கொம்பு முறிந்திருந்தால், அதை ரம்பத்தினால் அறுத்து இரத்தம் வடிவதை (காயங்களின் பிரயோகத்திற்சொல்லியிருக்கிறபடி) நிறுத்தவேண்டும். இடுப்பெலும்பு உடைந்திருந்தால் வெந்நீர்த்துணியொற்றடங்கொடுத்துக் களிவைத்துக்கட்டவும். பிராணியை வேலையில்லாமல் ஓய்வாயிருக்கும்படி செய்யவும். தகர்ந்தவெலும்புகள் ஒன்றுகூடாமல் அதினால் சீழுண்டானால் ஊறுபட்ட பாகத்தைக் கத்தியினால் தோண்டி

உடைந்த எலும்புத்துண்டுகளை வெளியே எடுத்துவிட்டுப் புண்ணுக்குக் காயங்களுக்குச் சொல்லியிருக்கிற பிரயோகத்தையே செய்யவும்.

மாடு முதலிய பெரிய பிராணிகளுக்கு முழங்காலெலும்பு முறிந்துபோனால், அவைகளுக்குப் பிரயோகஞ்செய்வதில் பெரும்பாலும் பயனில்லை. ஆகையால், அவைகள் உடனே கொல்லப்படவேண்டும். செம்மறியாடு அல்லது வெள்ளாடு விலையுயர்ந்ததாயிருந்து அதின் முழங்காலெலும்பு முறிந்துபோய், அப்படி முறிந்த எலும்பு இரண்டுக்கு அதிகமான பாகங்களாக முறிபடாமலும், அதைச்சுற்றியுள்ள தோல் முதலிய உறுப்புகள் அதிகமாகச் சிதைபடாமலும் இருந்தால், காலை நேராக்கி, எலும்பின் உடைந்த முனைகளைப் பொருத்தி, அவைகள் அந்த நிலைவிட்டுப் பெயராமல் *தப்பைவைத்துக் கட்டவேண்டும். மேற்சொல்லிய கட்டை ஒன்றரை மாதம் அல்லது இரண்டுமாதம் வரை அவிழ்க்கக் கூடாது; முக்கியமாக முதற் சிலவாரங்களில், கட்டு மிகவும் இறுக்கமாயில்லாதபடி பார்த்து நெகிழ்த்துவிடுவதற்காக ஏகதேசம் கட்டப்பட்டிருக்கிற பாகத்தை மெதுவாகத் தொடலாமேதவிர மற்றப்படி தொடவே கூடாது.

விஷக்கடி (அல்லது விஷ ஜெந்துக்களாற் கடிக்கப்பட்ட கடி Bites of venomous animals). விஷக்கடிகளில் † நல்லபாம்பு (Cobra-de-capella) க்கடி மிகப் பயங்கரமானது. அதின் விஷத்தை நிவர்த்திக்கத்தக்க நிச்சயமான மருந்து யாதொன்றும் இதுவரை கண்டு பிடிக்கப்படவில்லை. அதின் விஷம் மனிதருக்கும் மற்றப்

* தப்பை "பத்தை" என்றும் "சிம்பு" என்றும் சொல்லப்படுகிறது.

† நல்லபாம்பு—நாகபாம்பு.

பிராணிகளுக்கும் பிராணபாயமானது. ஒரு பிராணி கடிக்கப்பட்டுச் சொற்பநேரமானபின் அதன் கால்கள் தேகத்தைத் தாங்கும் சக்தியை இழந்துவிடும். தள்ளாட்டம் உண்டாகும். பிராணி அடிக்கடி கீழே விழுந்து சுடிவெறிகொண்டவர்போலப் புரளும். வாயிலிருந்து உமிழ்நீர் மிகுதியாக ஒழுகும். விழுங்கக்கூடாமலும், அடிக்கடி வாந்தியெடுக்கும்படி முயலுதலும், மூச்சு முட்டிவிடப்போவதுபோன்ற தோற்றமும், வலிப்பும் உண்டாகும். பிராணி உணர்ச்சியை இழந்து, வரவரக் குறைவாக மூச்சுவிட்டு மிகச் சொற்ப நேரத்தில் மரணமடையும். பொதுவாக விஷக்கடி பட்ட இடம் இன்னதென்று இஷ்டமாகத் தீர்மானிப்பது சில வேளைகளில் கஷ்டமாகவிருக்கிறது. பிராணிகளின் தேகம் மயிரினால் மூடப்பட்டிருப்பதினால், அவைகளில் விஷக்கடி பட்ட இடம் கண்டுபிடிப்பது அதிகப் பிரயாசமாகவிருக்கிறது. அநேக சமயங்களில் விஷப்பல்லினும் செய்யப்படுங் காயம் அது இன்ன இடத்திலிருக்கிறதென்று தெரியக் கூடாதபடி மிகச் சிறிதாகவிருக்கிறது. சாதாரணமாகக் கடிபட்ட இடம் வீங்கியிருக்கும். அப்படி வீங்கியிருக்கும்போது அதை நிச்சயமாகக் கண்டுபிடிக்கக் கூடும்.

பிரயோகம். கடிபட்ட பாகத்திலுள்ள விஷம் தேகத்தை அதி சீக்கிரமாகத் தாக்கி இரத்த ஓட்ட (Circulation) த்தில் கலந்துவிடுகிறபடியால், எதுவாயினும் பிரயோகஞ்செய்து பிராணியைக் காப்பாற்றும்படி பிரயத்தனஞ் செய்வதற்குப் போதுமான காலம் சாதாரணமாக இருக்கிறதில்லை. நிச்சயமாக விஷத்தை நிவர்த்திக்கும் மருந்து ஒன்றுமில்லை. ஆயினும், பின் சொல்லப்படும் பிரயோகஞ்செய்து பார்க்கலாம். காலிற் கடிபட்டிருந்தால், கடிவாய்க்குமேல் ஒரு நாடா அல்லது கயிறுபோன்ற எதினாலாவது பலமாகக் கட்டவும். பின்பு சாராயம் போன்ற உற்சாக மருந்துகளிலெதையாவது விழுங்கக்

கூடாமையுண்டாகும் வரை அடிக்கடி கொடுக்கவும். கடிவாயில் (+ இவ்விதம் சிலுவை ரூபமாக) நன்றாகக் கத்திகொண்டு கீறி யிருந்த இரத்தம் வடியச்செய்யவும். பின்பு சிவக்கச்சுட்ட இரும்பினாலாவது, கார்பாலிக் [illegible] போன்ற காரமருந்துகளினாலாவது கடிபட்ட பாகத்தைத் எரித்துத் தீய்க்கலாம். இப்போது சொல்லிய பிரயோகம் கடிபட்டவுடனே, அதாவது விஷம் இரத்த ஓட்டத்தில் பிரவேசிக்குமுன்னே செய்யப்படவேண்டும்; அல்லவெனில் பயன்படாது. விஷக்கடிக்குச் செய்யப்படும் பிரயோகங்களில், பிராணியை அதிக நிச்சயமாகக் காப்பாற்றுவது கடிபட்ட பாகத்தை வெட்டி எடுத்துவிடுவதே; ஆனால் இது எப்பொழுதும் செய்யக்கூடியதல்ல. இங்கு சொல்லிய பிரயோகம் நல்லபாம்புக்கடிபோன்ற சகல விஷக்கடிகளுக்கும் செய்யப்படலாம்.

விதையெடுத்தல் (Castration) ஒரு பிராணியின் விதை (Testicle) களை அவைகள் அடங்கியிருக்கும் விதைப்பை (Scrotum) யிலிருந்து பிரித்தெடுத்துவிடுவதே. விதையெடுக்கப்பட்டபின் பிராணி சந்ததியுண்டாக்கும் சக்தியை இழந்துவிடுகிறது.

பிராணி * இளமையானதாகவிருக்கும்போது மிகுந்த உஷ்ணமாவது மிகுந்த சீதளமாவது இல்லாத காலத்தில் விதையெடுக்கவேண்டும். விதையெடுக்கப்பட்ட பிராணி அதிக வெப்பத்துக்காவது குளிருக்காவது உட்படுவதினால் கெடுதி நேரிடலாம்.

பிராணி விதையெடுக்கப்படும் தினத்துக்கு முதல் நாளில், கூடுமானால், அதற்குப்போதுமான பேதிமருந்து கொடுக்கவேண்டும்.

---

* கன்று பிறந்து ஒரு மாதத்துக்குமேல் மூன்றுமாதமாகுமுன் விதையெடுத்தல் நல்லது.

விதையெடுப்பதில் பலவகையுண்டு; ஆனால் என்னுடைய நெடுங்கால அநுபவத்தினால் விசேஷமானதென்று தெரிந்திருக்கும் சூட்டுக்கோலால் விதையெடுத்தல் (Castration by Cautery) ஆகிய வகையை இப்போது சொல்லுகிறேன்.

பிராணியைக் கீழேதள்ளி அதன் கால்களைக் கட்டி அதை மல்லாந்து கிடக்கும்படி செய்யவும். விதைகள் ஒவ்வொன்றாக நறுக்கப்படவேண்டும். ஒரு விதையை இடது கையினால் பிடித்து, அதன் தோலை அதன்மேல் இறுக்கமாக ஒட்டிக்கொள்ளும்படி இழுத்துக்கொண்டு, (இரண்டு விதைப்பைக்கும் மத்தியிலிருக்கும் வரையை விட்டுப் பக்கத்தில் ஒரு விரற்கடை விலகி, பிராணியின் தேகத்துக்குக் குறுக்காக இல்லாமல் நீளவாட்டில்) விதை வெளிப்படுவதற்குப் போதுமானபடி நீளமாகவும் ஆழமாகவும் கீறவும். வெளியே வந்த விதையை (அது உள்ளே போய்விடாதபடி கவலையெடுத்து) இடது கையிற் பிடித்துக்கொண்டு, விதைப்பைத்தோல் வயிற்றோடு சேரும்படி இதமாக அதைத் (திரைத்துத்) தள்ளி, விதைக் கொடியை ஒரு கிட்டி (Clamps) யினால் மிகவும் இறுக்கமாகப் பிடித்து (க் கிட்டி நெகிழாமல் அதைக் கயிற்றினாற்கட்டி) க்கொண்டு, மொட்டையான கத்தி போலச் செய்யப்பட்ட சூட்டுக்கோலினால் அக்கொடியை (அது கிட்டியிற் பிடிபட்டிருக்கும் இடத்திலிருந்து ஒரு விரற்கடை தள்ளி) ச் சுட்டுத்தீய்த்து விதையைப் பிரித்தெடுக்கவும். பின்பு கிட்டியை வெளியே எடுத்துவிடுமுன் விதைக்கொடியிலுள்ள இரத்தக் குழாய்களின் வாய் அடைபட்டு இரத்தம் வடியாமலிருக்கிறதாவென்று சாக்கிரதையாய்ப் பார்க்கவும். கிட்டியைப் பிடித்திருக்கும் பிடிப்பை விடாமல் (அதில் கட்டியிருக்கும் கயிற்றை அவிழ்த்து) அதை மிகவும் மெள்ளத் திறப்பதினால் இரத்தம்

வடிகிறதா, இல்லையாவென்று லகுவாகத் தெரிந்து கொள்ளலாம். இரத்தம் வடிந்துகொண்டிருந்தால், திரும்பக் கிட்டியை நெருக்கிப்பிடித்துக்கொண்டு இரத்த வடிவு நிற்கும் வரை இறுக்கக் குழலின் வாயைச் சூட்டுக் கோலினால் சுட்டுக்கருக்கவும். பின்பு கிட்டியை வெளியே எடுத்துவிடவும். மிஞ்சிய மற்றொரு விதையையும் இவ்விதமாகவே எடுத்துவிடவும். (எதுவாயினும் ஈரம் இருப்பதைத் தப்புவான துணிகொண்டு ஒற்றி எடுத்துவிட்டு) வேப்பெண்ணெயைப் பிரயோகிக்கவும். கார்பாலிக்கமிலமிருந்தால் அதில் ஒரு பாகமும், வேப்பெண்ணெயில் நாற்பது அல்லது ஐம்பது பாகமுஞ் சேர்த்துக் கொள்வது நன்மை. தினந்தோறும் இரண்டு தடவை காயத்தைச் சுத்தியாக்கி இப்படிப் பிரயோகஞ் செய்துவர வேண்டும். வீக்கமுண்டாகுவது நிச்சயம்; ஆனால் அது சில பிராணிகளில் அதிகமாகவும், சில பிராணிகளில் கொஞ்சமாகவும் இருக்கும். வேப்பிலைபோட்டு நன்றாகக் கொதித்த நீரைச் சூடாறுமுன் ஒரு சட்டியில்விட்டு அதை வீக்கத்தின் கீழே பிடித்துச் சுடுகிற ஆவி வீக்கத்தில் நன்றாகப்படும்படி செய்யவும். (விதையெடுத்து மூன்றுநாள் கழிந்தபின்) பிராணியைத் தினந்தோறும் அரைமணி நேரம் காலையிலும் மாலையிலும் உலாத்துவதினால் நன்மையுண்டாகும். விதையெடுத்தபின் ஒருவாரம் குறைந்த ஆகாரம் கொடுக்கவும். பின்பு கொஞ்சங் கொஞ்சமாக, வழக்கமான அளவு வரும்வரை, ஆகாரத்தை அதிகப்படுத்திக் கொடுக்கவும்.

இப்போது விவரித்த "சூட்டுக்கோலால் விதையெடுத்தல்" என்னும் முறைக்குக் கிட்டத்தட்டச் சமமென்று சொல்லத்தக்கதாகவும், இதைப்பார்க்கிலும் அதிக எளிதாகவும், விரைவாகவுஞ் செய்யப்படக்கூடியதாகவும் உள்ள வேறொரு முறையிருக்கிறது. அதையும்

இங்கு சொல்லுகிறேன். மேலே சொல்லியபிரகாரம் விதைப்பையைத்தோலைக் கீறி விதையை வெளியாக்கி அதை இடது கையினால் மெதுவாகவும் உறுதியாகவும் பிடித்துக்கொண்டு நெருங்கிய பல்லுள்ள சின்னக் (கை*ரம்பத்தினால்) நார் எடுப்பதற்குக் கற்றாழை மடலைச் சீவுவது போல, விதைக்கொடியை நீளவாய்ப்பில் சுறண்டினால் அது படிப்படியாய் இற்று அறுந்து விதை பிரிந்துவிடும். கத்தியையுபயோகித்தால் நிச்சயமாக இரத்தவடிவுண்டாகும். இந்த அபாயத்தை நீக்குவதற்காகவே ரம்பத்தை உபயோகித்துச் சுறண்டுவது ஆவசியகமாகவிருக்கிறது. இந்த முறையில் கட்டி வேண்டியதில்லை. இதற்குச்சாதாரணமான கத்தியொன்றும், ரம்பம்போலப் பல்லுள்ளதாகச் செய்யப்பட்ட மற்றொரு கத்தியும்போதும். விதையெடுத்தபின் முன்சொல்லிய முறையிற் சொல்லப்பட்ட பிரயோகத்தையே செய்யவேண்டும்.

இப்போது இங்கு வழங்கிவருகின்ற † விதையடிக்கும் (அல்லது கசக்கும்) முறையானது மிகக் குரூரமானதாகவிருக்கின்றது; மேலும், சில சமயங்களில் விதை பூரணமாகக் கசக்கப்படாமல்போகிறபடியால் அதிர்ப்தியானதாகவுமிருக்கிறது. வெற்றேரிநெரி வித்தை பரவப்பரவ, இக்குரூர வழக்கம் குறைந்தொழிந்துவிடுமென்று நம்புகிறேன்.

வேதுகொடுத்தல் (Fomentation) உஷ்ணமாவது நனைவாவது தேகத்திற் படும்படி செய்யும் பிரயோகம். சாதாரணமாக அநேக வியாதிகளிலும், முக்கியமாக அழற்சியினாலுண்டாகும் வியாதிகளிலும், மிகுந்த வருத்தத்தை நீக்குவதற்கு வேது மிகவும் உதவியாகவிருக்கிறது. வேதுக்குபயோகிக்கும் நீரில், தேவையிருந்தால்,

---

* ரம்பம்—(பல்லுள்ள) வாள்—அருக்குவாள்.

† விதையடித்தல் "காயடித்தல்" என்றுஞ் சொல்லப்படுகிறது.

மருந்துகளைக் கலந்துகொள்ளலாம். கவலையீனமாகப் பிரயோகிக்கப்படும் வேதினால் உண்டாகும் நன்மையிலும் கெடுதியதிகமாகவிருக்கும். பிராணியைக் காற்று வீசாத கட்டடத்தில் நிறுத்திக்கொண்டு, பிளானல் அல்லது வேறு திண்ணமான துணியைக் கொதிநீரில் நனைத்துக் கூடியவரை நன்றாகப் பிழிந்து பொறுக்கக்கூடிய சூடிருக்கும்போது பிரயோகிக்கவும். உடனே அதன்மேல் ஒரு காய்ந்த பிளானல் அல்லது திண்ணமான துணிபோட்டு (ச் சூடு குறையாதபடி) மூடவேண்டும். வேதுத் துணி ஆற ஆரம்பிக்கும்போது அதைத் திரும்பக் கொதிநீரில் நனைத்துப்பிழிந்து முன்போலவே பிரயோகிக்க வேண்டும்.

# ௫—வது அதிகாரம்.

## மருந்துகளும், மருந்துக்கூட்டுகளும்; அவைகளின் செய்கைகளும், உபயோகங்களும்.

இப்புத்தகத்தில் இப்போது சொல்லப்படும் மருந்துகளைப்பற்றிய பாகமானது கவனமாகத் திரும்பப் பார்வையிடப்பட்டு விஸ்தாரஞ்செய்யப்பட்டிருக்கிறது. சில மருந்துகளைப்பற்றி முன் சொல்லப்பட்டதிலும் அதிக விஷயங்கள் சொல்லப்பட்டும், சில மருந்துகள் நூதனமாகச்சேர்க்கப்பட்டும் இருக்கின்றன. அனுபவத்தில் உபயோகமானவை என்று காணப்பட்ட அநேக * மருந்துப் பட்டிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இங்கு சொல்லியிருக்கும் மருந்துகளில், அதிகப்பெரும்பான்மையானவை சுதேசமருந்துகளாகவும், எங்கும் கிடைக்கக்கூடியவைகளாகவும் இருக்கின்றன; மிகச் சிறுபான்மையானவை இங்கிலிஷ் மருந்துகளாகவும், சகல பிரதான நகரங்களிலும், அகப்படத்தக்கவைகளாகவும் இருக்கின்றன. சென்னிநகரில் வழங்கும் நிறையும் அளவுமே இப்புத்தகத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும், இங்கிலிஷ் நிறை அளவுகளுக்கும், சுதேச நிறை அளவுகளுக்கும் உள்ள சம்பந்தந் தெரிவது அநேக சமயங்களில் உபயோகமாகவிருக்குமென்று பின் வருவதை எழுதியிருக்கிறேன்.

---

* மருந்துப்பட்டி.—இன்ன மருந்துகளை இன்ன அளவாக இவ்விதம் ஒன்றாகச்சேர்த்து, இன்ன பிராணிக்கு அல்லது இன்ன வியாதியில் உபயோகிக்கவும் என்று எழுதியிருக்கும் ஔஷத டாப்பு.

இங்கிலிஷ் நிறைக்குச் (சுமாராகச்) சரியான சுதேசநிறை.

க கிறேன் (1 grain)=*இ (அரைக்) குன்றிமணியெடை=வ (கால்) மஞ்சாடி.

க திரும் (1 drachm)=காலேமாகாணி ரூபாயெடை=இ † வராகனெடை.

க அவுன்ஸ் (1 ounce)=உஇ ரூபாயெடை=கவ (ஒன்றேகால்) அணாத்துட்டு எடை.

க பவுன் (1 pound) அல்லது ராத்தல்=௪௰ (நாற்பது) ரூபாயெடை.

சுதேசநிறைக்குச் (சுமாராகச்) சரியான இங்கிலிஷ் நிறை.

க மஞ்சாடி=உ குன்றிமணியெடை=௪ கிறேன்.

க களஞ்சி=௮௰ (எண்பது) கிறேன்.

க வராகனெடை=அரையே அரைக்கால் ரூபாயெடை=உ திரும்.

க ரூபாய்=௩ திரும்.

க † பலம்=க அவுன்ஸ் + க திரும்=௩ ரூபாயெடை.

இங்கிலிஷ் அளவுக்குச் (சுமாராகச்) சரியான சுதேச அளவு.

க மினிம் (1 minim)=க துளி.

க திரும் (1 fluid drachm)=௬௰ (அறுபது) துளி.

க அவுன்ஸ் (1 fluid ounce)=அரைக்கால் ஆழாக்கு.

க பைண்டு (1 pint)=உஇ ஆழாக்கு.

சுதேச அளவுக்குச் (சுமாராகச்) சரியான இங்கிலிஷ் அளவு.

க வீசம்படி=௪ அவுன்ஸ்.

க ஆழாக்கு=௮ அவுன்ஸ்.

க (பட்டிணம்) படி=௩ பைண்டு.

---

* இ.—½.

† † இங்கு சொல்லிய வராகனெடையும் பலமும் சென்னபட்டணத்தில் வழங்கப்படுபவை.

இங்கு சொல்லப்பட்ட சம்நிறைகளும், சம அளவுகளும் திட்டமான துல்லியமுடையவைகளாக இல்லையானாலும், மருந்துகளை நிறுப்பதற்கும், அளப்பதற்கும் போதுமான துல்லியமுடையவைகளாக இருப்பதுமன்றி, (கணக்கிடுவதற்கு) மிகுந்த சௌகரியமானவைகளாகவுமிருக்கின்றன.

எட்டி, பாஷாணம் இவைபோன்ற நஞ்சுமருந்துகளை வைத்தியத்தில் தகுந்த பயிற்சியில்லாதவர்கள் கூடிய மட்டும் உபயோகியாமலிருப்பதே நல்லது. நஞ்சு மருந்துகளை உபயோகிப்பவர்கள் அவைகளை வைத்திருக்கும் ஏனத்தின் மேல் "நஞ்சு" என்று பெரிய எழுத்துகளால் எழுதிய சீட்டை ஒட்டி, குழந்தைகள் முதலிய அறியாதவர்கள் கைப்படாதபடி பிரத்தியேகமான இடத்தில் [illegible] வைக்கவேண்டும்.

குறிப்பு.—இந்த சொல்லியிருக்கும் மருந்துகளின் பிரமாணங்கள் பருவமடைந்த பூரணவளர்ச்சியுடைய மாடு அல்லது குதிரைக்கு உதவும். அரை வளர்ச்சியுடைய மேற்சொல்லிய பிராணிகளுக்கு அந்தப் பிரமாணங்களில் அரைப்பங்கும், கன்றுகள், செம்மறியாடுகள், வெள்ளாடுகள் இவைகளுக்குக் கால்பங்கும் கொடுக்கவேண்டும். மருந்துக்கூட்டுகளில் ஒரு மருந்து இத்தனை பாகம், மற்ற மருந்து இத்தனை பாகமென்று சொல்லப்படும் இடங்களில், சேர்க்கப்படும் மருந்துகள் எல்லாம் கட்டி அல்லது பொடியாகவிருந்தாலும், சில கட்டியாகவும், சில சலரூபமாகவுமிருந்தாலும் நிறையையும், எல்லாம் சலரூபமாகவிருந்தால் அளவையும் உபயோகித்துக்கொள்ளவேண்டியது. இப்புத்தகத்திற்சொல்லப்படும் ஆழாக்கு பட்டணம்படியில் எட்டிலொரு பங்கு.

அபின் (Opium) ஒரு பிராணி வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போது மிகவும் உபயோகமாகும். காலேமாகாணி முதல் அரையேயரைக்கால் ரூபாயெடை

வரையும் அபின் பிசின் கொடுக்கலாம். இந்த அளவாக ஆவசியகமானால் நாலுமணி நேரத்துக்குஒருதரம் கொடுக்கலாம். இந்த மருந்து கழிச்சல், சீதபேதி, வயிற்று வலி இவ்வியாதிகளில் மிகவும் உபயோகமானது.

அன்னபேதி (Sulphate of Iron) பலங்கொடுப்பதில் மிகச் சிலாக்கியமான மருந்து. காய்ச்சல், மெலிவு, அசதைப்பு உள்ள பிராணிகளுக்கும், எந்த வியாதியினாலாவது பீடிக்கப்பட்டபின் சௌக்கியமடைந்துவரும் பிராணிகளுக்கும் கொடுப்பதற்கு மிக உபயோகமானது. அரையேயரைக்கால் முதல் முக்காலேமும்மாகாணி ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

ஆக்கிரரீண உப்பு (ஸ்மெல்லிங்ஸால்ட்டு Ammoniæ Carbonas) [ஒருபங்கு நவச்சாரத்தையும், இரண்டுபங்கு சீமைச்சுண்ணாம்பையும் நன்றாகப்பொடித்துக் கலந்து * பதங்கஞ் (Sublimation) செய்து எடுக்கப்படுகிறது;] அபாயமில்லாத நல்ல உற்சாக மருந்து; களைப்பல்லது மெலிவுள்ள எந்த வியாதியிலும் உபயோகிக்கலாம்; முக்கியமாகச் சுவாசாசய அழற்சியில் உபயோகமாகும்; அரையேயரைக்கால் முதல் ஒன்றேகால் ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

குறிப்பு.—இந்த மருந்தைக் கண்ணாடி மூடியுள்ள காற்றுப் புகாத புட்டியில் வைக்கவேண்டும்.

---

* பதங்கஞ்செய்தல் அல்லது பதங்கித்தல்.—கந்தகம் கருப்பூரம்போன்ற மருந்துகளை ஒரு பாத்திரத்தில் வைத்துத் தீயெரித்துப் புகையாக்கி அப்புகையை வீணாகாதபடி (தண்ணீர்ச்சேலை மேலே போட்டப்பட்டு அடிக்கடி நனைக்கப்பட்டுக்கொண்டிருக்கிற) மற்றொரு பாத்திரத்திற் செல்லும்படி செய்து ஆற்றிப் பழையபடி கட்டியாகச் செய்யும்முறை.

ஆளிவிதை (Linseed) மூத்திரம் ஊறுங் கருவிகளாகிய *பிருக்கங் (Kidney) கள் அல்லது மூத்திரந் தங்கும் மூத்திரப்பை (Bladder) வியாதிப்பட்டிருக்கும் பிராணிகளுக்கு ஆளிவிதைக்கஞ்சி கொடுப்பதினால் நன்மையுண்டாகும். ஆளிவிதைப்பொடி கொதிநீரில் கலந்து களி (Poultice) யாக்கிக் கட்டுவதற்கு மிகவும் உபயோகமானது. பொதுவாகச் சகல பிராணிகளையும் விசேஷமாக இளம் பிராணிகளையும் மெலிவு நீக்கிக் கொழுப்படையச் செய்வதற்கு ஆளிவிதையை மற்ற ஆகாரங்களுடன் கொடுப்பது மிகவும் நல்லது. (மிகுந்த இளம்பிராணிகளுக்குப் பாலுக்கடுத்த ஆகாரம் ஆளிவிதைப் பிண்ணாக்குக் கஞ்சியைத்தவிர வேறொன்றுமில்லை.)

ஆளிவிதையெண்ணெய் (Linseed Oil) எந்தப் பிராணிக்கும் குடலைச்சுத்தஞ்செய்வது ஆவசியகமானபோது பயமில்லாமல் கொடுப்பதற்கேற்ற பேதிமருந்து. இரண்டரை முதல் ஐந்து ஆழாக்குவரை கொடுக்கலாம். இது பேதியுப்பு (Sulphate of Magnesia) டன் சேர்த்துக் கொடுக்கப்பட்டபோது விசேஷ நன்மையைச்செய்கிறது.

இபிகாக்கு (Ipecacuanha) வேர்ப்பொடியைச் சிதபேதியில் வேளைக்கு அரையேயரைக்கால் ரூபாயெடை கொடுக்கலாம்.

ஈயக்காடியுப்பு (லெட்டு ஆசிட்டேட்டு, Lead Acetate, or Sugar of Lead) பிரயோகிக்கப்பட்ட பாகத்தை இறுகச்செய்யுந் துவர்மருந்து (Astringent) ஆகவிருக்கிறது. காயங்களின் மேலும், புண்களின்மேலும்

* பிருக்கம் "குன்றிக்காய்" என்றும், "குண்டிக்காய்" என்றுஞ் சொல்லப்படுகிறது.

கழுவுநீர் (Lotion) ஆகத் தண்ணீருடன் சேர்த்து உபயோகிக்கப்படுகிறது.

* ஊமத்து (Thorn Apple) வருத்தத்தைத் தணித்து இருமல் முதலிய சுவாசாசயத்தைப் பற்றிய வியாதிகளிலும், சலதோஷ (Catarrh) த்திலும் முக்கியமாயுபயோகமாகும். இலையைப் புகைத்து உண்டாகும் புகையைப் பிராணி சுவாசிக்கும்படி செய்யலாம்; அல்லது இலைப்பொடியில் காலேமாகாணி முதல்முக்காலே மும்மாகாணி ரூபாயெடை வரை உள்ளுக்குக்கொடுக்கலாம்.

† எட்டிக்கோட்டை (Nux Vomica Seeds) [தேகத்தின் உணர்ச்சிக்கும் அசைவுக்கும் ஆதாரமாகிய] நரம்பு (Nerve) களுக்கு உற்சாகஞ்செய்யும் மருந்தாகவிருக்கிறது. தேகத்தின் எந்தப் பாகத்திலாவது உண்டாகுந் திமிர்வாதத்தில் கொடுத்தால் நன்மையுண்டாகும். கால் முதல் அரைக் ‡ களஞ்சி வரை கொடுக்கலாம்.

எரிவண்டு (ஸ்பானிய எரிவண்டு, Spanish Fly, or Blistering Fly) நல்ல கொப்புளமருந்து. அநேக கொப்புள மருந்துக்கூட்டுகளில் இது பிரதானமானதாகச் சேர்க்கப்படுகிறது. ரோமத்தை உண்டாக்கும்படி இது உபயோகப்படுகிறது. (அவ்விதம் உபயோகிப்பதில், ஒரு பங்கு எரிவண்டுப்பொடியும், இருபது பங்கு பன்றிக் கொழுப்பு நெய்யுஞ்சேர்த்து உபயோகிக்கவேண்டும்.)

ஓமவிதை (Omum Seeds) சீரண சக்தியை விருத்தி செய்யும் மருந்து (Stomachic) ஆகவிருக்கிறது;

---

* ஊமத்து.—"ஊமத்தை."

† எட்டிக்கொட்டை.—காஞ்சிரங்கொட்டை.

‡ 1 களஞ்சி=80 கிறேன் (Grain)=[உத்தேசமாக] $(\frac{7}{16})$ வீசி (காலேமும்மாகாணி) ரூபாயெடை.

கழிச்சல், வயிற்றுவலி, அசீரணம்போன்ற வியாதிகளில் சுதேசிகளால் அதிகமாக உபயோகிக்கப்படுகிறது; வயிற்றுவலியில்லாமல் பேதியாகும்படி பேதிமருந்துகளுடன் கொடுக்கப்படுகிறது; இரண்டரை முதல் ஐந்துரூபாயெடை வரை கொடுக்கலாம்.

கஞ்சா (Bhang or Indian Hemp) வருத்தத்தை நீக்குவதில் மிகுந்த சக்தியுள்ள மருந்து. அபினைப்போலப்பிரயோசனமானது; அபின் கிடையாதபோது அதற்குப் பதிலாக உபயோகிக்கலாம். இலையை ஒன்றேகால் முதல் இரண்டரை ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

கடுகு (Mustard) த்தூளைக் கொதிநீரில் குழப்பி சுவாசாசயம் நோயுற்றிருக்கும்போது விலாக்களின்மேலும், வயிற்றுவலியுள்ள காலத்திலும், ஈரல் அல்லது குடல் அழற்சியடைந்திருக்கும்போதும் வயிற்றின்மேலும், வேறு எந்தப் பாகமாவது அழற்சிகொண்டிருந்தால் அந்தப் பாகத்தின்மேலும் பூசலாம்.

கந்தகம் (Sulphur) காய்ச்சலிலும், வாதத்திலும் கொடுத்தால் நன்மையுண்டு. தோலைப்பற்றிய வியாதிகளில் உள்ளுக்குக் கொடுப்பதுமன்றி மேலேயும் பிரயோகிக்கலாம். இரண்டரை முதல் ஏழரை ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

கரி (* அடுப்புக்கரி Charcoal) துர்வாசனையை மாற்றி வாயுக்களைத் தன்னுள் அடக்கிக்கொள்ளும். நன்றாகத் தூளாக்கிப் புண்களின்மேல் உபயோகித்தால் அவைகளை உலரச்செய்துவிடும். வயிற்றுப் பொருமலோடுங்கூடிய அசீரணத்திலும், கழிச்சல் பேதி வியாதிகளிலும் இரண்டரை முதல் ஐந்து ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

---

* அடுப்புக்கரி.—விறகுக்கரி—கட்டைக்கரி.

* கரியபோளம் (Aloes) மாட்டுக்கு அதிகமாக உப்யோகப்படுகிறதில்லை; ஆனால் ஒன்றேகால் முதல் ஒன்றே முக்கால்வயளைக்கால் ரூபாயெடை வரை குதிரைக்குக் கொடுக்குஞ் சாதாரணமான பேதிமருந்தாகவிருக்கிறது. கரியபோளம் வயிற்றுப்புரட்டுதலாகிய வருத்தத்தை அதிகமாக உண்டாக்காதபடி அத்துடன் காலேமாகாணி ரூபாயெடை சுக்குப்பொடி சேர்த்துக்கொடுக்கிறதுண்டு.

கருப்பூரத்தயிலம் (Turpentine) உற்சாகஞ்செய்யும் மருந்தாகவும், கிருமிகொல்லியாகவுமுபயோகப்படும். குடல், சுவாசாசயமுதலிய உறுப்புகளின் அழற்சியில், கடுகுப்பொடியைச் சொற்பக் கொதிநீரிற் குழப்பி அத்துடன் இந்தத் தயிலத்தையுஞ்சேர்த்துப் பற்றாக (வியாதிப்பட்டிருக்கும் இடங்களின்மேற்) பூசினால் நன்மையுண்டாகும். கால் ஆழாக்கு முதல் காலே அரைக்கால் ஆழாக்குவரை குடலிலுள்ள கிருமிகளை நாசஞ்செய்யும்படி (ஆளிவிதையெண்ணெய் அல்லது சிற்றமணக்கெண்ணெயுடன் கலந்து உள்ளுக்குக்) கொடுக்கலாம்.

கருப்பூரம் அல்லது சூடன் (Camphor) உற்சாகஞ்செய்யும் மருந்து; வயிற்றுவலி அல்லது மற்ற வியாதிகளில் உண்டாகும் வருத்தமான வலி அல்லது இழுப்பையும், சலதோஷம் இருமல் முதலிய சுவாசாசயத்தைப் பற்றிய வியாதிகளையும் நீக்குவதற்கு உபயோகமானது. அரையேயரைக்கால் முதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம். புண்களில் கிருமி பற்றியிருந்தால் அவைகளை விலக்குவதற்குக் கருப்பூரத்தை எண்ணெயிற்கலந்து பிரயோகிக்கலாம்.

கறியுப்பு (Common Salt) இரத்தத்தைச் சுத்திகரிப்பதற்கு மிகவும் உபயோகமானது. இது சீரணி

* கரியபோளம்.—மூஷாம்பரம்.

சுகமாகவிருக்கும்போதும், வியாதியாக இருக்கும்போதும் பிரயோசனமான் கூத்திரத்தையும் மலத்தையும் சுபாவமான நிலைமையில் இருக்கச்செய்கிறது. வந்தை (Parasite) களை விலக்குகிறது. குளம்புக்கு ஊழ்த்தல் நோய் (Rot) வராமல் தடுப்பதற்கு மிக விசேஷமானது. சாதாரணமான அழுக்கு நிறமுடைய கறியுப்பை ஒன்றே கால் முதல் இரண்டரை ரூபாயெடை வரை கொடுக்கலாம். உப்பு மனிதருக்கு ஆவசியமாக இருப்பது போலவே பிராணிகளுக்கும் இருப்பதால், அதை அவைகளுக்கு எப்போதுங்கொடுத்துவரவேண்டும்.

காசுக்கட்டி (Catechu) மிகுந்த சக்தியுள்ள துவர் மருந்து (அதாவது உறுப்புகளை இறுகச்செய்யும் மருந்து); காய்ச்சலில்லாமலிருந்தால் கழிச்சலில் கொடுக்க மிகவும் நல்லது. அரையேயரைக்கால்முதல் ஒன்றே முக்காலேயரைக்கால் ரூபாயெடை வரை கொடுக்கலாம்.

* காடிக்காரம் (Lunar Caustic, or Nitrate of Silver) மிகச்சிலாக்கியமான காரமருந்து. இதை லகுவாகக் குணமாகாத புண்கள், காயங்கள் இவைகளின் மேல் லேசாகத் தடவினால் சீக்கிரங் குணம் அடையும்படி செய்யும். சிறிய கழலைகளை இந்தக் காரமருந்தினால் எரித்துக் கரைத்துவிடலாம். கண்ணீரைவில் இதை [க்கால் அழுக்கு † வாலை (Retort) யில் வடிறக்கிய ‡ ஆவி

* இந்த மருந்தைக் கண்ணாடி மூடியுள்ள நீலப்புட்டியிலாவது, நீலக்காகிதத்தினால் நன்றாக மூடப்பட்ட புட்டியிலாவது வைக்க வேண்டும்; அல்லவெனில் கெட்டுப்போகும்.

† வாலை.—தண்ணீரையாவது, சில மருந்துகலந்த நீரையாவது, வேறு சலரூப வஸ்துக்களையாவது காய்ச்சி ஆவியாக்கிப்பின்பு குளிரச்செய்து, திரும்ப நீராக்குவதற்குத் தக்கதாகச் செய்யப்பட்ட பாத்திரம்.

‡ நீராவி (Steam) குளிர்ந்து திரும்ப நீரானால் ஆவிநீர் என்று சொல்லப்படுகிறது.

நீரில் (Distilled Water) ஒரு குன்றிமணியெடை நன்றாய்க் கரைத்துக்] கழுவுநீர் (Lotion) ஆக உபயோகிக்கலாம்.

கார்பாலிக்கமிலம் (Carbolic Acid) காரமருந்தாகவும், அபசருசாரியாகவும், (தேகத்திற் பிரயோகிக்கப்பட்ட பாகத்தை இறுகச்செய்யும்) துவர் மருந்தாகவும் உபயோகப்படுகிறது; வெக்கை, அடைப்பான், வயிற்றுப் பொருமல் இவைகளில் உள்ளுக்குக்கொடுக்க உபயோகமாகும்; குளம்பழுகல் (Foot-rot), குளம்புச்சிலந்தி (Foul), புண், காயம் இவைகளுக்கும், தோலைப்பற்றிய வியாதிகளுக்கும் எண்ணெயுடன் கலந்து மேற்பிரயோகமாக உபயோகிக்கலாம். ஒரு * திரும் அல்லது அறுபது துளிமுதல இரண்டு திரும் அல்லது நூற்றிருபது துளிவரை கொடுக்கலாம்.

காலோமெல் அல்லது ரஸபஸ்மம் (Calomel) தேகக்கருவி (Organ) களின் தொழில் (Function) களை நிதானமடையும்படி படிப்படியாய் மாறச்செய்து சுகத்தை ஸ்தாபிக்கும் மருந்து (Alterative) ஆகவும் பேதிமருந்தாகவுமிருக்கிறது. இது கால்நடைகளுக்கு மிகுதியாக உபயோகிக்கப்படுகிறதில்லை. [illegible] வியாதிகளில் நன்மை செய்யும்; [illegible] பேதியில் உபயோகித்துப் பார்க்கலாம். கா[illegible]ணாக்கால்முதல் முக்கா[illegible] † களஞ்சிவரை கொடுக்கலாம்.

குறிப்பு:—இந்த மருந்தைக் கொடுப்பதில் மிகுந்த சாக்கிரதையாயிருக்கவேண்டும்; மிகுந்த அளவாகவாவது, நெடுநாளாகவாவது கொடுக்கக்கூடாது; மற்ற மருந்துகளுடன் கலந்துதான் கொடுக்கவேண்டும்.

---

* ஒரு திரும் (சுமாராக) ஆழாக்கில் அறுபத்திநான்கில் ஒரு பங்கு.

† க களஞ்சி=80 கிறேன்.

கிராம்பு (Cloves) உற்சாக மருந்தாகவும், வாய்வு நிவர்த்தி மருந்து (அதாவது இரைப்பையிலும் குடலிலுமுள்ள வாயுவைப் பரிகரிக்கும் மருந்து) ஆகவுமிருக்கிறது. பேதிமருந்துகளுடன் கொடுக்கப்பட்டால், அவைகளால் உண்டாகக்கூடிய வயிற்றுவலியை விலக்குகிறது. வயிற்றுவலி (Colic) யிலும், மற்றும் அநேக வியாதிகளிலும் உபயோகிப்பதற்கு நல்ல மருந்தாகவிருக்கிறது. ஆனால் * பிருக்கங்கள் (அதாவது மூத்திரம் ஊறுங்கருவிகள்) மூத்திரப்பை (அதாவது மூத்திரந்தங்குங் கருவி) இவைகள் வியாதிப்பட்டிருக்கும் காலத்தில் கொடுக்கக்கூடாது. மெலிவிலும் களைப்பிலும் நிலவேம்புடன் கலந்துகொடுத்தால் நன்மையுண்டாகும். ஒன்றேகால்முதல் இரண்டரை ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

கொத்தமல்லி (Coriander) விதை சோம்புவிதையைப் போலச் சீரணசக்தி மருந்தாகவிருக்கிறது. இரண்டரை முதல் ஐந்துரூபாயெடைவரை கொடுக்கலாம்.

கொழுப்பு அல்லது பன்றிநெய் (Fat or Lard) கொப்புளித்த பாகத்தில் பிரயோகிக்கப்பட்டபோது, அந்த இடத்தில் வாயு படாதபடி (செய்து அது படுதலினாலுண்டாகும் கெடுதியை நீக்கி) உபயோகமாகிறது; களிம்பு (Ointment) கூட்டுவதில் முக்கியமாக உபயோகப்படுகிறது.

† சதகுப்பை (Dill) விதையும் இலையும் சீரணசக்தியை விருத்தியாக்கும் மருந்துகள்; வாதத்திலும் பொருத்துகளின் வீக்கத்திலும் மேற்பிரயோகத்துக்கு மிகச் சிலாக்கியமானவை. இலையைக் கொஞ்சம் எண்ணெய் பூசிச் சூடாக்கிப் பிரயோகித்தால் புண்களைச் சீழ்பிடிக்கும்படி

---

* பிருக்கம் "குன்றிக்காய்" என்றும் "குண்டிக்காய்" என்றும் சொல்லப்படுகிறது.

† சதகுப்பையைச் சதகுப்பியென்று சொல்வதுமுண்டு.

செய்யும். விதையில் இரண்டணாமுதல் ஐந்து ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

* சர்க்கரை (Jaggery) வாய்க்கு மதுரமானதாகையால் வியாதிப்பட்ட பிராணியின் ஆகாரத்தோடு கலந்து கொடுத்தால் அது பிரியமாகச்சாப்பிடும். இது பிராணியை நன்றாகச் செழிக்கச்செய்யும். பத்துமுதல் இருபது ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

சவர்க்காரம் (கட்டிச்சவர்க்காரம், Hard Soap) [வயிற்றுப்புளிப்பு முதலிய] புளிப்பைக் குறைக்கும் மருந்து (Antacid) ஆகவும், மூத்திரத்தை அதிகப்படுத்தும் மருந்து (Diuretic) ஆகவும் இருக்கிறது. அமில (அதாவது புளிப்பான, Acid) வஸ்துக்களால் நஞ்சிடு நேரிட்டபோதும், மூத்திரத்தை அதிகப்படுத்துவது நன்மையென்று தோன்றிய காலத்திலும் உபயோகமாகும். தண்ணீரோடு சேர்த்து அழுக்கை நீக்கும்படி உபயோகிக்கலாம். வெந்நீரில் கரைத்து அபானப்பிரயோகநீர் (Clyster) ஆகப் பிரயோகிக்கலாம். இரண்டணாமுதல் ஐந்துரூபாயெடைவரை கொடுக்கலாம்.

சாராயம் (பட்டைச்சாராயம், Arrack) உற்சாகஞ் செய்யும் மருந்து. இது அநேக வியாதிகளின் ஆரம்பத்தில் கொடுப்பதற்கு மிகுந்த உபயோகமான மருந்து. ஒன்றேகால் ஆழாக்கு கொடுக்கலாம். வியாதி வந்தவுடன் இந்த மருந்தைக் கொடுத்தால் வியாதி நீங்கிவிடலாம்.

சிங்கோனப்பட்டை (Cinchona Bark) பலவிருத்தி மருந்தாகவும், காய்ச்சலுக்கு (நமக்குத்தெரிந்த மருந்துகளுள்) மிகச் சிறந்த மருந்தாகவுமிருக்கிறது. எந்தக்

* சுத்திசெய்யாத சாதாரணமான (கரும்புச்) சர்க்கரையும் (பனை) வெல்லமும் சர்க்கரையென்று சொல்லப்பட்டன.

காரணத்தினாலாவது உண்டாகும் மெலிவிலும் கொடுக்கலாம். அரையேயரைக்கால்முதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

**சிற்றாமணக்கெண்ணெய்** (Castor Oil) குடலை முயற்சி செய்யும்படி செய்து மலத்தை இளகச்செய்கிறது. அசீரணம், நஞ்சீடு; வயிற்றுப்பொருமல் இவைகளிலும், மலத்தைக்கட்டுகிற மற்றும் அநேக வியாதிகளிலும் உபயோகமானது. இரண்டரைமுதல் ஏழரை ஆழாக்குவரை கொடுக்கலாம்.

**சீமைக்காடி** (Vinegar) அநேகமாய் உள்ளுக்குக் கொடுக்கப்படுகிறதில்லை; சுளுக்கில் (துணியில் நனைத்து) மேற்பிரயோகஞ்செய்தால், வலியை நிறுத்திக் குணமுண்டாக்கும்; நாட்டுச்சுண்ணாம்பு, சீமைச்சுண்ணாம்பு; ஆக்கிராண உப்பு (Ammoniæ Carbonas) இவைகளால் நஞ்சீடுண்டானபோது இதைக்கொடுப்பதினால் நன்மையுண்டாகும்.

**சீமைச்சுண்ணாம்பு** (Chalk) ஒரு துவர்மருந்து; (அதாவது தேகத்திற் பிரயோகிக்கப்பட்ட பாகத்தை இறுகச்செய்யும் மருந்து, Astringent); குடலிலிருந்து கழியும் கழிவை நிறுத்தும்; புண்களை உலரச்செய்யும். இரண்டரைமுதல் ஐந்துரூபாயெடைவரை கொடுக்கலாம்.

**சீனஎரிவண்டு** (Chinese Fly) ஸ்பானிய எரிவண்டின் செய்கையையுடையது. இதை அதற்குப்பதிலாக உபயோகிக்கலாம்.

**சீனக்காரம் அல்லது படிக்காரம்** (Alum) ஒரு துவர்மருந்து. தேகத்தின் உட்பாகங்களில் இரத்தவடிவுண்டானால் அதற்கும், கழிச்சலுக்கும் உபயோகப்படுத்தலாம். பால்சுரக்காமல் நிறுத்துவது அவசியமானால் அவ்விதம் செய்வதற்கு உதவும். தண்ணீரிற் கலந்து, வாய்நோய்

கால்நோயில் உண்டாகும் புண்களுக்கும், மற்றப்புண்களுக்கும், காயங்களுக்கும் கழுவுநீர் (Lotion) ஆக உபயோகிக்கலாம். அரையேயரைக்கால்முதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

சுக்கு (Dried Ginger) சீரண சக்தியை விருத்தியாக்கும் மருந்தாகவும், சாந்தமாகப் பொதுவான தேக சக்தியை விருத்தியாக்கும் மருந்தாகவும் உபயோகப்படும். வயிற்றுவலி, அசீரணம், வயிற்றுப்பொருமல் இவ்வியாதிகளை மாற்றுவதற்கு உபயோகமாகும்; எந்த வியாதியிலும் உபயோகமில்லாமற்போகாது. இரண்டணா ரூபாயெடை கொடுக்கலாம்.

*சுண்ணாம்பு (நீற்றாதது) [Quicklime, or Unslaked Lime] காரமருந்து (Caustic) ஆகவும், புண்ணிலிருந்து பொசியும் நீரை உலரச்செய்யும் மருந்தாகவும் இருக்கிறது. அடைப்பான், வெக்கை முதலிய தொற்றுவியாதிகள் பரவுங்காலங்களில் நீற்றாத சுண்ணாம்பு அபசஞ்சாரியாகையால் அதின் தூளைக் கட்டட[illegible]க்குத் தூவவாவது, தண்ணீரில் கரைத்து வெள்ளையடிக்கவாவது செய்தால் நன்மையுண்டாகும். நீற்றாத சுடுசுண்ணாம்பை உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது.

சுண்ணாம்பு (நீற்றியது) [Slaked Lime] அசீரணத்திலும், வயிற்றுப்பொருமலிலுங்கொடுக்கலாம். இது வயிற்றிலும் குடலிலுமுள்ள புளிப்பைக் குறைக்கும் சக்தியுடையது. காலேமாகாணிமுதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்

சோம்புவிதை (Aniseed) வயிற்றில் உஷ்ணத்தையுண்டுபண்ணி ஏறக்குறைய எல்லா வியாதிகளிலும்

* நீற்றாதசுண்ணாம்பு "தாளியாத" சுண்ணாம்பென்றும், நீற்றிய சுண்ணாம்பு "தாளித்த" சுண்ணாம்பென்றும் சொல்லப்படுகின்றன.

நன்மைசெய்யும். இரண்டரைமுதல் ஐந்துருபாயெடைவரை கொடுக்கலாம்.

* தார் எண்ணெய் (Tar). இரண்டுவகையான தார்கள் இருக்கின்றன ; ஒன்று மரக்கட்டைகளிலிருந்தும், மற்றொன்று நிலக்கரியிலிருந்தும் செய்கிறார்கள். இவ்விரண்டில் மரத்தார்தான் சிலாக்கியமானது ; கொம்பு, தோல், குளம்பு இவைகளின் வியாதிகளில் பிரயோகஞ்செய்யப்படுகிறது. புண்களின்மேல் பூசினால் அவைகளில் குணப்படும் முயற்சியையுண்டாக்குவதுமல்லாமல் ஈ முதலிய செந்துக்கள் அணுகாமல் தடுக்கிறது. அழுகி நாறிப்போகுந் தன்மையுடைய பொருள்களுக்குத் தாரையெரித்து வரும் புகையை ஊட்டினால் அவைகள் அழுகி நாறாமல் கொஞ்சங்கிடக்கும். தொற்று அல்லது சஞ்சாரமுடைய கால்நடை வியாதிகள் பரவும்போது தொழு முதலிய மாடு நிற்குமிடங்களைச் சுத்திகரிப்பதற்குத் தார்ப்புகை நல்ல அபசஞ்சாரியாகும்.

துத்தம், மயில் "த்" துத்தம், அல்லது துரிசு (Sulphate of Copper) பலவிருத்திமருந்து (Tonic) ஆகவும், துவர் மருந்து (Astringent) ஆகவும், காரமருந்து (Caustic) ஆகவும் இருக்கிறது ; கழிச்சலிலும், சீதபேதியிலும் உபயோகமாகும். பலப்படுத்துவதில் அன்னபேதியை ஒத்தது. காலேமாகாணிமுதல் முக்காலேமும்மாகாணி ருபாயெடைவரை கொடுக்கலாம்.

நல்லெண்ணெய் (Gingelly Oil) கொழுப்படையச் செய்யும் மருந்து. காயத்துக்கு மிகச்சாதாரணமான நல்ல பிரயோகமாகும். வெடித்திருக்குந் தோலுக்கும், தீயினாற்சுட்ட புண்களுக்கும், வெந்நீரில் வெந்த புண்களுக்கும் உபயோகிக்கலாம். இரண்டரைமுதல் ஐந்துருபாயெடைவரை கொடுக்கலாம்.

* தார் எண்ணெய்.—தார்—இல்—இலெண்ணெய்.

(மிகுந்தகாரமுள்ள) நவச்சாரநீர், அல்லது * அம்மோனிய நீர் (Liquor Ammoniæ Fortior) உற்சாகமுண்டாக்கும்படியாகவும், புளிப்பை நிவர்த்திசெய்யும்படியாகவும் தண்ணீர் கலந்து கொடுக்கப்படுகிறது; தேகத்தின்மேல் பிரயோகஞ்செய்தால் எரிவையுண்டாக்குகிறது. சில வேளைகளில் வயிற்றுப்பொருமலிலும், மற்ற வயிற்றைப் பற்றிய வியாதிகளிலும் தண்ணீர் கலந்து கொடுக்கப்படுகிறது. கடுகுப்பற்றுடன், சேர்த்தால் அதின் செய்கையை அதிகப்படுத்துகிறது. இந்த மருந்தை உபயோகிப்பதில் எப்போதும் சாக்கிரதையாயிருக்கவேண்டும். (இது அடங்கிய புட்டியைக்கவலையீனமாகத் திறந்தினால் கண்ணுக்குப் பெருங்கெடுதி நேரிடலாம். ஆகையால், இந்த மருந்துப்புட்டியைக் கண்ணுக்குக்கிட்ட வைத்துத் திறக்கக்கூடாது. இந்த மருந்தைக் கண்ணாடி மூடியுள்ள காற்றுபோகக் கூடாதபுட்டியிலேயே வைக்கவேண்டும்; அல்லவெனில் பலம் குறைந்துபோம்.) அதிகமாகத் தண்ணீர்சேர்த்துப் பலங்குறைக்கப்பட்ட பின்புதான் இந்த மருந்து உள்ளுக்குக் கொடுக்கப்படலாம்.

நவச்சாரம் (Sal Ammoniac, or Ammonium Chloride) ஈரலைச்சேர்ந்த வியாதிகளுக்கு மிகச் சிலாக்கிய மான மருந்து; சாதாரணமாக நிலவேம்போடும் வெடியுப்போடுஞ்சேர்த்துக் கொடுக்கப்படுகிறது. இரண்டணாமுதல் ஐந்துரூபாயெடைவரை கொடுக்கலாம்.

நிலவேம்பு (Chiretta) அன்னபேதியைப்போலப் பிரயோசனமுள்ளது. காய்ச்சல், மெலிவு, அதைப்பு இவைகளில் கொடுப்பதற்கு விசேஷமான மருந்து. ஒன்றேகால் முதல் இரண்டணா ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

---

* அம்மோனிய நீர் என்று சொல்வதே சரியானது; ஆயினும் சில வைத்திய நூல்களில் (Liquor Ammoniæ) என்பது நவச்சார நீர் என்று மொழிபெயர்க்கப்பட்டிருப்பதால், இங்கு நவச்சார நீர் என்று சொல்லப்பட்டது.

நெய் (Ghee) மேற்பிரயோகமாக உபயோகப்படுத்தப்பட்டபோது தயிலம்போலப் புண்களை (மற்றப் பொருள்கள் படாதபடி) காக்கும். இது லேசாகச் சீரணித்து நன்றாக வளர்க்கும் ஆகாரம். காய்ச்சலடிக்கும் போது கொடுக்கக்கூடாது. ஒன்றேகால் ஆழாக்குக் கொடுக்கலாம்.

நேர்வாளக்கோட்டைகள் (Croton Seeds) மிகுந்த பலமுள்ள பேதிமருந்தாகவிருக்கின்றன. அவைகளைக் கவலையுடன் கொடுக்கவேண்டும். மிகுந்த கடினமான மலச்சிக்கில் * நேர்வாளக் கொட்டையில் கால் முதல் முக்கால் † களஞ்சிவரை கொடுத்தால் சீக்கிரம் குணமுண்டாக்கும்.

பர்கண்டி பிச்சு (Burgandy Pitch) சுளுக்கு, எலும்பு முறிவு முதலியவைகளில் (134-ம் பக்கத்திற்சொல்லியபடி செய்யப்பட்ட பற்று ரூபமாகப்) பிரயோகித்தால் நன்மை செய்யும்.

பாக்கு (Areca Nut, or Betel-Nut) துவர் மருந்தாக இருக்கிறது. இதைக் கழிச்சலில் கொடுக்கலாம். கன்றுகளின் கழிச்சலில் முக்கியமாக உபயோகமாகும். ஒன்றேகால் முதல் இரண்டரை ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

ப்பாஷாணம் (Arsenic) பிராணபாயமான கஞ்சாகையால் இதை மிகுந்த சாக்கிரதையுடன் உபயோகிக்க வேண்டும். இது உள்ளுக்குக் கொடுக்கப்பட்டபோது பலவிருத்தி மருந்தாகவும், வெளிப்பிரயோகஞ் செய்யப்

---

* ஒரு நேர்வாளக்கொட்டை (உத்தேசமாக) மூன்றுகிறேன் எடையுள்ளது.

† ஒரு களஞ்சி 80-கிறேன் (Grain) நிறையுள்ளது.

பட்டபோது தோலின்மேலுள்ள வந்தைகளைக் கொல்லும் மருந்தாகவும் இருக்கிறது. மேலே பிரயோகிக்கப்பட்டபோது தோலின் வழியாக இரத்தத்தில் கலந்து நஞ்சின் குணத்தைக் காட்டக்கூடியதாகையால், இதைத் தேகத்தில் பிருந்த இடத்தில் பிரயோகிக்கக்கூடாது. ஒன்றேகால்முதல் இரண்டரை * மஞ்சாடிவரை கொடுக்கலாம்.

† பிசின் (விளாம்பிசின், Wood Apple Gum). அளவுக்கு மிஞ்சிய பேதிமருந்துகளாலாவது, நஞ்சுகளாலாவது, மற்ற அழற்சி வஸ்துக்களினாலாவது உண்டாகும் கழிச்சலில் இந்தப் பிசினைத் தண்ணீரில் கரைத்துக் கொடுத்தால் நன்மை செய்யும். ஐந்துமுதல் பதினைந்து ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

புளி (Tamarind) இளம்பிராணிகளுக்கும், பலவீனமான பிராணிகளுக்கும் சாந்தமான பேதியாகக் கொடுப்பதற்கு மிகவும் உபயோகமானது. காய்ச்சலில் வெப்பங் குறையும்படி கொடுக்கலாம். ஐந்துமுதல் பத்துரூபாயெடைவரை கொடுக்கலாம்.

‡ பூவந்திக்கொட்டை (Soap Nut) வந்தை (Parasite) களினாலாவது, வேறுவகையினாலாவது தோல் வியாதிப்பட்டிருக்கும்போது அதைக் கழுவுவதற்கு உபயோகமாகும்.

---

* 1 மஞ்சாடி=4 கிறேன்=2 குன்றிமணியெடை.

† விளாம்பிசினைப்போலவே கருவேலம்பிசினையும் உபயோகிக்கலாம்.

‡ பூந்திக்கொட்டை "பூத்திக்கொட்டை", "பொன்னாங்கொட்டை", "நெய்க்கொட்டை", "நெய்க்கட்டாங்கொட்டை", "புங்காங்கொட்டை", "பூச்சக்காய்" என்று பலவிதமாகச் சொல்லப்படுகிறது.

பெருங்காயம் (Asafœtida) ஒரு அபாயமில்லாத உற்சாகமருந்து; வயிற்றுவலிக்கும், வயிற்றுப்பொருமலுக்கும் மிகவும் உபயோகமானது; வாயுவை நீக்கிக் குணத்தைச்செய்கிறது. காலேமாகாணி முதல் முக்காலே மும்மாகாணி ரூபாயெடைவரைகொடுக்கலாம்.

* பேதியுப்பு (Epsom Salts, Sulphate of Magnesia, or Magnesium Sulphate) மாடுகளுக்கு அதிகச் சிலாக்கியமுள்ள மிகச்சாதாரணமான பேதிமருந்து. நாற்பது முதல் எண்பது ரூபாயெடைவரை கொடுக்கலாம். இத்துடன் ஒன்றேகால் முதல் இரண்டரை ரூபாயெடைவரை சுக்குப்பொடி சேர்த்துக்கொடுப்பது நல்லது.

மஞ்சள் (Turmeric) உற்சாக மருந்தாகவும், பலவிருத்தி மருந்தாகவுமிருக்கிறது. அரையேயரைக்கால் முதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

மாசக்காய் (Gall-nut) ஒரு துவர்ப்பு மருந்து; கழிச்சலிலும், சீதபேதியிலும் உபயோகமாகும்; அரையே அரைக்கால்முதல் ஒன்றேகால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

மிளகாய் (Chilly) இரைப்பையை உற்சாகப்படுத்திச் சீரண சக்தியை அதிகரிக்கச்செய்யும் மருந்து. கால்லேமாகாணிமுதல் அரையே அரைக்கால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

மிளகு (Pepper) சுக்கைப்போலச் சீரணசக்தி மருந்தாக உபயோகப்பட்டு வயிற்றுவலி, அசீரணம், வயிற்றுப்பொருமல் இவ்வியாதிகளைப் போக்குகிறது. இது மிளகாயைப்பார்க்கிலும் சாந்தமானது. ஒன்றேகால் ரூபாயெடை கொடுக்கலாம்.

---

* பேதியுப்பு சீமைஇந்துப்பு என்றுஞ்சொல்லப்படுகிறது.

மெழுகு (Wax) தேன்கூண்டிலிருந்து சேகரிக்கப்படு கிறது; பற்று (Plaster) கள் செய்வதில் உபயோக மாகிறது.

ரெட்டு ஐயோடைடு ஆவ் மேர்க்குரி, அல்லது பின் ஐயோடைடு ஆவ் மேர்க்குரி (Red Iodide of Mercury, or Biniodide of Mercury) வீக்கங்களையும் எவ்விதமான புடைப்புகளையும் குறைத்து நிவர்த்திசெய்கிறது. இதைத் தனியாகவாவது, மற்ற மருந்துகளுடன் சேர்த்தாவது கொப்புளமருந்தாக உபயோகிக்கலாம். இதை எரிவண்டுடன் சேர்த்தால் மிகவும் நல்ல கொப்புளமருந்தாகும்.

ரோசனம் (Resin) மூத்திரத்தை அதிகப்படுத்தும் (மூத்திரவிருத்தி) மருந்து (Diuretic) ஆகவிருப்பதால், சிறுநீரை அதிகப்படுத்துவதினால் குணமடையத்தக்க வியாதிகளில் உபயோகிக்கலாம்; புண்களிலும், காயங்களிலும் பிரயோகித்தால் அவைகளில் குணப்படும் முயற்சியையுண்டுபண்ணுகிறது; சில பற்று (Plaster) களிலும், களிம்பு (Ointment) களிலும் சேர்க்கப்படுகிறது. ஒன்றேகால்முதல் ஒன்றேமுக்காலேயரைக்கால் ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

வெடியுப்பு அல்லது பொட்டிலுப்பு (Nitre). இதைக் காய்ச்சலுள்ள பிராணிகளுக்கெல்லாம் பயமில்லாமல் தாராளமாகக் கொடுக்கலாம்; தண்ணீரோடு கலந்து குடிப்பதற்கு இனிமையாக இருக்கும்; தண்ணீரிலாவது கஞ்சியிலாவது கலந்து கொடுத்தால் தாகமுள்ள பிராணி உடனே தடையில்லாமல் குடிக்கும். இது மூத்திரத்தின் அளவை அதிகப்படுத்தும். தேகத்திலிருந்து நீரை வெளியாக்கி அதைப்பு (Dropsy) வியாதியிலும், வீக்கத்திலும் நன்மை செய்யும். ஒன்றேகால் முதல் இரண்டரை ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

வெள்ளைத்துத்தம் (Sulphate of Zinc, or White Vitriol) தண்ணீரோடு கலந்து *கழுவுநீர் (Lotion) ஆகத் தேகத்தின் எந்தப்பாகத்திலும் உள்ள புண்களின் மேலும், காயங்களின்மேலும் பிரயோகிக்கப்படுகிறது. முக்கியமாகக் கண்ணோவில் கண்ணைக் கழுவுவதற்கு உபயோகமாகும். கண்ணோவில் உபயோகிக்கும் கழுவுநீர் மிகப் பலங்குறைந்ததாக இருக்கவேண்டும். (129—ம் பக்கத்தில் 2—வது லக்ஷமுள்ள கண்கழுவுநீரைப் பார்க்க.)

வேம்பின் (Neem, or Margosa) இலையும், பட்டையும், எண்ணெயும். இலையைப் போல்ட்டிசு (Poultice) ரூபமாகவாவது, கஷாய ரூபமாகவாவது வீக்கங்களுக்கும், புண்களுக்கும் உபயோகித்தால், வருத்தத்தை நீக்கிச் சுகமுண்டாக்கும். பட்டை பலப்படுத்தும் மருந்துகளிலொன்று ; மிகுந்த பலவீனமுள்ள பிராணிகளுக்குக் கொடுக்கலாம். எண்ணெயைப் புண்களுக்கு உபயோகப்படுத்தினால் வாயு, ஈ முதலானவை தொடவொட்டாமல் தடுத்துச் சுகமுண்டாக்கும். பட்டையை இரண்டரை முதல் ஏழரை ரூபாயெடைவரை கொடுக்கலாம்.

## † மருந்துப்பட்டிகள்.

குறிப்பு :—பின் சொல்லப்படும் மருந்துகளில கட்டியாயிருக்கும் மருந்துகளை நன்றாகப்பொடித்துக்கொள்ளவும், சகல மருந்துகளையும் செவ்வையாகக் கலந்து கொள்ளவும் வேண்டும்.

---

* இரண்டரை ஆழாக்கு தண்ணீரில் உபயோகத்தின் தன்மைக்குத்தக்கபடி ஒன்றேகால் முதல் பதினெட்டு ரூபாயெடைவரை வெள்ளைத்துத்தப் பொடியைக் கரைத்துக்கொள்ளலாம். இந்த மருந்தைப் பொடியாகவும் உபயோகிக்கலாம்.

† மருந்துப்பட்டியென்றாலும், ஔஷதடாப்பு என்றாலும் ஒன்றுதான். (106-வது பக்கத்தினடியிற்பார்க்க.)

## இளங்கஷாயங்கள் அல்லது தேய்நீர்கள்.

இளங்கஷாயங்கள் (Infusions) மிக உபயோகமானவை ; பின்வருகிறபடி சாதாரணமாகச் செய்யப்படுகின்றன, வேண்டிய தாவரமருந்துகளை அரைக்கவாவது, சிறுதுண்டுகளாக வெட்டவாவதுசெய்து ஒருபாத்திரத்தில் போட்டு அதன்மேல் கொதிநீரை விட்டு (மருந்தின் தன்மைக்குத் தக்கபடி) வேண்டிய நேரம் மூடிவைத்துப் பின்பு மேலே நிற்கிற நீரைத் தெளிவாக இறுத்துக் கொள்ளவேண்டும்.

### ஆளிவிதைத்தேய்நீர்

### (Infusion of Linseed, or Linseed Tea)

| | |
|---|---|
| ஆளிவிதை | இரண்டரை ரூபாயெடை. |
| கொதிநீர் | இரண்டரை ஆழாக்கு. |

ஆளிவிதையைப்பொடித்து ஒரு சட்டியிற்போட்டுக் கொதிநீர் விட்டு நாலுமணிநேரம் மூடிவைத்து இறுத்துப் பிராணி சாப்பிடக்கூடியமட்டும் கொடுக்கலாம்.

### காசுக்கட்டித்தேய்நீர் (Infusion of Catechu.)

| | |
|---|---|
| காசுக்கட்டி | ஒன்றேமுக்காலேயரைக்கால் ரூபாயெடை. |
| சோம்பு | ஒன்றேகால் ரூபாயெடை. |
| கொதிநீர் | இரண்டரை ஆழாக்கு. |

மேற்சொல்லிய இரண்டு மருந்துகளையும் (பொடித்து) ஒரு சட்டியிற்போட்டுக் கொதிநீர்விட்டு அரைமணிநேரம் மூடிவைத்துத் தெளிவாக இறுத்துக் கழிச்சலில் அரைமுதல் முக்கால் ஆழாக்குவரை கொடுக்கலாம்.

### சிங்கோனாத்தேய்நீர் (Infusion of Cinchona)

| | |
|---|---|
| சிங்கோனாப்பட்டை | இரண்டரை ரூபாயெடை. |
| கொதிநீர் | இரண்டரை ஆழாக்கு. |

பட்டையைப்பொடித்து ஒரு சட்டியிற்போட்டுக் கொதிநீர் விட்டு இரண்டுமணிநேரம் மூடிவைத்துத் தெளிவாக இறுத்துக்கொள்ளவும். இந்தத் தேய்நீருக் குச் சிங்கோனாப்பட்டைப் பொடிக்குள்ள குணங்கள் உண்டு. அரைமுதல் முக்கால் ஆழாக்குவரை கொடுக்க லாம்.

## கலவைநீர்கள்.

### சீனக்காரநீர் (Solution of Alum)

| | |
|---|---|
| சீனக்காரம் | இரண்டரை ரூபாயெடை. |
| சுத்தசலம் | இரண்டாழாக்கு. |

(இது பிரயோகித்த பாகங்களை இறுகச்செய்யுந் துவர்நீராகவிருக்கிறது. இதைப் பிரயோகிப்பதினால் இரத்தம் வடிதல் நிற்கும்.)

### சுண்ணாம்புநீர் (Lime water)

| | |
|---|---|
| புதிதாக நீற்றிய சுண்ணாம்பு | ஐந்துரூபாயெடை. |
| சுத்தசலம் | இரண்டேமுக்காற்படி. |

இவைகளை ஒருபாத்திரத்திற்கலந்து இரண்டுமூன்று நிமிஷம் நன்றாக்குலுக்கிக்கலக்கி மூடிவைத்துப் பன்னி ரண்டு மணிநேரம் சென்றபின் சுண்ணாம்பு நீரைத் தெளி வாக இறுத்துக் காற்றுப்புகாத (பச்சைநிறப்) புட்டியில் வைத்துக்கொண்டு வேண்டியபோது உபயோகிக்கவும்.

## கழுவுநீர்கள்.

### கண்கழுவுநீர்கள் (Eye-washes)

1.

| | |
|---|---|
| சயக்காடியுப்பு | இரண்டரை மஞ்சாடி அல்லது ஐந்துகுன்றிமணியெடை. |
| சுத்தச்சலம் | ஒன்றேகால் ஆழாக்கு. |

2.

| | |
|---|---|
| வெள்ளைத்துத்தம் | ஒன்றேகால் மஞ்சாடி அல்லது இரண்டரைக்குன்றிமணியெடை. |
| சுத்தசலம் | அரையேஅரைக்கால ஆழாக்கு |

காயங்கழுவுநீர் அல்லது கார்பாலிக்குநீர்

(Lotion for Wounds, or Carbolic Lotion)

| | |
|---|---|
| கார்பாலிக்கமிலம் | ஒருபங்கு. |
| கொதிநீர் | ஐம்பதுமுதல நூறுபங்கு. |

கலந்து நன்றாகக் குலுக்கிப் பின்பு உபயோகிக்கவும். இவ்விதம் கலந்தநீரை அபசஞ்சாரியாகவும் உபயோகிக்கலாம்.

குளிர்ச்செய்யும் நீர் (Cooling Lotion)

| | |
|---|---|
| நவச்சாரம் வெடியுப்பு | வகைக்கு ஐந்துரூபாயெடை. |
| தண்ணீர் | மூன்று ஆழாக்கு. |

இரண்டும் தண்ணீரிற்கரைந்தவுடன் துணியை நனைத்து அழற்சியுள்ள பாகங்களின்மேற் பிரயோகிக்கலாம்.

துவர்நீர் (Astringent Lotion)

| | |
|---|---|
| துத்தம் | அரையே அரைக்கால் ரூபாயெடை. |
| தண்ணீர் | மூன்று ஆழாக்கு. |

புண்ணாற்றும் நீர் (Healing Lotion)

| | |
|---|---|
| வெள்ளைத்துத்தம் ஈயக்காடியுப்பு | வகைக்குஒன்றேகால்ரூபாயெடை. |
| சுத்தசலம் | மூன்று ஆழாக்கு. |

### வாய்நோய் கால்நோயில் காற்புண் கழுவு நீர்

### (Lotion for Sores on Feet in Foot and Mouth Disease)

| | |
|---|---|
| துத்தம் | ஒன்றேகால் ரூபாயெடை. |
| தண்ணீர் | ஒன்றேகால் ஆழாக்கு. |

### வாய்நோய் கால்நோயில் வாய்கழுவு நீர்

### (Wash for Mouth in Foot and Mouth Disease).

| | |
|---|---|
| சீனக்காரம் | அன்றியே அரைக்கால் ரூபாயெடை. |
| தண்ணீர் | ஒரு ஆழாக்கு. |

## களிகள் அல்லது போல்ட்டிஸ்கள்.

### ஆளிவிதைக்களி (Linseed Poultice)

| | |
|---|---|
| * ஆளிவிதைமா | பத்து ரூபாயெடை. |
| நல்லெண்ணெய் | ஒன்றேகால் ரூபாயெடை. |
| கொதிநீர் | ஒன்றேகால் ஆழாக்கு. |

இது வீக்கத்தையும் அழற்சியையும் தணிக்கும்.

### கடுகுப்பற்று (Mustard Poultice)

| | |
|---|---|
| கடுகுப்பொடி, ஆளிவிதை | வகைக்கு ஆறேகால் ரூபாயெடை. |
| வெதுவெதுப்பான வெந்நீர் | ஒன்றேகால் ஆழாக்கு. |

இது பிரயோகிக்கப்பட்ட பாகத்தைச் சிவக்கச் செய்து அழற்சியை ஆற்றி, இரத்தக்கட்டை (Congestion) யும், வருத்தத்தையும், வலி அல்லது இழுப்பை (Spasm) யும் தணித்துக் குணஞ்செய்கின்றது.

### கடுகுப்பற்று நவச்சாரநீர் கலந்தது

### (Ammoniated Mustard Poultice)

கடுகுப்பொடி பன்னிரண்டரை ரூபாயெடை.
காரமுள்ள நவச்சாரநீர் அரை ஆழாக்கு.
வெதுவெதுப்பான வெந்நீர் ஆழாக்கு.

இது முன்சொன்ன கடுகுப்பற்றின் குணங்களையுடையது; ஆனால் அதிலும் இது மிகுந்தகாரமுள்ளது.

### கரிக்களி (Charcoal Poultice)

அடுப்புக்கரி ஒன்றேகால் ரூபாயெடை.
* ஆளிவிதை எட்டேமுக்கால் ரூபாயெடை.
கொதிநீர் ஒன்றேகால் ஆழாக்கு.

மாவையும் நீரையும் கலந்து களியாக்கியவுடன் கரிப்பொடியிற் பாதியை நன்றாகச்சேர்த்து, மற்றப்பாதியைக் களியின்மேல் தூவிக்கொள்ளவும். இதைச் சூடாகவிருக்கும்போது நாற்றமுள்ள புண்களுக்குப் பிரயோகிக்கலாம்.

### தவிட்டுக்களி (Bran Poultice)

தவிடு இரண்டு முதல் மூன்றுபாகம்.
* ஆளிவிதைமா ஒருபாகம்.
கொதிநீர் { மேற்சொல்லியவைகளைக் களியாக்கப்போதுமானது.

இது வருத்தத்தையும் அழற்சியையும்தணிக்கிறது.

---

* ஆளிவிதைமா இல்லையானால், அதற்குப்பதிலாகக் கோதுமை மாவையாவது, அரிசிமாவையாவது உபயோகிக்கலாம்.

## களிம்புகள்.

### குளம்புக்களிம்புகள் (Hoof Ointments)

1.

தார் பதினைந்து ரூபாயெடை.
கொழுப்பு (நெய்) பத்து ரூபாயெடை.
மெழுகு ஒன்றேகால் ரூபாயெடை.

இந்த மருந்துகளைச் சூடவைத்து நன்றாகச் சேரும்படி செய்யவும்.

2.

தார்
ரோசனம்
கொழுப்பு (நெய்) } மூன்றும் சமநிறை.

இவைகளை இளஞ்சூட்டினால் இளக்கிக் கலக்கவும். களிம்பு குளிரும் வரை கிண்டிக்கொண்டிருக்கவும்.

இவ்விரண்டு களிம்புகளைக் குளம்புச்சிலந்தி (Foot-rot) யிலும், குளம்பழுக (Foul) விலும், வெடியுப்பு முதலிய வியாதிகளிலும் குளம்பில் பிரயோகிக்கலாம்.

### கோடுஞ்சொறிக்குக் களிம்பு (Ointment for Mange)

தார் இருபத்தைந்து ரூபாயெடை.
கருப்பூரத்தயிலம் கால் ஆழாக்கு.
தேங்காயெண்ணெய் அரைக்கால் ஆழாக்கு.
கந்தகம் ஏழரை ரூபாயெடை.

### கொப்புளக்களிம்புகள்
### (கொப்புளிக்கச்செய்யும் களிம்புகள்)
### [Blistering Ointments]

1.

ஸ்பானிய எரிவண்டு
அல்லது சீன எரிவண்டு } ஒன்றேகால் ரூபாயெடை.
கொழுப்பு (நெய்) பத்து ரூபாயெடை.

2.

ரெட்டு ஐயோடைடு ஆவ்மெர்க்குரி } அரையே அரைக்கால் ரூபாயெடை.
கொழுப்பு (நெய்) ஐந்து ரூபாயெடை.

### பற்றுக்குக்களிம்பு (Ointment for Ringworm)

கந்தகம் இரண்டரை ரூபாயெடை.
கொழுப்பு (நெய்) பத்து ரூபாயெடை.

### புண்களுக்குக் களிம்பு (Ointment for Ulcers)

ரோசனம் பத்து ரூபாயெடை.
கொழுப்பு (நெய்) ஏழரை ரூபாயெடை.
கருப்பூரத்தயிலம் மெழுகு } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.

முதலில் கொழுப்பையும் மெழுகையும் உருக்கிய பின் ரோசனத்தைச் சேர்க்கவும். இந்தக் கலவைமருந்து அநேகமாய்க் குளிர்ந்துபோனவுடனே கருப்பூரத்தயிலத்தைச் சேர்த்துக்கொள்ளவும்.

## தயிலங்கள் அல்லது எண்ணெய்கள்.

### புண்களுக்குத்தயிலம் அல்லது கார்பாலிக்கெண்ணெய் (Oil for Wounds, or Carbolic Oil)

கார்பாலிக்கமிலம் ஒருபாகம்.
தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெய் } பதினைந்துமுதல் முப்பது பாகம்.

### கொப்புளத்தயிலம்

(கொப்புளிக்கச்செய்யுந் தயிலம்)

(Blistering Oil)

ஸ்பானிய எரிவண்டு, அல்லது சீன எரிவண்டு } இரண்டரை ரூபாயெடை.
தேங்காயெண்ணெய் இருபது ரூபாயெடை.

எண்ணெயைச் சுடவைத்தபின் அதில் எரிவண்டுப் பொடியைச் சேர்க்கவும்.

## பற்றுகள் அல்லது பிளாஸ்திரிகள்.

சுளுக்குமுதலானவைகளுக்குப்பற்று

(Plaster for Spains&c)

| | |
|---|---|
| பர்கண்டி பிச்சு | ஐம்பது ரூபாயெடை. |
| ரோசனம்<br>மெழுகு | வகைக்கு ஐந்தரையே அரைக் கால் ரூபாயெடை. |
| நல்லெண்ணெய்<br>தண்ணீர் | வகைக்கு அரைக்கால் ஆழாக்கு. |

இந்த மருந்துகளைச் சட்டியிற்போட்டு உருக்கித் திண்ணமாக்கிக்கொள்ளவேண்டும்.

| | |
|---|---|
| கடுதப்பற்று.<br>கடுதப்பற்று நவச்சார நீர் கலந்தது. | (களிகளைப்பார்க்க.) |

### *பானங்கள்.

இந்தத்தலைப்பின் அடியில் ஒவ்வொரு மருந்துப் பட்டியிலும் குறிக்கப்படும் மருந்துகளையும் அரை அல்லது ஒருபடி வெதுவெதுப்பான கஞ்சியல்லது வெந்நீரில் செம்மையாகக்கலந்து கொடுக்கவும். (பானங்களைக் †கொட்டத்தில் விட்டாவது, புட்டியில் விட்டாவது கொடுக்கலாம். கொட்டத்தை உபயோகிப்பதே அதிக எளிதானதாகவும், பத்திரமானதாகவும் இருக்கிறது. எதிற்கொடுத்தாலும் மருந்தை நன்றாகக் குலுக்கிக் கலக்கிக் கொடுக்கவேண்டும்.)

---

* பானம் (Drink).—குடிக்கும்படி செய்யப்பட்ட சலரூபமான மருந்து.

† கொட்டம்.—பிராணிகளுக்குப் பானங்களைக்கொடுக்கும்படி சாதாரணமாக மூங்கிற் குழலினாற் செய்யப்பட்டிருக்கும் ஓர் ஏனம்.

அடைப்பானுக்குப்பானம் (Drinks for Anthrax)

கார்பாலிக்கமிலம் அறுபது துளி.
கறியுப்பு இரண்டரை ரூபாயெடை.

அதைப்புக்குப்பானங்கள் (Drinks for Dropsy)

1.

அன்னபேதி காலேமாகாணி ரூபாயெடை.
ரேசனம் } வகைக்கு அரையே அரைக்கால்
வெடியுப்பு } ரூபாயெடை.

2.

வெடியுப்பு அரையே அரைக்கால் ரூபாயெடை.
காலோமல் காலேமாகாணி ரூபாயெடை.

இருமலுக்குப்பானங்கள் (Cough Drinks)

1.

கருப்பூரம் அரையே அரைக்கால் ரூபாயெடை.
வெடியுப்பு }
சுக்கு } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.
சோம்பு }
நிலவேம்பு அரையே அரைக்கால் ரூபாயெடை.

2.

கருப்பூரம் } வகைக்கு அரையே அரைக்கால்
வெடியுப்பு } ரூபாயெடை.

சீரணசக்திப்பானம்

(Drink for Derangement of Stomach)

ஆக்கிராண ... }
நிலவேம்பு } வகைக்கு அரையே அரைக்கால்
சுக்கு } ரூபாயெடை.

இது சீரண சக்தியை அதிகரிக்கச்செய்யும்.

## ஈரல் வியாதிக்குப் பானங்கள்

## (Drinks for Liver Disease)

1.

| | |
|---|---|
| காலோமல் | காலேமாகாணி ரூபாயெடை. |
| பேதியுப்பு | பதினைந்து ரூபாயெடை. |
| கறியுப்பு | அரையே அரைக்கால் ரூபாயெடை. |
| சோம்பு, சுக்கு | வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை. |

2.

| | |
|---|---|
| நவச்சாரம் | இரண்டரை ரூபாயெடை. |
| பேதியுப்பு | பத்துரூபாயெடை. |
| சுக்கு, சோம்பு | வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை. |

## ஊழ்த்தல்நோய்க்குப்பானம் (Drink for Rot)

| | |
|---|---|
| கறியுப்பு | காலேமாகாணி ரூபாயெடை. |
| கருப்பூரத்தயிலம் | இரண்டுடிரும் அல்லது நூற்றிருபது துளி. |
| அன்னபேதி | அரைக்காற் களஞ்சி அல்லது ஐந்துகுன்றிமணியெடை. |
| சுக்கு | கால்வராகனெடை அல்லது அரைக்காலே அரையேமாகாணி ரூபாயெடை. |

இது மற்ற மருந்துப்பட்டிகளில் சொல்லிய மருந்துகளைப்போல் ஒரு முழுமாட்டுக்குக் கொடுக்கப்படுவதாக இல்லாமல், ஒரு ஆட்டுக்குக் கொடுக்கப்படவேண்டியதாகவிருக்கிறது.

## கழிச்சலுக்குப்பானங்கள் (Drinks for Diarrhœa)

1.

அபின் — காலேமாகாணி ரூபாயெடை.
சீமைச்சுண்ணாம்பு, சோம்பு — வகைக்கு இரண்டரை ரூபாயெடை.

2.

சீமைச்சுண்ணாம்பு — இரண்டு ரூபாயெடை.
காசுக்கட்டி — அரையே அரைக்கால் ரூபாயெடை.

## காய்ச்சலுக்குப்பானங்கள் (Drinks for Fever)

1.

சிங்கோனைப்பட்டை — அரையே அரைக்கால் ரூபாயெடை.
வெடியுப்பு — ஒன்றேகால் ரூபாயெடை.
கந்தகம் — ஐந்துரூபாயெடை.

2.

கருப்பூரம், ஆக்கிராண உப்பு — வகைக்கு அரையே அரைக்கால் ரூபாயெடை.
நிலவேம்பு, சுக்கு, சோம்பு — வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.

## கால்வீக்கத்துக்குப்பானம் (Drink for Swollen Legs)

வெடியுப்பு — அரையே அரைக்கால் ரூபாயெடை.
காலோமல் — காலேமாகாணி ரூபாயெடை.

### குடற்கிருமி (அல்லது குடலில்வாழும் வந்தை) களுக்குப்பானங்கள் (Drinks for Worms)

1.

கருப்பூரத்தயிலம் கால் ஆழாக்கு.
ஆளிவிதையெண்ணெய் இரண்டரை ஆழாக்கு.

2.

காலோமல் காலேமாகாணி ரூபாயெடை.
கருப்பூரத்தயிலம் கால் ஆழாக்கு.
ஆளிவிதையெண்ணெய் } இரண்டரை ஆழாக்கு.

### சாந்தமான பேதிப்பானம் (Laxative Drink)

பேதியுப்பு பதினைந்து ரூபாயெடை.
கந்தகம் பத்து ரூபாயெடை.
நிலவேம்பு, இஞ்சி } வகைக்கு இரண்டரை ரூபாயெடை.

இது கொஞ்சமாகப் பேதியாகும்படி கொடுக்கலாம்.

### சீதபேதிக்குப்பானங்கள் (Drinks for Dysentery)

1.

துத்தம், அபின் } வகைக்குக் காலேமாகாணி ரூபாயெடை.
சீமைச்சுண்ணாம்பு இரண்டரை ரூபாயெடை.
சுக்கு அரையே அரைக்கால் ரூபாயெடை.
சோம்பு ஒன்றேகால் ரூபாயெடை.

2.

| | |
|---|---|
| இபிகாக்குவேர் | அரையே அரைக்கால் ரூபாயெடை. |
| கார்பாலிக்கமிலம் | முப்பது துளி. |
| சோம்பு | ஒன்றேகால் ரூபாயெடை. |
| சுக்கு | அரையேயரைக்கால்ரூபாயெடை. |

### சீரணசக்திப்பானம் (Drink for Stomach)

| | |
|---|---|
| மிளகாய் | காலேமாகாணி ரூபாயெடை. |
| சுக்கு<br>மிளகு<br>கிராம்பு<br>சோம்பு | வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை. |

### *சுகஸ்தாபனப்பானம் (Alterative Drink)

| | |
|---|---|
| கந்தகம்<br>வெடியுப்பு | வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை. |

### சுவாசாசய வியாதி அல்லது புப்புசபரிப்புப்புச அழற்சிப்பானம் (Drink for Lung Disease or Pleuro-pneumonia)

| | |
|---|---|
| அபின்<br>கருப்பூரம்<br>காலோமல் | வகைக்குக் காலேமாகாணி ரூபாயெடை. |

---

* சுகஸ்தாபன மருந்து.—தேகத்தின் கருவிகளின் தொழில்கள் சீர்கெட்டிருந்தால் அவைகளைப் படிப்படியாய்ச் சீராக்கிச் சுகத்தை ஸ்தாபிக்கும் மருந்து.

### சுவாசாசய (த்தைப்பற்றிய) வியாதிகளுக்குப்பானம் (Drink for Lung Diseases)

ஆக்கிராண உப்பு அரையே அரைக்கால் ரூபாயெடை.
சுக்கு ஒன்றேகால் ரூபாயெடை.
பட்டைச்சாராயம் ஆழாக்கு.

### திமிர்வாதத்துக்குப்பானங்கள் (Drinks for Paralysis)

1.

எட்டிவிதை { கால்வராகனெடை அல்லது அரைக்காலே அரையாகாணி ரூபாயெடை.
அன்னபேதி காலேமாகாணி ரூபாயெடை.
பேதியுப்பு பத்துரூபாயெடை.
மிளகாய் } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.
இராம்பு }

2.

அன்னபேதி காலேமாகாணி ரூபாயெடை.
நிலவேம்பு இரண்டரை ரூபாயெடை.
கறி உப்பு ஒன்றேகால் ரூபாயெடை.

### தோல்வியாதிகளுக்குப்பானம் (Drink for Skin Diseases)

நவச்சாரம் ஒன்றேகால் ரூபாயெடை.
பாஷாணம் { ஒன்றேகால் மஞ்சாடி அல்லது இரண்டரைக் குன்றிமணியெடை.

### பலவிருத்திப்பானங்கள் (Tonic Drinks)

1

சோம்பு இரண்டரை ரூபாயெடை.
சுக்கு } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.
நிலவேம்பு }
சர்க்கரை ஐந்து ரூபாயெடை.

2.

அன்னபேதி
வேம்பு } வகைக்கு அரையே அரைக்கால் ரூபாயெடை.
சுக்கு காலேமாகாணி ரூபாயெடை.

3.

இங்கோனுப்பட்டை
கருப்பூரம் } வகைக்குக் காலேமாகாணி ரூபாயெடை.
சுக்கு அரையேயரைக்கால் ரூபாயெடை.

இந்தப்பானங்கள் தேகபலத்தை விருத்திசெய்யும்.

## பேதிப்பானங்கள்

## (பேதியுண்டாக்கும் பானங்கள்)

## [Purgative Drinks]

1.

பேதியுப்பு ஐம்பது ரூபாயெடை.
சர்க்கரை ஐந்து ரூபாயெடை.
சுக்கு
சோம்பு } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.

2.

சிற்றாமணக்கெண்ணெய் மூன்றேமுக்கால் ஆழாக்கு.
பட்டைச்சாராயம் அரை ஆழாக்கு.
சோம்பு ஒன்றேகால் ரூபாயெடை.

## வயிற்றுப்பொருமலுக்குப்பானங்கள்

## (Drinks for Tympanitis)

1.

கஞ்சாவிலை ஒன்றேகால் ரூபாயெடை.
அடுப்புக்கரி ஐந்து ரூபாயெடை.

பட்டைச்சாராயம் அரை ஆழாக்கு.

கிராம்பு
மிளகாய் } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.

2.

ஆக்கிராண உப்பு
கிராம்பு
மிளகாய் } வகைக்கு ஒன்றேகால் ரூபாயெடை.

அபின் காலேமாகாணி ரூபாயெடை.

பட்டைச்சாராயம் அரை ஆழாக்கு.

### வயிற்றுவலிக்குப்பானம் (Drink for Belly Pain)

அபின் காலேமாகாணி ரூபாயெடை.

ஆக்கிராண உப்பு
கருப்பூரம் } வகைக்கு அரையே அரைக்கால் ரூபாயெடை.

பட்டைச்சாராயம் ஆழாக்கு.

இந்த மருந்தைச் சேர்த்த உடனே கொடுக்கவேண்டும்.

### வாதத்துக்குப்பானம் (Drink for Rheumatism)

கந்தகம்
நவச்சாரம் } வகைக்கு இரண்டரை ரூபாயெடை.

பட்டைச்சாராயம் முக்கால் ஆழாக்கு.

### வேக்கைக்குப்பானம்

### (Drink for Rinderpest)

கார்பாலிக்கமிலம் ஒரு திரும் அல்லது அறுபது துளி.

கறியுப்பு இரண்டரை ரூபாயெடை.

பட்டைச்சாராயம் ஒரு ஆழாக்கு.

## வெக்கை வியாதியில் பேதியாரம்பித்தபின் கொடுக்கும்பானம்

(Drink for Diarrhœa in Rinderpest)

| | |
|---|---|
| மாசக்காய் அல்லது காசுக்கட்டி | காலேமாகாணி ரூபாயெடை. |
| சீமைச்சுண்ணாம்பு | அரையே அரைக்கால் ரூபாயெடை. |
| அபின் | கால்வராகனெடை அல்லது அரைக்காலே அரைமாகாணி ரூபாயெடை. |

இதைப் பேதிநிற்கும்வரை தினந்தோறும் இரண்டு முறை கொடுக்கவும்.

## பூச்சுத்தயிலங்கள்.

### கருப்பூரத்தயிலப் பூச்சுத்தயிலம்

(Liniment of Turpentine)

| | |
|---|---|
| சவர்க்காரம் | ஒன்றேமுக்கால் ரூபாயெடை. |
| கருப்பூரம் | இரண்டரை ரூபாயெடை. |
| கருப்பூரத்தயிலம் | இரண்டாழாக்கு. |

கருப்பூரத்தைக் கருப்பூரத்தயிலத்தில் கரைத்துப் பின்பு, சவர்க்காரத்தைப் பொடியாக்கி நன்றாகக் கலக்கும்படி தேய்த்துச் சேர்க்கவும்.

சுளுக்கு முதலிய காரணங்களினால் வருத்தமடைந்திருக்கிற பாகங்களில் பிரயோகித்தால் வேதனையை நீக்குகிறது; தொண்டைப்புண்போன்ற வியாதிகளில் மேற்பிரயோகஞ்செய்ய உபயோகமாகும்.

## குணப்படும் முயற்சியுண்டாக்கும் பூச்சுத்தயிலம்

## (Stimulating Liniment.)

தேங்காயெண்ணெய் ஒன்றேகால் ஆழாக்கு.
கருப்பூரத்தயிலம் } வகைக்கு அரை ஆழாக்கு.
தண்ணீர் }
காரமுள்ள நவச்சார நீர் கால் ஆழாக்கு.

(இதைச் சுளுக்குள்ள பாகங்களிலும், அழற்சியடைந்து குணமடைந்துவரும் பாகங்களிலும் மேற்ரபியோகமாக உபயோகிக்கலாம்.)

## சவர்க்காரப்பூச்சுத்தயிலம் (Soap Liniment)

| | |
|---|---|
| சவர்க்காரம் | ஏழரை ரூபாயெடை. |
| கருப்பூரம் | இரண்டரை ரூபாயெடை. |
| காரமுள்ள பட்டைச் சாராயம் | ஐந்து ஆழாக்கு. |
| காரமுள்ள நவச்சார நீர் | அரை ஆழாக்கு. |
| தண்ணீர் | ஒரு ஆழாக்கு. |

(இதற்குக் கருப்பூரத்தயிலப் பூச்சுத்தயிலத்தின் குணமெல்லாம் உண்டு.)

# பொடி.

## காரப்பொடி (Caustic Powder)

துத்தம் } வகைக்கு இரண்டரை ரூபாயெடை.
சீமைச்சுண்ணாம்பு }

இது சதைவளர்ந்தும் நெடுநாள் ஆறாமலும் இருக்கிற புண்களின்மேற் பிரயோகித்தால் குணஞ்செய்யும்.

## மேற்பிரயோகங்கள்.

### கிருமிகளுக்கு மேற்பிரயோகம்

### (Dressing for Maggots)

கார்பாலிக்கமிலம் } வகைக்கு அரையே அரைக்கால்
கருப்பூரம் } ரூபாயெடை.
வேப்பெண்ணெய் அரை ஆழாக்கு.

இது கிருமி பற்றியிருக்கும் புண்களுக்குப் பிரயோகிப்பதற்குச் சிலாக்கியமானது.

### கொப்புளித்த பாகங்களுக்கு மேற்பிரயோகம்

### (Dressing for Blistered Surface)

சுண்ணாம்பு நீர் (சுண்ணாம்பு நீரைப் பார்க்க.) } அரை ஆழாக்கு.
தேங்காயெண்ணெய் ஒரு ஆழாக்கு.

### புண்கள் ஆழமானவைகளுக்கு மேற்பிரயோகம்.

### (Dressing for Deep Ulcers)

ஈயக்காடியுப்பு { முக்காலே மும்மாகாணி ரூபாயெடை.
பட்டைச்சாராயம் கால் ஆழாக்கு.

### வைசூரிப்புண்களுக்கு மேற்பிரயோகம்

### (Dressing for Sores in Pox)

நல்லெண்ணெய் ஆழாக்கு.
கார்பாலிக்கமிலம் காலேமாகாணி ரூபாயெடை.

## சூ—வது அதிகாரம்.

### பிராணிகளை *விருத்தியாக்கி வளர்ப்பதைப்பற்றியது.

பிராணிகளை விருத்தியாக்கி வளர்ப்பதைப்பற்றிய சில விஷயங்கள் சாதாரணமாகத் தெரிந்தவைகளாக விருந்தாலும், அவைகள் வழக்கத்தில் வெகு அபூர்வமாக அநுசரிக்கப்படுகின்றன; அவைகளைப்பற்றிக் கவனஞ்செலுத்தப்படவேண்டுமென்று நான் இந்த அதிகாரத்தை எழுதுகிறேன். இந்தியாவில் பிராணிகளை விருத்திசெய்தல் யாதொரு ஒழுங்கும் முறையுமில்லாமல் நடந்துவந்திருக்கிறது; யதார்த்தத்தில் எல்லாம் (மனிதர் முயற்சியில்லாமல்) சுபாவமாக 'எப்படி நடக்கக்கூடுமோ அப்படியே அநேகமாய் நடக்கும்படி விட்டிருக்கிறார்கள். கவர்ன்மெண்டாருடைய பராமுகத்தினாலும், உடையவர்களுடைய அசாக்கிரதையினாலும் மாடுகளின் பல சாதிகளும், ஆடு குதிரைகளின் பல சாதிகளும், மெய்யாகவே சகல பிராணிகளின் வருக்கங்களும் பருமையிலும், வடிவத்திலும், விலையிலும் மிகக்குறைந்திருக்கின்றன. கவர்ன்மெண்டார் குதிரைகளையும், கோவேறு கழுதைகளையும் விருத்தியாக்க முயற்சித்திருக்கிறார்கள்; ஆனால் அவர்கள் மற்றப் பிராணிகளின் விருத்தியைப் பற்றி இன்னம் முயற்சிக்கவில்லை. "ஒத்தபொருள் ஒத்தபொருளையுண்டுபண்ணுகிறது" (அதாவது, ஒரு பொருள் தன்னைப்போன்ற பொருளையுண்டுபண்ணு

---

* பிராணிகளை விருத்தியாக்குதல் (Breeding).—பிராணிகளை நல்ல தேகக்கட்டு, பலம், அழகு முதலிய நற்குணமுடையவைகளாகப் பெருகச்செய்தல்.

கிறது) என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். எந்த மாடுகளிலிருந்து உங்கள் இளங்கன்றுகளையுண்டுபண்ணுகிறீர்களோ அந்த மாடுகளைப்போல உங்கள் கன்றுகளுக்கும் உருவமும் குணங்களும் உண்டாகும். ஆகையால், எந்தப் பிராணிகளிலிருந்து நீங்கள் வேறு பிராணிகள் உண்டுபண்ணப்போகிறீர்களோ, அந்தப்பிராணிகள் உங்கள் ஜில்லாவுக்கு ஏற்றதாகவும், உங்கள் தேசத்துக் காற்று நீர் வெப்பந் குளிர்ச்சியால் வருந்தமடையாமல் செழிப்பாக வளரக்கூடியவைகளாகவும் இருக்கவேண்டும். ஆங்கிலேய தேசத்துப் பாரிமாடுகளைக் கொண்டுவந்து அவைகளை இந்தியாவெங்கும் பிரித்துவிடுவதில் பிரயோசனமில்லை. இங்கிலிஷ் எருதுகள் இத்தேசத்துச் சூட்டினால் வருந்திச் சந்ததியுண்டாக்கத் தகுதியற்றவைகளாகலாம்; ஆனால் * ஏடென் தேசத்து எருதுகளும் கால்நடைகளை விருத்திசெய்வதில் மிகப்பேர்பெற்ற ஜில்லாக்களிலிருந்து கொண்டுவரப்பட்ட காளைகளும் மிகவும் உபயோகமாகலாம்; அவைகள் உங்கள் ஜில்லாப்பசுக்களுடன் சேர்ந்து உண்டாகும் கால்நடைகள் பால் கொடுப்பதிலும், வேலைசெய்வதிலும், மாமிசமுண்டாக்குவதிலும் விருத்தியடையும். பூரணமாக வளர்ந்து சரியான பருவமடையாத இளம்பிராணிகளைச் சந்ததியுண்டாக்கும்படி இடங்கொடுக்கக்கூடாது. இந்த விதியை அசட்டை செய்வதினால்தான் இந்தியா தேசத்துப் பிராணிவருக்கங்கள் உருவிற் சிறியவைகளாகவிருக்கின்றன. இப்படியிருப்பதினால் சந்ததி குறுகியதாகிறது; காலக்கிரமத்தில் பிராணிகள் மேலும் அதிகச் சிறியவைகளாக உண்டாகின்றன. இத்தேசத்தில் சாதாரணமாகக் கால்நடைகளைப் பராமரித்துவரும் வழக்கத்தினால் இந்த அபாயம் மிகவும் அதிகமாய் நேரிடக்கூடியதாகவிருக்கிறது. பெண்ணாக உள்ள இளம்பிராணிகளுக்குச் சேர்க்கைப்பிரியம் உண்டான உடனே ஒரு

---

* ஏடென்.—அரேபியா தேசத்திலுள்ள ஒரு நகரம்.

ஆண் அதைச்சேருகிறது; இப்படிச் சேர்வதினல் அது கன்றைக் காப்பாற்றுவதற்காவது, கன்று பிறந்தபின் அதற்குப்போதுமான பால் கொடுக்கவாவது வேண்டிய சக்தி உண்டாகுமுன்னமே சினையாகிவிடுகிறது. இதனல் வயிற்றிலிருக்கிற கன்றுக்குப்போதுமான உணவு கிடைக்கும்படி தாயின் (உணவு செலவாகி) வளர்ச்சி தடைபடுகிறது. ஆண்கள் மிகுந்த இளவயதிலேயே பெண் (பிராணி) களை மிகவும் அடிக்கடி சேர்வதினல் அவைகளால் கருப்பமுண்டாகுவது மிகச்சந்தேகமாகவிருப்பதுமல்லாமல், அவைகள் வெகு சீக்கிரமாக இளைத்துச் சந்ததி விருத்திசெய்யச் சக்தியற்றவைகள் ஆகின்றன. அவைகள் இவ்விதமாகப் பெண்களைப்போல வளர்ச்சியிற் குறுகிச் சிறுத்த சுகவீனமான சந்ததியுண்டாக்குகின்றவைகளாகின்றன. அவலட்சணமான கோணிய அங்கங்களுள்ள பிராணிகள் சந்ததியுண்டாக்கும்படி இடங்கொடுக்கக்கூடாது. இடங்கொடுப்பதினல் உண்டாகும் அபாயம் என்னவென்றல், உபயோகமான வருக்கம் உண்டாவதற்குப்பதிலாக, அவலட்சணமான பிரயோசனமற்ற வருக்கமுண்டாகிறது. உபயோகமான பிராணிகளைப் போஷித்து வளர்ப்பதற்குச் செல்லும் செலவு இந்த வருக்கத்துப்பிராணிகளுக்கும் செல்லும். ஆகையால், இவ்விதமாகப் பிராணிகளை உண்டுபண்ணுவது மூடத்தனமாகவும், பணத்தையும் காலத்தையும் வீணகச் செலவழிப்பதற்கும் பலனற்ற தொந்தரவெடுப்பதற்கும் காரணமாகவுமிருக்கிறது. சந்ததியுண்டுபண்ணத் தகுதியற்ற ஆண்களை இளவயதிலேயே விதையெடுத்து விடுவதினல் அவைகள் தீங்குசெய்யவொட்டாமல் தடுக்கலாம். அப்படிச் செய்தபின்னும் அவைகள் வேலைக்கு உபயோகமாகவிருக்கும்; மேலும் அவைகளின் மாமிசம் (சுவையிலும் அளவிலும்) விருத்தியாகிறது; அவைகள் வளர்ந்து பருத்தமாடுகள் ஆகும்.

சகல உபயோகமற்ற ஆண்களும் அவைகள் பெண்களைச் சேர்வதற்கு ஏதாவது சந்தர்ப்பம் நேரிடுமுன், விதை யெடுக்கப்படவேண்டும். ஆண்களின் விதைகளை எடுத்து விடுவதில் சில சுதேசிகளுக்கு மதக்கோட்பாடான ஆட்சேபனைகளிருந்தும் சகலவகைப் பிராணிகளுக்கும் விதையெடுக்கும் வழக்கமானது அதினாலுண்டாகும் நற்பயன்கள் தெளிவாகவும், குறிப்பிட்டவைகளாகவும் இருப்பதால் எங்கும் பரவிக்கொண்டு வருகிறது. ஒரு சில்லாவில் பிராணிகள் விருத்தியடைவதற்கு, சரியான படி நிதானித்து மேற்பார்க்கத்தக்கவர்கள் முன்பு, விதை யெடுக்கும் வேலை நடத்தப்படவேண்டியது முக்கிய மானது. நன்றாக விதையெடுப்பது பிராணிகளை விருத்திசெய்வதற்கு வேண்டுமென்று தெரிந்துகொள்ளக் கூடிய புத்திமான்களுடைய நன்மைக்காக, கவர்ன்மெண்டார் இந்த மாதிரி விசேஷமான தொழிலைத் தெரிந்து கொள்ளும்படி சில மனிதரைப்பயிற்றி அவர்களைப் பல சில்லாக்களுக்கும் அனுப்புகிறார்கள்.

ஒரு பிராணியிடத்திலிருந்து அதன் சந்ததிக்கு இறங்கக்கூடிய அநேக வியாதிகளிருக்கின்றன. அவலட்சணமான உருவமுடைய பிதாவினால் அந்தக்கேடான சந்ததியுண்டாவதுபோலவே, ஒரு வியாதியுள்ள பொலி எருதினால் அதுபோலவே வியாதியுள்ள வமிசமாவது, அதன் வியாதியை மிகவும் எளிதாகப் பெற்றுக் கொள்ளக்கூடிய வமிசமாவது உண்டாகும். ஆகையால், சந்ததி விருத்திக்காக உபயோகப்படுத்தும் பிராணிகள் சுகமுள்ளவைகளாகவும், யாதொரு வியாதியுமில்லாதவைகளாகவும் இருக்கவேண்டும். சகல பிராணிகளையும் விருத்தியாக்குவதில் இந்த விதியை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். மேலும், சந்ததியுண்டாக்கும் பிராணிகள் மிகக் கிழமாகவாவது இளைத்தாவது இருந்தால்,

உண்டாகும் சந்ததி பலவீனமாகவும், சிறிதாகவும், செலவுசெய்து பிரயாசையெடுத்து வளர்ப்பதற்குத் தகுதியற்றதாகவும் இருக்கும்; ஆகையால், சரியான பருவமடைந்து திடமுள்ளவைகளாகவும், ஒரு வியாதியாவது இல்லாதவைகளாகவும், சகல அங்கங்களும் நன்றாக அமைந்தவைகளாகவும், அந்த அந்த ஜில்லாக்களுக்கேற்றவைகளாகவும் உள்ள பிராணிகளையே சந்ததியுண்டாக்குவதற்கு உபயோகப்படுத்த வேண்டும்.

காளை தக்க பருவமடைந்ததாகவும், பசுக்களைச் சரியாகச்சேரச் சக்தியுள்ளதாகவும் இருக்கவேண்டும். அதின் குறைகளைப் பசுவின் குறைகளைப்பார்க்கிலும் அதிக முக்கியமாகக் கவனிக்கவேண்டும்; ஏனென்றால், (ஒரு பசுவினு லுண்டாகும் சந்ததிகளைப்பார்க்கிலும்) ஒரு காளையினால் உண்டாகக்கூடிய சந்ததிகள் அதிகமாக இருக்கின்றன. காளைகளிடத்திலிருந்து பரவக்கூடிய சில வியாதிகளிருக்கின்றன. வெள்ளையென்றும், வெட்டைநோயென்றுஞ் சொல்லப்படுகிற கோச அழற்சியானது அதையொத்த வியாதியை ஆணின் வியாதிப்பட்ட பாகம்படும் பெண்ணின் சனன உறுப்புகளில் உண்டாக்கும். பிராணிகளில் சில ஆண்கள் தங்கள் சனன உறுப்புகளில் ஒருவகைத் தொற்று வியாதியிருப்பதினால் வருந்துகின்றன. இந்த வியாதியை அவைகள் பெண்களுக்குக் கொடுக்கக்கூடும்; ஆனால் இந்த வியாதி மனுஷரில் காணப்படுகிற லிங்கப்புற்று (Syphilis) அல்ல கருப்பமுண்டாக்குவதற்காக இரவல் கொடுக்கப்பட்ட காளை தான் கொஞ்சநேரம் இணங்கியிருக்கும் பசுக்களிலிருந்து அவைகளுக்குள்ள, நாம் முன்னமே சொல்லியிருப்பதான, சில தொற்று வியாதியைப் பெற்றுக்கொண்டு வரலாம். கன்று வயிற்றிலிருக்கும்போதும், பிறந்த பின்னும் அதைப் போஷிப்பதற்குத் தாய் தக்க பருவமடைந்ததாகவும், போதுமான சக்தியுள்ளதாகவும்

இருக்கவேண்டும். அதற்குக்கருவாகிப்பெற்றுவளர்க்கும் உறுப்பு பெரிதாகவும், நன்றாக உருவாக்கபட்டதாகவும், ஆணோடு சேரும் பிரியம் தக்க காலத்தில் ஒழுங்காகவும் சகமாகவும் வரப்பட்டதாகவும் இருக்கவேண்டும். அது சாதாரணமாக ஆகாரஞ் சாப்பிடுவதாகவும், நன்றாய் வேலை செய்யக்கூடியதாகவும், நல்ல குணமுடையதாகவும் இருக்கவேண்டும். இப்படியெல்லாமிருந்தால் அது நல்ல கன்றுகளை ஈனத்தக்க தாயாகவிருக்கும். அது சரியாக (க் காளையினால்) ச் சேரப்பட்ட பின்பு நன்றாகப் போஷிக்கப்பட்டுக் கவலையெடுக்கப்படவேண்டும். முக்கியமாய்க் கன்றுபோடுங்காலஞ் சமீபிக்கும்போது அதைத் தொந்தரவு செய்யும் பிராணிகளைவிட்டு விலக்கிப் புறம்பாக வைக்கவேண்டும். அதை, ஈன்றுகொண்டிருக்கும் மற்றப் பசுக்களின் எதிரில் கொண்டுவரவாவது, அதிகமாக ஓட்டி வேலை செய்விக்கவாவது, அளவுக்குமிஞ்சிப் போஷிக்கவாவது கூடாது; அப்படிச் செய்தால் அது * கரைகன்று போடும்படி நேரிடலாம். சில வருஷங்களில் பஞ்சத்தினாலாவது, † தாவரக் கொள்ளைநோய் (Blight) உண்டாவதினாலாவது, (மாடுகளுக்கு உணவான) பூண்டுகளை மடித்துப்போம்படி செய்யும் வேறுநோய் உண்டாவதினாலாவது, கரைகன்று போடுதல் (அநேக மாடுகளுக்கு) நேரிட்டுக் கால்நடையுடையவர்களுக்கு மிகுந்த பெரு நஷ்டம் நேரிடுகிறது. வியாதியை யோட்டிவிடுமென்றெண்ணியோ, அல்லது வேறு கருத்துக்கொண்டோ மரங்களில் தூக்கப்பட்டிருக்கிற இளங்கொடியை மற்றொரு கருப்பமான பசு மோப்பதினாலும் கரைகன்று போடுதல்நேரிடலாம்.

* கரைகன்று போடுதல் "வீசிப்போடுதல்" என்றும் சொல்லப் படுகிறது.

† புல் பூண்டு முதலிய தாவரங்களுக்கு நேரிடும் கொள்ளை நோய்.

கன்றுபோடுங்காலத்தில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய இரண்டு விஷயங்கள் உண்டு

முதலாவது :—கூடிய சகலவகையினாலும் தாயின் பலம் தளராதபடி காப்பாற்றவேண்டும். இரண்டாவது:—சுபாவமாக (கன்றை வெளியே தள்ளும்படி) உண்டாகும் முயற்சியில் நாம் ஊடாடி எதுவாயினுஞ் செய்யவாவது, பிராணிக்குத் தெளிவாக உபயோகமானதைத் தவிர வேறே யாதொன்றுஞ் செய்யவாவது கூடாது. கன்று சரியான காலத்தில் பிறவாதிருந்தால் அது எப்படியிருக்கவேண்டுமோ அப்படியிருக்கிறதாவென்று தெரிவதற்காக மெதுவாகச் சோதனை செய்யவேண்டும். கன்றின் தலையும், முன்கால் இரண்டும் வெளியே நீட்டப்பட்டும், தாயின் முயற்சியினால் கொஞ்சங்கொஞ்சமாக வெளியே தள்ளப்பட்டுக் கொண்டும் இருந்தால் அது சரியான நிலைமை. அநேக சமயங்களில் பிரசவம் கொஞ்சம் தாமதமாக நிறைவேறும். அக்காலங்களில் தாயின் பலம் தளர்ந்து போகாதபடி ஆதரிப்பதற்குச் சாராயம் ஒரு ஆழாக்கு கொடுக்கவேண்டியிருக்கும். கன்று சரியான தானத்தில் இல்லாதிருந்தால் அதைச் சீராகவைப்பது முற்றிலுஞ் சரியானதுதான். ஆனால், கன்றை வெளிப்படுத்துவதற்காக அதைப் பலாத்காரமாக இழுத்துஞ் செய்கையெல்லாங் கூடாது. அப்படிச்செய்தால் கருப்பை முழுமையும் வெளியே விழுந்து பெருங்கெடுதி சம்பவிக்கலாம். இந்தக்கெடுதி சம்பவித்தால் வெளியே வந்த பாகத்தை நன்றாகவும், கூடியவரை சீக்கிரமாகவும் திரும்ப உள்ளே செலுத்திவைத்துப் பிராணியை நன்றாகப் போஷித்து ஆதரித்து வரவேண்டும். தாய் பலவீனமாகவிருப்பதினாலாவது, கன்றை வெளியாக்கும்படி குரூரமான முரட்டு முயற்சிகள் செய்வதினாலாவது இந்த இடையூறு நேரிடுகிறது. கன்று கருப்பையில் இருக்கும்போது சில சவ்வுகளால் சூழப்பட்டிருக்கிறது. இச்சவ்வுகளில் ஒன்று கன்று பிறக்கும்போதே கூட

வெளிவந்துவிடுகின்றது; ஆனால் மற்றவைகள் கொஞ்சஞ் சென்றுதான் வெளிவெறும்.

வளர்ப்பு :—இளம்பிராணிகளுக்குச் சரியான ஆகாரங்கொடாமல் அவைகளைத் தாங்களே தங்கள் ஆகாரந் தேடிக்கொள்ளும்படி விட்டுவிடுவது மிகச் சாதாரணமான தப்பிதமாகவிருக்கிறது; இதனால் அவைகளின் வளர்ச்சி தடைபட்டு அவைகள் வியாதிக்கு லக்காகின்றன. தாய்கள் மேய்வதற்குப் போதுமான புல் இருப்பதாகவும், இளம்பிராணிகள் மேய்வதற்குக் காலம் வந்தவுடனே அவைகளுக்கு உபயோகமாகத்தக்க மிருதுவும் போஷணையுமான புல் இருப்பதாகவும் உள்ள சரியான பருவகாலத்தில் கன்றுகள், குதிரைக்குட்டிகள் முதலியவை பிறக்கத்தக்கதாக (ஆண்களும் பெண்களுஞ் சேருங்காலத்தையொழுங்குபடுத்தி மற்றத்தேசங்களில் கவலையெடுப்பதுபோல) இத்தேசத்திலும் கவலையெடுக்கவேண்டும். கூடுமான காலத்திலெல்லாம் கன்றுகள் தாய்ப்பாலையே குடிக்கும்படி செய்யவேண்டும். அவைகளின் எலும்பும் சதையும் பூரணமான வளர்ச்சியடையும்பொருட்டு, அவைகள் சாதாரணமாக ஓடித்திரியும்படி இடம் கொடுக்கவேண்டும். இத்தேசத்திற் பிராணிகளை வளர்ப்பவர்கள் அநேக் தீங்கான ஏற்பாடுகளை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்வேற்பாடுகளில் இளம்பிராணிகளைத் தளைந்துவிடுவது (அதாவது கட்டிவிடுவது) ஒன்று. தளைந்துவிடும் ஏற்பாடானது கால் ஒழுங்கீனமாயுருவாக்கப்படவும், பிராணிகள் மெலிவடையவும், அவைகள் அநேகவிஷயங்களுக்குப் பூரணமாக உபயோகமற்றவைகளாகவும், அவைகளில் அநேகம் சவாரி செய்வதற்குத் தகுதியற்றவைகளாகவும் செய்கிறது. பிராணிகள் தப்பிப்போகாதபடி வேறு சில் ஏற்பாடு செய்யப்படவேண்டும். ஆண்கள் தீங்கு செய்யாதிருப்பதற்கு விதையெடுப்பது சாதாரணமாகப் போதுமானதாகவிருக்கும்.

## எ—வது அதிகாரம்.

## இந்தியாவிலுள்ள பிராணிகள் குரூரமாக நடத்தப்படுவதைப் பற்றியது.

ஐரோப்பியர்கள் பிராணிகளுக்குக் குரூரமாக ஒருக்காலும் இருப்பதில்லையென்று நான் எண்ணுவதாக உங்களுக்குச் சொல்லவேண்டுமென்றாவது, அல்லது அவ்விதம் உங்களை நினைக்கும்படி செய்யவேண்டுமென்றாவது என்கருத்து இல்லவேயில்லை. இங்கிலாந்திலும் மனிதர்கள் (பிராணிகள் விஷயத்தில்) மிருகத் தன்மையாயிருப்பதற்காக, அவர்களை அடிக்கடி தண்டிக்க வேண்டியிருக்கிறது; ஆனால் இந்தியாவிற்கேயுரிய சில சாதாரணமான வழக்கங்களிருக்கின்றன; அவைகளைப் பற்றி நீங்கள் கவனஞ்செலுத்தவேண்டுமென்று நான் விரும்புகிறேன். இப்படி விரும்புவதற்குக் காரணம் என்னவெனில், உதவியற்ற பிராணிகள் வருத்தப்படுவதை நீக்கி அவைகளைக் காப்பாற்றவேண்டுமென்றெண்ணுகிறேன்; அன்றியும், பிராணிகளைக் குரூரமாக நடத்துபவர்கள் சட்டப்படி தண்டனைக்குரியவர்களாகிறார்களாகையால், கால்நடை குதிரை முதலியவைகளை வைத்திருப்பவர்கள் குரூரமாக நடத்துவது இன்னதென்று தெரியாதென்று அறியாமையையே தண்டனையைவிட்டுத் தப்புவதற்கு முகாந்தரமாகக் கொண்டு வரக்கூடாதென்பது என்னுடைய கோரிக்கை. அநேக காரணங்களினால் பிராணிகள் குரூரமாக நடத்தப்படுகின்றன.

1.—அறியாமை (Ignorance). பிராணிகள் குரூரமாக நடத்தப்படும் அளவைக் கவனிக்கும்போது, மனிதனைப்போலவே பிராணிகளும் வருத்தத்தையுணரக் கூடுமென்று தெரியாதவர்களும் ஒருவேளையிருக்கலாமென்று தோன்றுகிறது. காயங்களும் வியாதிகளும் நமக்கு எவ்வளவு உபத்திரவங்களாகவிருக்கின்றனவோ, அவ்வளவாகப் பிராணிகளுக்குமிருக்கின்றன. அவைகளுக்கும், நமக்கிருப்பதுபோலவே, உணர்ச்சியுண்டு. நமக்கு வெறுப்பானவைகளை அவைகளுக்குச் செய்தால், அப்படிச்செய்வது குரூரமாகவிருக்கும்.

2.—எண்ணமில்லாமை (Want of Thought). சிலர் மிகக் கவலையற்றவர்களாகவிருக்கிறார்கள்; அவர்கள் பிராணிகள் வருத்தமடைவதைப்பற்றி நினைக்கிறதேயில்லை. தங்களைப்பற்றித் தாங்களே கவலையெடுத்துக்கொள்ளக்கூடாத தீங்கற்ற ஏழைப்பிராணிகளுக்குத் துன்பஞ்செய்ய அவர்களுக்கு மனமில்லாமலிருக்கலாம்; ஆனாலும் அவர்கள் ஒரு கனத்த அபராதத்தினால் அதிகக் கவனமுள்ளவர்கள் ஆகும்வரை தங்களுடைய பிராணிகள் எவ்விதமாக உணருகின்றனவென்பதை மனதில் அழுந்த நினைக்க முற்றிலும் தவறிவிடுகிறார்கள்.

3.—மிருகத்தன்மை (Brutality) அடிக்கடி ஹிந்துக்களிடத்தில் காணப்படுகிறதில்லை. அவர்கள் இயற்கையாகச் சாந்தமும் பட்சமும் உடையவர்கள். அவர்கள் இப்படியிருப்பதினால் அவர்கள் தங்களைத் தண்டிக்கமாட்டார்களென்று அவர்களிடத்தில் வேலைசெய்யும் கீழ்ச்சாதிச் சுதேசிகள் எண்ணிப் பிராணிகளைக் குரூரமாக நடத்துவதற்கு மிகச்சாதாரணமான ஏது உண்டாகிறது. அநேகமாக எப்போதுங் காணப்படுகிற சில்வகைக் குரூரங்களைப்பற்றி நாம் இப்போது சொல்லுவோம். எருதுகள் இங்கிலாந்திலும் இங்கு மிகவும் அதிகமாக உபயோ

கப்படுகிறபடியால், அவைகள் இங்கு மிகவும் அடிக்கடி குரூரமாக நடத்தப்படுவதற்குள்ளாகின்றன. அவைகள் நெடுங்காலந் துன்பப்பட்டுக் கடினமான வேலைசெய்கிற பிராணிகளாதலால், அவைகள் நம்முடைய இரக்கத்துக்குப் பாத்திரமாகவேண்டும். ஹிந்துக்கள் மத சம்பந்தமான பக்தியினால் எருதைக்கொல்லாமல் இருப்பதுபோல, அதைத் துன்பத்துக்குள்ளாக்காமலும் இருக்கவேண்டும். அதற்குச்செய்யும் குரூரங்கள் சாதாரணமாக அறியாமையினாலும் கவலையீனத்தினாலுமே செய்யப்படுகின்றன.

தோலின்மேற்சூடுபோடுதல் (Firing the Skin). காய்ச்சிய இரும்பினால் சூடுபோடுவது மிகவும் வருத்தங் கொடுக்கக்கூடியது; சில வியாதியிற் செய்யவேண்டிய பிரயோகத்துக்காகவும், சக்கிலியர் (தோல்[illegible]) பிராணிகளுக்கு நஞ்சிடாமற்றடுக்கும்படி தோலை அந்தக்கேடாக்குவதற்காகவும், அலங்காரங்கொடுக்கும்படி யெண்ணி அப்படிச்செய்வதற்காகவும், மதசம்பந்தமான அல்லது சாதாரணமான அடையாளங்கள் போடுவதற்காகவும் சூடுபோடுகிற வழக்கம் மிகவும் அதிகமாக உபயோகத்திலிருக்கிறது. அது வியாதிக்குப் பிரயோகமாக அபூர்வமாகத்தான் வேண்டியிருக்கிறது; அதைக் கூடியவரை விலக்கவேண்டும்.

குளம்பழுகல் (Foul). குளம்பின் பிளவுகளுக்கு மத்தியில் பிளவைகளும் மற்ற வருத்தஞ்செய்யும் புண்களும் வேலைசெய்யும் மாடுகளில் காணப்படுகின்றன. இந்தக் காரணத்தினால் துன்பப்படுகிற பிராணிகளை நெடுந்தூரம் நடக்கச்செய்வது மிகக் குரூரமானதாகையால், அப்படிச் செய்வதைக் கூடியமட்டெல்லாம் தடுக்கவேண்டும்.

கழுத்துப்புண்கள் (Yoke Galls) நுகத்தடியினால் உண்டாகிற வீக்கங்கள் அல்லது பிளவைகள். அநேக

சமயங்களில் அவைகள் மிகப்பெரியவைகளாகவும், பார்க்கப்பயங்கரமானவைகளாகவுமிருக்கின்றன. இந்தப் புண்ணினால் வருத்தப்படும் பிராணிகள் கொஞ்சம் வருத்தந்தணிவதற்காகப் பலவகைகளிலும் கழுத்தை வளைத்துப் பிரயாசப்படுகின்றன. இந்தப்புண்களை வராமற்றடுக்கவும், வந்தால் மிகுந்த சொற்பத் தொந்தரவினாலும் செலவினாலும் சௌக்கியஞ்செய்யவும் கூடும்.

மெலிவு (Weakness). மிகவுங் குறைவாகப்போஷிக்கப்பட்டு, வியாதியடைந்து, அநேகமாக நடப்பதற்குக் கூடச் சக்தியில்லாமலிருக்கிற பிராணிகள் கனமான பாரங்களை இழுத்துக்கொண்டாவது, சுமந்துகொண்டாவது போகும்படி கட்டாயப்படுத்தப்படுகின்றன; அவைகள் எப்படியோ கஷ்டப்பட்டுத் தங்கள் வேலையைச்செய்து முடிக்கிறபடியால், அவைகள் கேவலமாக நடத்தப்படவில்லையென்று சிலர் தப்பாக எண்ணுகிறார்கள். நிர்ப்பாக்கியமான, பசியினால் வருந்துகிற ஒரு சிறு ஜட்காமட்டம் பலர்கள் நிறைந்த பாரமான வண்டியைக் கஷ்டப்பட்டு இழுத்துக்கொண்டு போவதை நாம் மிகவும் அடிக்கடி பார்க்கிறோமல்லவா? தன்னையே இழுத்துக்கொண்டுபோகச் சக்தியில்லாத பிராணியினால் இழுக்கப்படும் வண்டியில் சவாரிசெய்யும் யாரும் அபராதங்கொடுக்கும்படி செய்யவேண்டும்; இப்படியே மிகுந்த பாரமான சுமையேற்றிய வண்டிக்குடையவர்களும், அப்படிப்பட்ட வண்டியை ஓட்டுபவர்களும் அபராதம் போடப்படவேண்டும்.

காயங்கள் (Wounds). காயம், சேணத்தினால் அழுத்தப்பட்டாவது, ஈக்கள் நுழைந்து கிருமி பற்றும்படி அசட்டை செய்யப்பட்டாவது இருந்தாலொழிய ஒரு பிராணியை வேலைசெய்யாமற்றடுப்பதற்குப் போதுமான முகாந்தரமாகாது. சில வியாதிகளிலும் காயங்களிலும்

பிராணியை வேலைசெய்யும்படி செய்வது நன்மையாக விருக்கிறது; ஆயினும், உடையவர்கள் காயப்பட்ட, அல்லது வியாதிப்பட்ட பிராணியை வேலையில் உபயோகிப்பதில் கவலையெடுக்கவேண்டும்.

கழலைகள் (Tumours) முற்றிலும் வருத்தமில்லாதவைகளாகவாவது, மிகவும் வருத்தமுடையவைகளாகவாவது இருக்கலாம். அவைகள் எப்படிப்பட்டவைகளென்று உடையவர்கள் நிதானித்துப் பிராணிகளை உபயோகிக்கவேண்டும்.

அங்கபங்கங்கள் அல்லது அந்தக்கேடுகள் (Deformities.) சாதாரணமாக வருத்தஞ்செய்யாதவைகளாகவிருக்கின்றன; ஆனால் அவைகள் பலவீனத்தினால் உண்டாகியிருக்கலாம்; அல்லது பலவீனத்திற்கோர் அடையாளமாகவிருக்கலாம். நியாயாதிபதிகள் (மாஜிஸ்திரேட்டுகள்) அந்தக்கேடுகள் புண்களா, அல்லவாவென்று தங்களாற் கூடியவரை நிதானித்துத் தீர்மானிக்கவேண்டும்.

வாலைமுறுக்குதல் (Tail twisting) மிகக்குரூரமானது. ஏறக்குறைய நாம் பார்க்கும் எல்லா மாடுகளின் வாலும் முடிச்சுமுடிச்சாகவிருப்பது இந்த வழக்கம் மிகவும் அதிகமாகவிருக்கிறதென்று காட்டுகிறது. இந்த முடிச்சுகள் ஊறுபாட்டினால் உண்டாகின்றன.

வேறு சில குரூரச்செய்கைகளிருக்கின்றன; ஆனால் நான் இப்போது சொல்லியவைகள் குரூரம் என்பது இன்னதென்று நீங்கள் தெரிவதற்குப் போதுமானவைகள். உங்களுக்கு வருத்தங்கொடுக்கும் எதுவும் உங்கள் பிராணிகளுக்கும் வருத்தங்கொடுக்குமென்றும், அனாவசியமாக வருத்தங்கொடுப்பதே குரூரமென்றும் நீங்கள் ஒரு விதியாக மனதில் வைத்துக்கொள்ளலாம். பிராணிகளினுடைய நன்மைக்

காகவாவது, அவைகளையுடையவர்களின் நன்மைக்காக வாவது செய்யப்படும் சில செய்கைகள் வருத்தங்கொடுப் பவைகளாகவிருந்தாலும் குரூரமானவைகள் அல்ல. சில வியாதிகளைச் சௌக்கியப்படுத்துவதற்காகக் கொப் புளமுண்டாக்குதல் அல்லது காயங்கட்டுதல் குரூரமான தல்ல. குதிமுள் (Spur) ளையும், சவுக்கையும் அளவாக உபயோகப்படுத்துதல் குரூரமானதல்ல. ஆகாரத்துக் காகப் பிராணிகளைக் கொல்லுதல் சரியானபடி செய்யப் பட்டால், மிகவும் சொற்ப வருத்தந்தான் உண் டாகும். நம்மால் கூடியவரை வருத்தத்தைக் குறைக்க வேண்டியது நம்முடைய கடமை. கொஞ்சவருத்த மும் கொடுக்காததாகவும், அதேகாலத்தில் மாமி சத்தைக் கெடுக்காததாகவும் உள்ளதான கொல்லும் வகையாதொன்றும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. நம்மாற் கூடியவரை மனிதருக்காவது மற்றப் பிராணி களுக்காவது நாம் வருத்தங்கொடாமல் இருக்கும்படி செய்கிற இரக்கமல்லாமல், நாம் குரூரமாக இருக்கக் கூடாதென்பதற்கு வேறு அநேக முகாந்தரங்களிருக் கின்றன. என்னவெனில், பிராணிகளைக் குரூரமாக நடத்துவதினால் உபயோகமில்லை; அதனால் நாம் யாதொரு பிரயோசனமுமடைகிறதில்லை; மேலும் பிராணிகள் குரூரமாக நடத்தப்படுவதினால் மெலிவடை ந்து பலங்குறைந்து அவைகளின் வேலை முதலியவை குறைவாகின்றன; ஆகையால், குரூரமாக இருப்பது நம் முடைய நன்மைக்கே முற்றிலும் விரோதமாகவிருக்கிறது. அவை கள் ஆகாரத்துக்கு உபயோகப்படும்படி கொழுப் படைவதற்கும், நல்ல பால் கொடுப்பதற்கும் தடையுண் டாகிறது. நம்முடைய வேலை நன்றாகச்செய்யப்படுவதி னால் நமக்குண்டாகக்கூடிய சந்தோஷமானது, அந்த வேலை குரூரத்தினால் நிறைவேறியதென்பதை நினைக்கும் போது, குறைவாகிறது. மேலும், குரூரமாகவிருப்பது

சகல மதங்களுக்கும் விரோதமானது. அனுவசியக மான வருத்தமுண்டுபண்ணக்கூடாதென்று கிறிஸ்துவர் களும், ஹிந்துக்களும், மகமதியர்களும், ஜயினர்களும், மற்ற மதஸ்தர்களும் அவரவர்களுக்குரிய சமயாசிரியர் களாலும் பரிசுத்த நூல்களினலும் போதிக்கப்பட் டிருக்கிருர்கள் ; ஆனல் (சேவற்போர், ஆட்டுக்கடாப் போர் முதலிய) போர்களில் வீராவேசமடையும் பிராணி களுக்கு உண்டாகும் சொற்பத்துன்பத்தைப் பார்க் கிலும், அந்தப்போர்களைப் பார்க்கும் அநேக ஆயிரம் சனங்களுக்கு உண்டாகுஞ் சந்தோஷம் அதிகமானதா, இல்லையாவென்பது (எல்லாரும் ஒற்றுமையுடன்) தீர் மானிக்கக்கூடாத விஷயமாகவே எப்பொழுதுமிருக்கு மென்று தோன்றுகிறது. வேட்டையாடுவதில் பிராணி களுக்குச் செய்யும் துன்பம் அனுவசியகமென்றும், ஆகைக் யால் குரூரமானதென்றும் இன்னம் பூரணமாகத் தீர் மானிக்கப்படவில்லை. ரணவைத்தியர்களுக்கு வருத் தத்தை நீக்கும்உபாயந்தெரியும். இங்கிலாந்திலுள்ள வைத்தியர்களும், ரணவைத்தியர்களும் தங்கள் சாமர்த்தி யத்தினல் *குளோரோபாரத்தையும், அதுபோன்ற மற்ற வருத்தம் நீக்கும் மருந்துகளையும் ரணவைத்தியஞ்செய் வதில் பிரயோகித்து அதனல் (மற்றப்படி நேரிடும்) வருத் தம்உண்டாகாதபடி செய்துவிடுகிருர்கள் ; இந்தக்குளோ ரோபாரமென்னும் சிலாக்கியமான மருந்து இப்போது பிராணிகளுக்கு ரணவைத்தியஞ்செய்வதில் அடிக்கடி யுபயோகப்படுகிறது ; ஆனல், இதைக் கவலையுடன் தகுந்த ரணவைத்தியராகவிருப்பவர்கள்மாத்திரம் உபயோகிக்க லாம்.

---

* குளோரோபாரம் (Chloroform).—சிறிதுநேரம் உணர்ச்சியை நீக்கி, கத்தியினல் அறுத்தல் முதலியவைகளைப் பிராணியுணராதிருக் கும்படி செய்யும் மருந்து.

## அ—வது அதிகாரம்.

### மனிதருக்கு ஆகாரமாக உபயோகமாகும் மாமிசத்தையும் பாலையும்பற்றியது.

மகமதியர்களும் ஹிந்துக்களும் இன்ன பிராணிகளின் மாமிசம் புசிக்கலாம், இன்ன பிராணிகளின் மாமிசம் புசிக்கக்கூடாதென்று கட்டுப்பட்டிருப்பதுபோலில்லாமல், கிறிஸ்துவர்கள் எல்லாப் பிராணிகளின் மாமிசமும் புசிக்கும்படி அவர்கள் மதம் அனுமதி கொடுப்பது, மேற்சொல்லிய இரண்டு மதஸ்தர்களுக்கும், ஆச்சரியமாகத்தோற்றலாம். (ஹிந்துக்கள் மாட்டிறைச்சி தின்பதில்லையாயினும்) இந்தியாவில் ஆட்டிறைச்சியோடு மாட்டிறைச்சியும் ஏராளமாகச் செலவழிகிற விஷயம் இப்போது எல்லாராலும் உண்மையென்று ஒப்புக்கொள்ளப்படவேண்டும். ஆகையால், அந்த மாமிசங்களை (ப் பெறும்படி பிராணிகளைக்) கொல்லுபவர்களுக்கும் புசிப்பவர்களுக்கும் அபாயமுண்டாகாமல், அவைகளை எவ்விதமாக மிகவும் நல்ல ஸ்திதியில் பெறலாமென்றும், பெற்றபின் எவ்விதமாகப் பக்குவஞ்செய்யலாமென்றும் நாம் சீக்கிரம் தெரியவேண்டும். ஆடுமாடடிக்குமிடங்களிலெல்லாம் சகல சாமான்களும் துப்புரவாக இருப்பதும், சுற்றுப்புறமெல்லாம் சுத்தமாக இருப்பதும் ஆவசியகம்; தாரெண்ணெய், கார்பாலிக்கமிலம் முதலியவைகளால் எங்கும் சுத்திகரிக்கவேண்டும்; (சாணி, இரத்தமுதலிய) கழிவுகளையெல்லாம் கொஞ்சந்தூரமான இடத்துக்குக் கொண்டுபோகவேண்டும்; ஆனால் அந்தக்கழிவுகளில் உபயோகமாகக்கூடியவைகளையெல்லாம் உபயோகப்படுத்தவேண்டும். கொல்லப்பட

வேண்டிய பிராணிகள் (1) மிகவும் இள்மையாகவாவது கிழமாகவாவது இல்லாதவைகளாகவும், (2) ஒரு வியாதியும் அற்றவைகளாகவும், (3) கருப்பம் அடைந்திராதவைகளாகவும், (4) மிகவும் மெலிந்தவைகளல்லாதவைகளாகவும் இருக்கவேண்டும். அவைகள் ஆகாரத்துக்ென்றே அடிக்கப்படவேண்டும். இயற்கையாகச் செத்தவைகளாக இருக்கக்கூடாது. அவைகளைக் கொல்வதில் துன்பத்தை எவ்வளவு விலக்கக்கூடுமோ, அவ்வளவும் விலக்கவேண்டும். கொல்லும் வகையில் சிலர் கொண்டிருக்கும் தப்பெண்ணங்கள், மதசம்பந்தமானவைகளாகவிருந்து அவைகளினால் கெடுதியில்லாமலிருந்தால், அவைகளை நாம் அவமதிக்கக்கூடாது. மகமதியர்கள் கொல்லும் வகையானது யாதொரு சந்தேகமுமில்லாமல் மிகுந்த வருத்தமானது; ஆனால் அதற்குச்சார்பாக (மத சம்பந்தமான) தப்பெண்ணங்கள் சாஸ்தியாக இருப்பதால், அதற்குப்பதிலாகக் கூர்மையான கோடரியினால் பிடரியில் வெட்டிக் கொல்லுகின்ற, மிகச் சொற்ப வருத்தங்கொடுக்கிறதான, வகை ஏற்படுவதற்குக் கொஞ்சக்காலம் பிடிக்குமென்றாலும் மிகவும் பயப்படவேண்டியதாகவிருக்கிறது. கிழமான, அல்லது மெலிவான பிராணிகளின் மாமிசம் மிகவும் போஷணையற்றதாகவிருக்கிறது. இவ்விதமான மாமிசம் சாப்பிடுவதற்குத் தகுதியில்லாதது; ஆகையால் இந்த நிலைமையில் ஆட்டையாவது, மாட்டையாவது கொல்வது குரூரமானது. கருப்பமாக இருக்கிற பிராணியைக்கொல்வது (கருப்பையிலிருக்குந் குட்டியையுஞ் சேதப்படுத்துகிறபடியால்,) மனதறிந்து செய்கின்ற கவலையற்ற வினை உயிர்ச்சேதம்; இது தப்பிதம் என்று நாம் எவ்வளவு பலமாகச்சொன்னாலும் அவ்வளவும் போதாது; கருப்பமான பிராணியின் மாமிசம் நல்ல ஆகாரமா, இல்லையாவென்பது சந்தேகமான விஷயமாகவிருக்கிறது.

ஐரோப்பியர்கள் முதிராத இளமையான ஆடுமாடு களின் மாமிசத்தைத் தின்பதில் மிகப்பிரியமுடையவர்க ளாக இருக்கிறார்கள். பருவமடையாத இளம்பிராணி களின் மாமிசம் போஷணையற்றது; இளமாமிசத்தைத் தின்னும் வழக்கம் (அந்த மாமிசத்தைக் கொடுக்கும் பிராணிகள் பூரணமாக வளர்ந்தபின் மிக அதிக மாமிசம் கொடுக்கும் ஆகையால்) எண்ணமற்ற வீண்செலவுக் கிடமாகவிருக்கிறது.

வியாதியைப்பற்றிப் பின் வருபவைகளைக் கவனிக்க வேண்டும் :—

(1) கொடிய அழற்சி (Inflammation) யினால் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும் எந்தப் பிரா ணியின் மாமிசமும் மனிதனுக்கு வியாதியை யுண்டுபண்ணுமென்பதற்கு யாதொரு அத் தாட்சியுமில்லாதிருந்தாலும், அந்த மாமிசம் ஆகாரத்துக்குத் தகுதியானதல்ல.

(2) இப்போது அமர்ந்திருப்பதாகவும், பழமை யானதாகவும் உள்ள வியாதியையுடைய பிரா ணிகளின் தேகம் ஆகாரத்துக்கு உதவாத தல்ல; ஆனால் சுகமான தோற்றமில்லாமல் மாறுபட்டிருக்கிறபாகங்களையெல்லாம் (தீயினா லாவது, வேறு வகையினாலாவது) நாசம் செய்துவிடவேண்டும்.

(3) ஒரு பிராணி வியாதியினால் மிகவும் மெலிந் திருக்கும்போது அதன் மாமிசம் கொஞ்சங் குறைய வெண்மையாகவும், சாதாரணமாக அந்தப்பிராணியின் தேகம் மஞ்சள் நிறமான அல்லது பச்சை கலந்த மஞ்சள் வருணமுள்ள நீர் கோத்ததாகவும் இருக்கும். இவ்விதமான

பிராணியின் மாமிசத்தைப் புசிப்பதினால் கொடிய வயிற்றுக்கழிச்சலும், சன்னிச்சுர (Typhoid Fever) த்தின் குணங்கள்போன்ற குணங்களும் உண்டாகலாம்.

(4) நஞ்சிடப்பட்ட, அல்லது நஞ்சிடப்பட்டதாகச் சந்தேகிக்கப்பட்ட பிராணிகளின் மாமிசத்தை ஆகாரமாக உபயோகப்படுத்தக் கூடாது.

(5) அழுகி நாறுகிற, அல்லது இரத்தக்கரை யுள்ள மாமிசத்தைத் தின்னக்கூடாது. மின்னலினால் இறந்த பிராணிகளின் தேகம் மிகவுஞ் சீக்கிரமாக அழுகி நாறிவிடும்; ஆகையால் அதையும் புசிக்கக்கூடாது.

(6) மாமிசம் செழிப்பாகவும், மலிவாகவும் கிடைக்கிற இந்தத்தேசத்தில், (ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப்) பற்றும் வியாதி (Communicable Disease) யினால் வருந்தும் எந்தப்பிராணியின் மாமிசத்தையும் ஆகாரமாக உபயோகியாமல் (தீயினாலாவது வேறு தக்க எந்த வகையினாலாவது) நாசஞ் செய்துவிடவேண்டியது.

(7) மாமிசஞ்சாப்பிடுவதால் வரும் முக்கியமான அபாயங்களில்வந்தைகளினால்வருவதொன்று. மனிதர் தேகத்திற் பிரவேசிக்கும் வந்தைகளில் பின் வருபவைகள் முக்கியமானவைகள் :—

I.—நாடாப்பூச்சி (நாடாப்போலத் தட்டையாய் நீண்டிருக்கிற பூச்சி Tape-worm), அதின் கரு

வடங்கிய சலப்பையுள்ள மாட்டிறைச்சி, அல்லது பன்றியிறைச்சியைத் தின்பதினால், வந்துசேரும்.

II.—திரிகினப்புழுக்கள். இவைகளால் எப்போதும் மிகுந்த வருத்தத்தையுண்டுபண்ணுவதாகவும், அநேக சமயங்களில் மரணத்தையுண்டுபண்ணுவதாகவுமுள்ள திரிகினநோய் (Trichinosis) உண்டாகிறது. இந்தப் புழுக்கள் பன்றியிறைச்சியிலிருந்து, அதைத் தின்பதினால், தேகத்துட் பிரவேசிக்கின்றன.

III.—மேற்சொல்லியவைகளிலுங்குறைந்த விசேஷமும் கொடூரமும் உடைய மற்ற வந்தைகள்.

இந்த விஷயத்தைக் கவனிக்குமிடத்தில், இந்தியாவில் ஆட்டு மாமிசமானது மற்றெல்லா மாமிசங்களைப் பார்க்கிலும் சாப்பிடுவதற்கு அபாயமில்லாததாகவிருக்கிறது. நாடாப்பூச்சிகளின் கருவடங்கிய சலப்பைகள் ஆட்டினுடைய பித்தாசயமாகிய ஈரலில் ஒட்டிக்கொண்டிருப்பது அரிதானதல்ல; ஆயினும் இந்தச் சலப்பைகளைக் கண்டுபிடிப்பது லேசானது; மேலும், நன்றாகச் சமைப்பதினால் இவைகளைக் கொன்றுவிடக்கூடும்.

அடைப்பான், சயதகநோய், குதிரைச்சயம் இவைகளினால் இறக்கும் பிராணிகள் ஆகாரமாக உபயோகப்பட்டால், இவ்வியாதிகள் அநேகமாய் மனிதனைப்பற்றிக்கொள்ளும். இதை ஞாபகத்தில் வைப்பது மிகவும் முக்கியமானது; ஏனெனில், இத்தேசத்தில் அநேக பாகங்களில் கீழ்ச்சாதி மனிதர்கள், அல்லது காட்டில் வாழும் மனிதர்கள் எந்தப்பிணத்தையாவது மிகுந்த ஆவலுடன் எடுத்துக்கொள்வதும், மிகுந்த அசுத்தமான

மாமிசத்தையும் யாதொரு தடையுமில்லாமல் புசிப்பதும் சாதாரணமாகவிருக்கின்றன. இந்த வகையில் அவர்களுக்கு வியாதி சம்பவிப்பது மிகவும் கூடியதாகவிருக்கிறது.

* கசாப்புக்கிடங்குகளின் பராமரிப்பு (அல்லது மேற்பார்வை):—மனிதருடைய ஆகாரத்துக்காகப் பிராணிகள் மிருதியாகக் கொல்லப்படும் ஒவ்வொரு இடமும் கவர்ன்மெண்டாராலாவது, அல்லது (முனிசிபாலிட்டியார் போன்ற) வேறு அதிகாரிகளாலாவது அநுமதி (லைஸென்ஸ், License) பெறப்பட்டும், மாமிசத்தின் குணங்களையும் பிராணிகளைக் கொல்வதற்குத்தக்க வகையையும் தெரிந்தவராயுள்ள ஒரு உத்தியோகஸ்தரால் மேற்பார்க்கப்பெற்றும் இருக்கவேண்டும். கசாப்புக்கிடங்கில் குறைந்தபட்சம்மூன்று பகுதியான இடங்கள் இருக்கவேண்டும் :—

க. கொல்லப்படும்படி கொண்டுவரப்படும் பிராணிகளை நிறுத்திவைப்பதற்கேற்ற முற்றம் (அதாவது படத்திற்காட்டிய க-லக்கமிட்ட ஆடுமாடுகளை நிறுத்தும் அறைகளோடு இருக்கிற முற்றம்). இது நன்றாகத் தளம்போடப்பெற்று உயர்ந்த சுவர்களையும் வாசல்களையும் உடையதாகவும், தருதி தகுதியாகவரும் பிராணிகளை வந்தவுடனே வெவ்வேறாக நிறுத்திவைப்பதற்கேற்ற பல சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டதாகவும் இருக்கவேண்டும். பிராணிகள் இந்தப்பகுதிகளில் நிற்கும்போது சோதனை செய்யப்படவேண்டும்; அவைகளுக்கு இங்கே குறைந்தபட்சம்

* கசாப்புக்கிடங்கு (Slaughter-house).—கசாப்புக்கடைக்காரருக்காகவும், மாமிசம் மொத்தமாக வாங்கும் மற்றவர்களுக்காகவும் (ஆடுமாடு முதலிய) பிராணிகளடிபடும் பெருங்கட்டடம்,

தண்ணீராவது கொடுக்கவேண்டும். (ஒரு பிராணியி லிருந்து மற்றொரு பிராணியைப்) பற்றும் வியாதிகளி னாற் பிடிக்கப்பட்டவைகளாகவாவது, (மெலிவு, கிழத் தன்மை முதலியவைகளால் ஆகாரத்துக்குதவாத கார ணம்பற்றிக்) கொல்லத் தகுதியற்றவைகளாகவாவது இருக்கும் பிராணிகளெல்லாம் ஆகாரத்துக்குத் தகுதி யற்றவைகள். பின் சொல்லப்பட்ட (மெலிவு, கிழ வயது முதலிய தகுதிக்குறைவுடைய) பிராணிகளை உடனே வெளியே அனுப்பிவிடவேண்டும். சந்தையிற் கொடுக்கவேண்டிய ஆயம் முதலிய செலவுகளை உடைய வனைப் பொறுத்துக்கொள்ளும்படி செய்வதே அவனுக்கு அபராதமாகும். முன் சொல்லப்பட்ட பற்றும் வியாதி யுடைய பிராணிகளை உடனே சுகமான பிராணிகளை விட்டுப் பிரித்து, அவைகள் சௌக்கியமடைவது அசா த்தியமாகவிருந்தால், அவைகளைக் கொன்று அவை களின் பிரேதங்களை எரித்துவிடவேண்டும்; அல்லது அந் தப் பிராணிகள் சௌக்கியப்படும் வரையும் நேரிடுஞ் செலவை உடையவனைப் பொறுத்துக்கொள்ளும்படி செய்து அவைகளைச் சரியான எச்சரிக்கையுடன் வைத் திருக்கவேண்டும். மேற்சொல்லிய முற்றத்தைக் கவலை யோடு கார்பாலிக்கமிலம் (Carbolic Acid) முதலிய அப சஞ்சாரிகளால் விசேஷமாகச் சுத்திகரித்துவைத்திருக்க வேண்டும். உ. பிராணிகள் கொல்லப்படும் முற்றம் (அதா வது, படத்தில் உ-லக்கமிட்ட ஆடுமாடுகள் அடிபடுங் கட்டடம்). இது நன்றாகத் தளம்போடப்பெற்றதாகவும், பிராணிகளைக் கொல்வதில் விழும் இரத்தமும் மற்றச் சல பதார்த்தங்களும் சாதாரணமாகவோடித் தொட்டி களில் விழும்படியாக ஒழுங்காய்க் கட்டப்பட்டிருக்கிற சிறு வாய்க்கால்களையுடையதாகவும் இருக்கவேண்டும்.

தொட்டிகளிலிருந்து * இரத்தமுதலிய பதார்த்தங்களை எடுத்துத் தூரமான இடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும். முன் சொல்லிய க-லக்கமுடைய முற்றத்திலிருந்து உ-லக்கமுடைய, இப்போது சொல்லிய, முற்றத்திற்கு நேரே வரும்படி வாசல் இருக்கவேண்டும். மேலும், இந்த உ-லக்கமுடைய முற்றத்தின் ஒரு பக்கத்தில், ஆயத்தமான இறைச்சியைக் கொண்டுபோய் வைப்பதற்காக இருக்கிற ௩-லக்கமுள்ள குளிர்ச்சியான அறைக்குப் போகத்தக்கதாக, ஒருவாசலும், மேற்படி முற்றத்தின் மற்றொரு பக்கத்தில், சகலகழிவுகளும் (௬-லக்கமுள்ள) பிணஞ்சுடு காளவாய்க்குக் கொண்டுபோகும்படியிருக்கிற (ரு-லக்கமுள்ள) கொஞ்சநீளமான பாதைக்குப் போகத்தக்கதாக, வேறொரு வாசலும் இருக்க வேண்டும். இந்தப் பாதையுடன், தொற்றுவியாதி பற்றிக்குணமாருவது அசாத்தியமென்று நிர்மானிக்கப்பட்ட கால்நடைகளைப் பிணஞ்சுடு காளவாய்க்குக் கொண்டு போவதற்காக க-லக்கமுடைய முற்றத்திலிருந்து மேற்சொல்லிய (ரு-லக்கமுடைய) பாதைக்குப்போகும்படி வழி இருக்கவேண்டும். இந்த அதிகாரத்திற் சேர்த்திருக்கிற படத்தைப் பார்ப்பதினுல் கசாப்புக்கிடங்கு எவ்விதமாகக் கட்டவேண்டுமென்று உங்களுடைய

---

* இரத்தமுதலிய கசாப்புக்கிடங்குகளின் கழிவுகளைச் சாம்பல், கரிப்பொடி, அல்லது காய்ந்த களிமண்ணுடன் சேர்த்து, மழை, காற்று, வெய்யிலினுல் சேதப்படாத இடத்தில் கொஞ்சக்காலம் வைத்திருந்தால், நாற்றமுழுமையும் போய்விடும்; இப்படிப் பக்குவஞ் செய்யப்பட்டதை, மனிதர்சுகத்துக்கு விரோதமில்லாமல், மிகவும் நல்ல உரமாக உபயோகிக்கலாம். ஆனல், ஒரு பிராணியிலிருந்து மற்றொரு பிராணியைப்பற்றும் வியாதி (Communicable Disease) யினுற் பீடிக்கப்பட்ட பிராணியின் பிரேதத்தையும் அத்துடன் எந்த வகையிலாவது சம்பந்தப்பட்ட சகல பொருள்களையும் உரமாக உபயோகிக்கக்கூடாது.

மனோபாவனையில் கொஞ்சந்தெரியலாம். கசாப்புக்கிடங்கைச்சேர்ந்த பிணஞ்சுடுகொள்ளவாய் பொதுவாகச் சனங்களுடைய உபயோகத்துக்காகக் கட்டியவைகளாக நினைக்கப்படலாம்; வியாதிப்பட்ட பிராணிகளை நிறுத்திவைப்பதற்காக இருக்கிற முற்றங்கள் (2-வது அநுபந்தமாக இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிற) 1866-வது வருஷத்து 2-வது ஆக்டுப்படி அதிற் சொல்லப்பட்டிருக்கிற ஆஸ்பத்திரிப் பட்டிகளாக உபயோகிக்கப்படலாம். கசாப்புக்கிடங்கின் சகல கழிவுப்பதார்த்தங்களும், அங்கே ஆகாரத்துக்காகக் கொல்லப்படும் பிராணிகளின் சகல வியாதிப்பட்ட பாகங்களும், அடிபடும்படியாவது சாதாரணமாக ஆஸ்பத்திரிப் பட்டியில் அடைபடும்படியாவது கொண்டுவரப்பட்டவைகளாகவும், அசாத்தியமான தொற்று வியாதியினால் பிடிக்கப்பட்டிருக்கிறவைகளாகவுமுள்ள பிராணிகளின் பிரேதங்களும், தொற்றுச்சம்பந்தப்பட்ட படுக்கை முதலிய சாமான்களும், ஆவசியகமானால், வியாதிப்பட்ட பிராணிகளை மேற்பார்த்துக் கொண்டிருந்தவர்களின் வஸ்திரங்களும் பிணஞ்சுடுகொள்ளவாயில் எரிக்கப்படவேண்டும்.

நமக்குக்கிடைக்கும் பால்:—பால் மிகச்சாதாரணமாக ஆகாரமாய் உபயோகப்படுகிறது; ஆகையால் அதையுபயோகிப்பதில் உண்டாகுஞ் சில அபாயங்களைப் பற்றிக் கவனஞ்செலுத்துவது ஆவசியகம். ஐரோப்பா தேசத்திலுள்ள மிகவும் நல்ல பசுக்களிலிருந்து பெறும் ஆடையதிகமாகவுள்ள பாலுடன் இந்தியாவில் கிடைக்கக்கூடிய மிகச் சிலாக்கியமான பாலை ஒப்பிட்டுப்பார்த்தால், இந்தப்பால் மிகவும் கேவலமானதாகவிருக்கும்; இத்துடன் தண்ணீர் கலப்பதினால் இது அதிகக்கேவலமாகிவிடுகிறது. இந்த (த் தண்ணீர் சேர்க்கும்) வழக்கத்தினாலேயே உண்டாகும் அபாயங்கள் ஒன்றுமில்லை;

ஆனல், பாலுடன் கலப்பிக்குந் தண்ணீர் எப்போதும் சுகத்துக்கடுத்த சுத்தமுடையதாக இல்லாமலிருப்பதால், அது சிலவேளைகளில் அபாயத்துக்கிடமாகிறது. பால் விற்பவர்கள் எருமைப்பாலைப் பசுவின்பாலென்று கொடுக்கும் வழக்கமுமிருக்கிறது. இந்த வழக்கமானது, எருமைகள் அசுத்தமான (மலம் முதலிய) ஆகாரங்களைச் சாப்பிடும் சுபாவமுடையவைகளாதலாலும், ஆகாரத்தின் தன்மையின்படி (அதைச்சாப்பிடும் பிராணிகள் கொடுக்கும்) பாலின் தன்மையும் பேதப்படுகிறதாகையாலும், கெட்டதாகவிருக்கிறது. பாலுடன் கலக்குந் தண்ணீரில் அதிசாரச் சன்னிச்சுர (Typhoid Fever) வியாதியுள்ள வஸ்துக்கள் கலந்திருக்கலாம்; அப்படியிருந்தால் அந்தத் தண்ணீர் கலந்திருக்கும் பாலினல், முன் அவ்விதமான பாலைச் சாப்பிட்டதினலேயே சிலருக்கு அதிசாரச் சன்னிச்சுரம் உண்டாகியிருக்கிறதென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறபடி, அநேகமாய்ப் பலருக்கு அந்த வியாதி உண்டாகலாம்; இப்படி அதிசாரச் சன்னிச்சுர வியாதி வஸ்துள்ள தண்ணீர் தானே அது கலந்திருக்கும் பாலின் மூலமாய் அவ்வியாதியையுண்டாக்குமென்று சொல்வதற்குக் காரணமென்னவென்றல், காலநடைகளுக்குள்ள எந்த வியாதியிலிருந்தாவது மனிதனுக்கு அதிசாரச் சன்னிச்சுரம் உண்டாகக்கூடுமென்பதற்கு யாதொரு அத்தாட்சியுமில்லை. ஆனல் பால்தானே வேறு சில கொடிய வியாதிகளுக்கு உண்மையான காரணமாக இருக்கலாம்; பாலின் மூலமாக அநேகமாய்ச் சயதக (Tuberculosis) நோயும், நிச்சயமாய் வாய்நோய் கால்நோயும் (Foot and Mouth Disease) குழந்தைகளைப் பற்றலாம். இந்த வியாதிகள் பக்கங்களிலுள்ள காலநடைகளில் பரவியிருக்கும்போது குழந்தைகளுக்குக் கொடுக்கும் பாலெல்லாம் ஆவசியகமாய் நன்றாகக் காய்ச்சப்படவேண்டும். அப்படிச் செய்யவில்லையானல் குழந்தைகளுக்குப் பிராணபாய

மான வயிற்றுக்கழிச்சல் உண்டாகலாம். உண்மையாகவே பாலை நன்றாகக் காய்ச்சுவது (மேலே சொல்லியவை போன்ற) தீங்குகளைப் பூரணமாக நிவர்த்திசெய்வதற்கு மிகச் சிலாக்கிய மான உபாயம். பிராணியை மெலிவாகச் செய்யும் வியாதிகள் பாலைக்குறையும்படியாவது, அதின் குணத்தை மிகவும் கேவலமாகும்படியாவது செய்யும். இந்த ஸ்திதியில் பாலில் அநேகமாய் இல்லையென்று சொல்லும்படியான வெண்ணெயும், மிகவுங்குறைவான சர்க்கரையும், சதையை வளர்க்கும் வஸ்துக்களும் இருக்கும். சுகமான நல்ல பால், தேகத்துக்குவேண்டிய வஸ்துக்களெல்லாவற்றையும் சரியான அளவாக உடைத்தாயிருப்பதால், கிடைக்கக்கூடிய சகல ஆகாரங்களிலும் மிகச் சிலாக்கியமானது. பால் கறந்தபின், அதில் சில மாறுபாடுகள் உண்டாகின்றன; பால் * பித்தளைப்பாத்திரத்தில் வைக்கப்பட்டால் அதிலிருந்து பித்தளைக்களிம்பைக்கிரகித்து அந்த நஞ்சினால் அதைச் சாப்பிடுபவர்களுக்கு வியாதியை உண்டாக்குகிறது; ஆகையால் பாலைப் பித்தளைப்பாத்திரத்தில் கொஞ்சநேரம் வைப்பதுங்கூட மிகவும் அபாயமான வழக்கமாகவிருக்கிறது. மிகவும் அதிக அசுத்தமானதாகவும், மனிதர்தேகத்தழுக்கும், மிருகங்களின்தேகத்தழுக்கும் நெடுநாளாகத் திரண்டிருப்பதாகவுமுள்ள உக்கிராணங்களில் சட்டிகளைவைத்து அவைகளில் பால்விட்டிருப்பதை நான் சென்னபட்டினத்தில் பார்த்திருக்கிறேன்; இப்படிப்பட்ட இடத்தில் பால்வைப்பது மிகவும் சுகவிரோதமானது. ஒரு வீட்டில் ஒரு பக்கத்தில் மாடுகள்

* பித்தளைப் பாத்திரத்தைப்போலவே செம்பு, ஈயமுதலிய சில லோகங்களினால் செய்யப்பட்ட பாத்திரங்களும் பால் வைப்பதற்கு உதவாதவைகள். தகரப்பாத்திரங்களும், பீங்கான் ஏனங்களும் பால் வைக்கத்தக்கவைகள். மண்சட்டி மிகுந்த அழுக்கடையக்கூடியதாக இருப்பதால், அவ்வளவு சிலாக்கியமானதல்ல.

முழங்கால் முழுகும்படி சாணிகலந்த சேற்றில் நிற்பதை யும், மற்றொரு பக்கத்தில் பாற்காரனுடைய் குடும்பம் வசிப்பதையும் நாம் பார்க்கலாம்; இப்படிப்பட்ட இடங் கள் முழுமையும் மாடுகளிடத்திலிருந்தும், மனிதர்க ளிடத்திலிருந்தும் வெளிப்படும் அசுத்த ஆவிகள் நிறைந் திருப்பதினால், அவைகள் பாலைக்கெடுத்து அதில் விசேஷ மான மாறுபாடுகள் உண்டாக்கி அதை வியாதிகளுக்கு நிச் சயமானகாரணமாகும்படிசெய்துவிடலாம். பால், வியாதி யுள்ள பிராணிகளிடத்திலிருந்து கறக்கப்பட்டதாகவிருக் கக்கூடாது; அதில் தண்ணீர் கலக்கக்கூடாது; அழுக் கும் வியாதிவஸ்துவும் சேராதபடி அந்த மூடிய பாத்திரத் தில் வைக்கவேண்டும்; அது ஆகாரமாக உபயோகப் படுந் தன்மையைக் குறைக்கும் மாறுபாடுகள் உண்டாகு முன் அதை உபயோகப்படுத்தவேண்டும். மேற்சொல் லிய காரணங்களால் நம்முடைய பட்டணங்களில் சனங் களுக்குப் பால் விலைக்குக் கொடுக்கப்படுவதை யொழு ங்கு படுத்துவதற்கு ஒரு சட்டம் அத்தியாவசியகமென் பது மிகவும் பிரகாசமாகவிருக்கிறது; இவ்விதமான சட்டமொன்று ஏற்பட்டு அனுபவத்துக்கு வரும்வரை, பால் உபயோகிப்பவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கு வரும் பாலும் வெண்ணெயும் எப்படிப்பட்ட இடத்தி லிருந்து வருகின்றனவென்பதைப்பற்றி மிகவும் சாக் கிரதையாக இருக்கவேண்டும். மேலே சொல்லிய விசேஷங்கள் பசுவின் பாலுக்கு மாத்திரம் பொருந்து மென்றெண்ணக்கூடாது; அவைகள் ஆட்டின் பாலுக் கும் (உபயோகிக்கப்படும் எந்தப்பாலுக்கும்) பொருந் தும். பலவகைப்பாலும் போஷிக்குஞ்சக்தியில் (ஒன்றி லிருந்தொன்று) வித்தியாசப்படும்; ஆனால், அவைக ளெல்லாம் (துர்க்கந்தமுதலிய) அசுத்தத்தினால் (ஒன்று போலக்) கெடுதியடையுந் தன்மையுடையனவைகளாக விருக்கின்றன.

## ௬—வது அதிகாரம்.

## கால்நடைகளின் நஞ்சீடு.

கால்நடைகள் நஞ்சுள்ள வஸ்துக்களால் எவ்வளவு துன்பமடைகின்றனவென்று நாம் சாதாரணமாக நினைக்கின்றோமோ, அவ்வளவிலும் அதிகமாகவே துன்பமடைகின்றன.

நஞ்சினால் ஆகும் மரணம் பின்வரும் மூன்றுவகையினால் உண்டாகிறது:—

1-வது.—தற்செயல்.

2-வது.—குற்றம்.

3-வது.—* அப்பியாச வைத்தியம்.

1-வது.—தற்செய்லான நஞ்சீடு (Accidental Poisoning) பலவகையில் சம்பவிக்கிறது. பசியினால் வருந்தும் கால்நடைகள் வெறுமையான மேய்ச்சற்றலத்தில் விடப்பட்டபோது காரப்பும் நஞ்சுமுடைய பூண்டுகளையாவது, இயற்கைக்கு விரோதமானவைகளாகவும், ஆகாரத்துக்குத் தகுதியற்றவைகளாகவுமுள்ள பூண்டுகளையாவது மேய்கின்றன. சிலவேளைகளில் பூசணம்பிடித்த அல்லது மடித்த தீனி கொடுக்கப்படுகிறது. இவ்வகைகளினால் பிராணிகளுக்கு நஞ்சு சேருகிறது.

---

* அப்பியாச வைத்தியம் (Empirical Practice, or Quackery).—செய்வதற்கு முகாந்தரம் தெரியாமல், வழக்கமொன்றையே பிரதானமாகக்கொண்டு செய்யும் வைத்தியம்.

பின் வருபனவைகள் ஆகாரத்தோடு தற்செயலாகக் கலந்து தின்னப்படும் பூண்டுகளில் மிகச்சாதாரணமானவைகள்.

(1) ஊமத்தை.
(2) எருக்கு.
(3) புகையிலை.

2-வது.—குற்றமுள்ள (கிரிமினல்) நஞ்சீடு (Criminal Poisoning). இந்தத் துரோகமான தொழில், இந்தப் பிரதானியில்மாத்திரமல்லாமல், இந்தியாவெங்கும் சாதாரணமாகவிருக்கிறது. இந்தத்தொழில் ஹிந்துக்களில் மிகுந்த கீழ்ச்சாதிகளால் செய்யப்படுகிறது. இதைச் செய்வதற்கு நோக்கம் லாபமாகவாவது, துன்மார்க்கமாகவாவது இருக்கிறது; நோக்கம் எதுவாகவிருந்தாலும், இந்தக்காரணத்தினால் வருஷந்தோறும் கால்நடைகளில் மிகுந்த சேதம் நேரிடுகிறதென்பது நிச்சயம். ஒரு கிராமத்தில் சாகும் மாடுகளின் பிரேதங்கள் தோல்களோடு அந்தக்கிராமத்துப் பறையருக்குச் சுதந்தரமானவைகளாகவிருக்கின்றன. இதனால் அவர்கள் தோல் விலை கிராக்கியாகுங்காலத்தில், தங்கள் கிராமத்து மாடுகளுக்கு நஞ்சிடுகிறார்கள்.

சாதாரணமாகப் பறையரும், சக்கிலியரும் இவ்வளவு காலத்தில் இத்தனை தோல் கொடுக்கிறோமென்று தோல் வியாபாரிகளிடத்தில் ஒப்பந்தஞ்செய்துகொள்ளுகிறார்கள்.

இந்தத் துரோகிகள் சாதாரணமாக உபயோகிக்கும் நஞ்சுகள் தாவரவருக்கத்தை (Vegetable Kingdom) யாவது, தாதுவருக்கத்தை (Mineral Kingdom) யாவது சேர்ந்தவைகள். பின்வருபவை தாவர நஞ்சுகள் (Vegetable Poisons) :—

(1) ஊமத்தை
(2) எருக்கு.
(3) எட்டி.
(4) நேர்வாளம்.

பின்வருபவை தாதுநஞ்சுகள் (Mineral Poisons):—

(1) வெள்ளைப்பாஷாணம்.
(2) மஞ்சட்பாஷாணம்.

நஞ்சிடு பலவகையாகச் செய்யப்படுகிறது. கொஞ்சம் மா, அல்லது தவிட்டில் நஞ்சைக்கலந்து வாழையிலை, அல்லது வேறு இலையில் வைத்துச் சுற்றி மாட்டின் வாயில் கொடுக்கவாவது, நஞ்சை அது மேயுமிடத்தில் அது பொறுக்கித் தின்னத்தக்க இடத்தில் போடவாவது செய்கிறார்கள். நஞ்சை வேறொன்றுஞ் செய்யாமல் பிராணிக்குத் திவனமாக அதின் முன் வைத்திருக்கும் புல்லோடு கலந்துவிடுவதுமுண்டு. மேய்ச்சற்றலத்தில் செழிப்பாகப் புல் வளர்ந்திருக்குமிடத்தில் நஞ்சைச் சிதறிவிடுகிற வழக்கமுமிருக்கிறது. இவ்வகையில் முக்கியமாகத் தாது நஞ்சுகள் (Mineral Poisons) இடப்படுகின்றன. நஞ்சை ஒரு கூர்மையான ஆயுதத்தினால் தேகத்தின் எந்தப்பாகத்திலாவது தோலைக்குத்தி யுட்செலுத்தவாவது, மலத்துவாரம், அல்லது சலத்துவாரத்தினுள்ளே வைக்கவாவது செய்கிறதுமுண்டு.

இந்தியாவில் சில பாகங்களில் நஞ்சிடு ஒரு விநோதமான வகையினால் செய்யப்படுகிறதென்று கேள்விப்படுகிறோம், கோமாரியினலிறந்த ஒருபிராணியின் தலையை, அழுகி நாறும்வரை, புதைத்துவைக்கிறார்கள்; பின்பு ஒரு ஊசியை அதில் முழுதும்படிசெய்து நஞ்சூட்டி அதனால் மற்றொரு பிராணியைக் குத்துகிறார்கள்.

எருக்கினால் நஞ்சிடுவது மிகவும் லேசானதாகவும், ஆகையால் அடிக்கடி செய்யப்படுவதாகவு மிருக்கிறது. இந்தச் செடியின் கார்ப்பான (அதாவது ஒருவகையான உறைப்புள்ள, Acrid) பாலை ஒருதேங்காய்ச் * சிரட்டையில் வடித்து அதில் ஒருமுழநீளமும் இரண்டுவிரலகலமுமுள்ள ஒரு கந்தைத்துணியை நன்றாக நனைத்து, ஒன்று அல்லது ஒன்றரைவிரலளவு குறுக்களவும் ஒரு சாதியடி நீளமுமுடைய கம்பில் சுற்றி, அதை மாட்டின் (அபான வாய்வழியாகக்) கடைக்குடலுட் செலுத்தியபின், முன் துணியைச்சுற்றிய விதத்துக்கு மாறானவிதமாகக் கம்பை, துணி பூரணமாக விட்டுப்பிரிந்து குடலில் தங்கிக் கொள்ளும்வரை, சுற்றியபின் கம்பு வெளியே எடுக்கப்படுகிறது. எருக்கம்பால் அழற்சி நஞ்சுகளுள் மிகப்பலமானதாகையால், குடலில் கொடிய அழற்சியுண்டாகிப் பிராணி மிகுந்த துன்பமனுபவித்துச் சீக்கிரத்தில் மரணமடைகின்றது.

மிகுந்த பிராணபாயமான தொற்று வியாதிகள் உண்டாகியிருக்கும் கிராமங்களில் நஞ்சிடு மிகவும் விஸ்தாரமாகச் செய்யப்படுகிறது; ஏனென்றால், இப்போர்ப்பட்ட சமயங்களில் கால்நடைக்குடையவர்கள், பறையர்களைத் துரோகிகளென்று சந்தேகிக்கிறதில்லை; இதனால் குற்றவாளிகளைக்கண்டு பிடிப்பது வருத்தமாகி, அவர்கள் யாதொரு தண்டனையு மில்லாமல் தப்பிக்கொள்ளுகிறார்கள். சனங்களுக்குக் கேடுசெய்யும் சாபம்போன்ற இந்தத்துன்மார்க்கர்கள் வெக்கை, அடைப்பான் போன்ற மிகவும் பிராணபாயமான வியாதிகளினால் பிடிக்கப்பட்ட பிராணிகளின் மலசலக்கழிவுகளைப் பலகிராமத்து

---

* சிரட்டை "கொட்டாஞ்சி" யென்றும் "கொட்டாங்கச்சி" யென்றுஞ்சொல்லப்படுகிறது.

மேய்ச்சற்றலங்களில் கண்ணுக்கினிமையான பாகங்களில் போட்டு அவ்வியாதிகளைப்பரவச் செய்கிறார்கள்.

3-வது.—அப்பியாசவைத்தியம் (Empirical Practice). அப்பியாச வைத்தியஞ்செய்யும் ஆடுமாடுமேய்ப்பவர்களும், சமுசாரிகளும் தங்களுக்கு மருந்தின் குணம் கொஞ்சமுந்தெரியாமல் மருந்துகளையுபயோகிக்கிறார்களென்று ஒரு பேர்பெற்ற வெற்றெரிநெரி ஸாஜன் அபிப்பிராயித்துச் சொல்லியிருக்கிறார். அவர்களால் தப்பாக அறியப்படுவதுமல்லாமல், அநேக சந்தர்ப்பங்களில் மிஞ்சிப்போகும் வரையும் கவனித்தறியப்படாத ஏதுகளால் மரணம் சம்பவிக்கிறது.

நஞ்சீட்டிற்குப் பிரயோகம்:—நஞ்சினால் வருந்தும்பிராணிகளுக்கும் பிரயோகஞ்செய்வதில் பின்வரும் மூன்று விதிகளைக்கவனிக்கவேண்டும்.

1-வது.—நஞ்சை வெளிப்படுத்தவும்.
2-வது.—அதின் செய்கையை நிறுத்தவும்.
3-வது.—அது தேகத்துக்குச்செய்த தீங்கை நிவர்த்திக்கவும்.

கால்நடைகளை வாந்தியெடுக்கச்செய்வது முடியாமையாக விருப்பதால், அவைகளின் நஞ்சீட்டில் முதல் விதியை அநுசரிப்பது கூடாமையாக விருக்கிறது. வயிற்றிலிருக்கிற நஞ்சுடன் அதைத்தீங்கற்றதாக்கக் கூடிய மாற்றுமருந்து அல்லது முறிவுமருந்து (Antidote) களைக் கலக்கும்படி செய்வதினால் இரண்டாவது விதி நிறைவேற்றப்படும். கையில் மருந்தில்லையானால் முட்டைக்கரு, திண்ணமானகஞ்சி, தடித்தகோந்து (Gum) நீர், கொழுப்பு, நெய், (அழற்சியுண்டாக்காத) எண்ணெய் இவைகளில் எதையாவது காலதாமதஞ் செய்யாமற் கொடுக்கவும்.

பாஷாண (Arsenic) த்தினால் பிராணி வருந்துவதாகத்தெரிந்தால் சீமைச்சுண்ணும்பு (Chalk), அல்லது நாட்டுச்சுண்ணும்பு கலந்த தண்ணீரை ஏராளமாகக் கொடுப்பதினால் நன்மையுண்டாகும்.

இவ்வதிகாரத்தில் சொல்லப்பட்ட மற்ற நஞ்சுகளினால் வருந்தும் பிராணிகளுக்கு முதலில் பட்டைச்சாராயத்தைக்கொடுத்துப் பின்பு பலமான பேதிமருந்து கொடுக்கவும்.

நஞ்சினால் பிராணியின் தேகத்துக்கு சேர்ந்ததீங்கை நிவர்த்திக்கும்படி நல்ல ஆகாரத்தினால் [illegible]மாகப் போஷித்தலும், பலவிருத்தி மருந்து கொடு[illegible]லும்வேண்டும். பிராணி இளைத்ததாகவிருந்தால் அதற்கு உற்சாகமருந்துகளும் கொடுக்கவேண்டும்.

கல்வியறிவில்லாதவர்கள் கால்நடை வியாதிகளுக்குப் பிரயோகஞ்செய்வதினால் வியாதிப்பட்ட பிராணிகளுள் மரணத்தினளவு அதிகரிக்கிறது. இப்போது தலையெடுத்துவரும் சுதேசவெற்றெரிநெரி வைத்தியரிடத்தில் நமக்கு மேலான நம்பிக்கையிருக்கிற தென்றும், அவர்களுக்கு * வெற்றெரிநெரி வைத்தியத்தோடும், ரணவைத்தியத்தோடும், ரசாயனசாத்திரத் (Chemistry) திலும், தாவரசாத்திரத் (Botany) திலுமுள்ள அறிவானது, வியாதிகளைப் பகுத்தறிந்து அவைகளுக்குப்பிரயோகஞ்செய்வதில் மிகுந்த உதவியாயிருக்குமென்றும், இதை விவசாயக்காரர் பூரணமாக நன்கு மதிப்பார்களென்றும் நிலையான சாதனமாக வெழுதி வைப்பது நமக்கு இனிய கட்மையாகவிருக்கின்றது.

* வெற்றெரிநெரி வைத்தியம்.—குதிரை, மாடு, ஆடுமுதலிய (மனிதருக்குபயோகமான) வீட்டு மிருகங்களுக்குச்செய்யும் வைத்தியம்.

603

"பாமரவைத்தியம் இப்போதிருக்கிற நிலைமையிலேயே இருக்கலாம்; அதனால், பிராணிகள் வைத்திருப்பவர்கள் விஷயத்தில், செய்யப்படும் ஏமாற்று நடந்துகொண்டிருக்கலாம். ஆனால் நமது விவசாயக்காரர்கள் மேலான நிலைமை யடையவடைய அவர்களறிவு மேலானதாகி அவர்கள் சந்தேகத்துக்கும், புரட்டுக்கும், மயக்குதலுக்கும் உட்பட்டிருப்பதினின்றும் நீங்கிச் சாஸ்திரீய வியாக்கியானத்தையும் நடவடிக்கையையும் அங்கீகரிப்பார்கள்."

## ய—வது அதிகாரம்.

### பிணஞ்சுடு காளவாய்களும், சுகாநுகூல சுத்தவிருத்தியும்.

மனிதருடைய ஆளுகைக்குட்பட்டு, அவர்களுக்கு உபயோகமாகவிருக்கிற பிராணிகள் மிகுதியாகவுள்ள இந்தியாவைப்போன்ற தேசங்களிலும் செத்தபிராணிகளின் தேகத்தை எவ்விதம் பரிகரிக்கவேண்டுமென்பதைப்பற்றி யாவரும் அசட்டையாகவிருக்கிறார்கள். ஆயினும் இந்தவிஷயம் மகாமுக்கியமானதென்று எனக்குத் தோன்றுகிறது.

பிணத்தை எவ்வளவு ஆழமாகப்புதைத்தாலும், சிலவிடங்களில் நிலம் அதிகமாகவாவது குறைவாகவாவது அசுத்தமடைந்து, அங்குள்ள வாயுவும் அசுத்தமாய்ச் சுகத்துக்கு உதவாததாகிறபடியினால், அங்கு மனிதரும் மிருகங்களும் வசிப்பது அபாயமானது.

பிணத்தைப் பரிகரிப்பதற்காக உள்ளவழக்கங்களில், புதைப்பது மிகவுஞ் சுகவிரோதமானது. கூடிய இடங்களெல்லாவற்றிலும் கவர்ன்மெண்டார், கண்டிப்பான சட்டங்களை ஏற்படுத்துவது ஆவசியகமென்று தோன்றினால் அவ்விதஞ் செய்தாவது புதைக்கும் வழக்கத்தை நிறுத்தவேண்டும். இப்படிச்செய்வது சனங்களுடைய சுவாதீனத்தைக்கொஞ்சங் குறைப்பதாகவிருக்கும். ஆனால் சுத்தவிருத்தியைச்சரியாகச் செய்யாததினால், சனங்களுடைய பிராணனுக்கு அபாயம் நேரிடும்போது மேற்சொல்லியதுபோன்ற அற்பவிஷயங்களைக் கவனிக்கக் கூடாது.

# பிணஞ்சுடுகாளவாயின்படம்






கட்டடத்தை எ-பி என்றகோட்டின்நேராகவெட்டிக்காட்டியபகுதி.



க. அஸ்திவாரம்

உ. சுவர்

ந. செத்ததைபோடும் அறையைக்காட்டும்கோடு

ச. காற்றுப்போகுந்துவாரம்

ரு. படிக்கட்டு

சரியபடிகளின்ஸ்கேல்




ஒருலக்கத்தின் உச்சியில் ' இந்த அடையாளம் அடியையும்

" இந்த அடையாளம் அங்குலத்தையுங்குறிக்கும்

(கையொப்பம்) ஜேம்ஸ். மில்ஸ். வி. எஸ். ஏ. வி. டி.

கால் நடை வியாதியின் இன்ஸ்பெக்டர்,

அடைப்பான் வியாதியினல் சாகும்பிராணிகள், குதிரைச்சய (Glanders) த்தினுல் பீடிக்கப்பட்டுக் கொல்லப்படும் பிராணிகள், இவைபோன்ற வியாதிப்பட்ட பிராணிகளின் தேகத்தையெரித்துச் சாம்பலாக்குவதற்குபயோகமாகுவதல்லாமல், காயங்கட்டுதல் புண்களுக்குப் பிரயோகஞ்செய்தல் முதலியவைகளில் உபயோகிக்கப்பட்ட துணிமுதலிய அசுத்தமான சகல கழிவுப் பொருள்களையும், உரமாகவுபயோகிக்க மார்க்கமில்லாமல் திரண்டு அசௌகரியத்தையும் சுகவீனத்தையும் உண்டுபண்ணும் லாயத்துச்செத்தைகளையும் பரிகரிப்பதற்கும் உபயோகமாகின்ற பிணஞ்சுடுகொளவாய்களை இப்புத்தகத்திற் சேர்த்திருக்கிற படத்தின்படி இந்தியாவெங்கும்பல இடங்களில் கட்டுவது மிகச்சிலாக்கியமானதென்று நான் ஸ்திரமாகச்சொல்லுகிறேன்.

இவ்விஷயத்தைச் சகலருமறியும்படி கொஞ்சமுன்னமே தெரிவித்திருந்தால், மிகுந்த நன்மையாகவிருந்திருக்கும். ஆயினும், இதைப்பற்றி இப்போது சொல்வதினுல் நன்மையில்லாமற் போகாதென்றெண்ணுகிறேன். வியாதிவித்துகளை நாசஞ்செய்வதில் நெருப்பினும் மேலானதொன்றுமில்லை. தொற்றுவியாதி பரவாமல் தடுப்பதற்கு இதுவே உண்மையான உபாயமென்பது தெளிவானது. இந்தியாவிலுள்ள பிராணிகளைப் பீடிக்கும் தொற்றுவியாதிகளின் விகற்பங்களையும் அவைகள் பரவும் வகைகளையும்பற்றி இங்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டிய ஆவசியகமில்லை. அவ்வியாதிகள் அபரிமிதமான சேதத்தையுண்டுபண்ணி, இத்தேசத்திற்குப் பெருநஷ்டத்தைச் செய்கின்றனவென்பதை இப்புத்தகம் வாசிப்போர் ஒத்துக்கொள்ளாமலிரார்கள்.

(பிராணிகளுக்குவரும் மிகக்கொடூரமும் பிராணபாயமுமான வியாதிகளிலொன்ருகவும், பிணங்களைச்

சுடாமல் புதைப்பதினால் பரவும்வியாதியாகவு முள்ள) அடைப்பான் வியாதியின்வித்துகள், முன்னமே ரூபிக்கப் பட்டிருக்கிறபடி, நாங்கூழ்ப்பூச்சியின் மூலமாய் நெடுந் தூரம் பிரயாணஞ்செய்யவும், (விருத்தியாவதற்குவேண் டிய) உயிர்த்தன்மை நெடுங்காலம் நீங்காமலிருக்கவும் கூடும். ஆகையால், இவ்வியாதிவித்துகளைப் பூரணமாக நாசஞ்செய்வதற்குரிய சரியான உபாயங்களைக்கையாடி, மேற்சொல்லியவியாதியின் காரணத்தைநீக்க முயல்வது அத்தியாவசியகமானது. காரணம் நீங்கும்வரை அதனால் உண்டாகிக்கொண்டிருக்கும் காரியமும் நீங்கமாட்டாது.

இந்தியாவில் மனிதருக்கும் மிருகங்களுக்கும் கொள்ளைநோய்கள் உண்டாகிற இடங்களெல்லாவற்றி லும், அவைகள் உண்டாவதற்குக் காரணம் என்ன வென்று நாம் விசாரிக்கவேண்டும். வியாதிவித்துகள் பற்றிய வஸ்துக்களைப் பரிகரிப்பதற்குச் சரியானமார்க்க மில்லாததினால் அவைகள் உண்டாயிருக்கலாம். கொள்ளைவியாதிகள் பத்துத்தடவை யுண்டானால், அப்படி யுண்டாகுவதில் ஒன்பதுதடவை இப்போது சொல்லிய காரணத்தினால் உண்டாகின்றனவென்று சொல்வதற்கு யாதொரு தடையுமில்லை. ஆகையால் சனங்களுடைய நன்மைக்காக, எங்கும் அசுத்தவஸ்துக்களையும் வியாதி வித்துகள் ஒட்டியிருக்கிற வஸ்துக்களையும் சுட்டுச்சாம்ப லாக்குகின்ற ஏற்பாட்டை நன்றாகக் கையாடிப்பார்த்து அதன்பயனைத் தெரியவேண்டுமென்று நான் மிகவும் விரும்புகிறேன்.

வியாதியைப்பரவச் செய்யக்கூடிய எந்த வஸ்துவை யும்எரித்துவிடுவதற்காக, சகல வைத்தியசாலைகளுக்கும், வாங்கிபேதிக்காகக்கட்டப்படும் தொட்டிகளுக்கும், வியா தியடைந்த பிராணிகளுக்காகக் கட்டப்படும் கட்டடங்க ளுக்கும், கடைகளுக்கும் சமீபத்தில் பிணஞ்சுடுகொள வாய்கள் கட்டவேண்டும்.

குதிரைகளிருக்கிற இடங்களுக்குப் பக்கத்திலுள்ள வைத்தியசாலையின் உபயோகத்துக்காகக் கட்டப்பட்டிருக்கிற பிணஞ்சுடுகொளவாயில் எரிப்பதற்குக் குதிரைலாயத்துக்குப்பை லகுவாகக்கிடைக்கும். இந்தக்குப்பை விறகுக்குச்சமானமாக உபயோகமாகிறதைப் பார்த்திருக்கிறேன். இப்புத்தகத்திற் சேர்க்கப்பட்டிருக்கும் படத்திற்காட்டியிருக்கிற அளவுப்படி சாதாரணமான மண்ணினாலாவது, களிமண்ணினாலாவது ஒரு பிணஞ்சுடுகொளவாய் கட்டுவதற்குச் செல்லும் செலவு அஞ்சு அல்லது ஆறு ரூபாய்க்கதிகப்படாது. அது பிராணிகளைச் சுடுவதற்காகப் பெரிதாகக்கட்டப்படவேண்டுமானால், பதினாறுக்கு மேல் பதினெட்டுரூபாய்க்குள் முடியும்; ஆகையால் பிணஞ்சுடுகொளவாய்களை உபயோகிப்பதில் செலவைப் பற்றிய ஆட்சேபனை யிருக்கமுடியாது. களிமண்ணினாலாகும் சுவர் அதிக உறுதியும் நிலவரமும்உள்ளதாகையாலும், மழையினால் அதிகக்கெடுதியடையாததாகையாலும், சுவர்கட்டுவதற்கு மண்ணிலும் களிமண் நிச்சயமாகச்சிறந்தது. ஆதலால் களிமண் கிடைக்குமிடங்களில் அதையே உபயோகிப்பது மிகுந்த நலமாகவிருக்கிறது. பிணஞ்சுடுகொளவாய்கள் செங்கலினால் கட்டவேண்டியிருந்தால், மிகவும் அதிகமான செலவுபிடிக்கும். மண்ணினாற்செய்த பிணஞ்சுடுகொளவாய்கள் விஷயத்தில் எனக்குள்ள அனுபவத்தினால், அவைகள் சகலவிதத்திலும் போதுமானவைகளென்று தெரிந்திருக்கிறேன். சாமர்த்தியமுள்ள தொழிலாளிகளின் உதவியில்லாமலே அவைகள் வேண்டியபோது லகுவாக மிகவும் அற்பமான செலவினால் கட்டப்படக்கூடும். இவ்விதமாகக் குறைவான செலவு அவைகளை யுபயோகிப்பதற்கு ஒரு பெரிய அநுகூலமாகவிருக்கிறது. அவைகள், சென்னபட்டினம் பிரதானியில் அனேக இடங்களில், அடிக்கடி

யுபயோகப்பட்டுக் கொண்டிருக்கின்றன; நான் அவைகளை யுபயோகிப்பது நலமென்று சொல்லியதின் மேல் அவைகள் பங்காளத்தில் ஏற்படுத்தப்பட்டு மிகுந்த நன்மையுடன் மிகுதியாக உபயோகப்படுகின்றன.

பரங்கிமலை (St. Thomas' Mount) யில் குதிரைச் சயமும் பார்சியும் உண்டானபோது அவ்வியாதியி னிமித்தங் கொல்லப்பட்ட பதினொரு குதிரைகள் பிணஞ் சுடுகொளவாயில் எரிந்து சாம்பலாகும்படி செய்வித்துப் பார்த்திருக்கிறேன். இதனால் பிணஞ்சுடுகொளவாயினால் என்ன செய்யக்கூடுமென்பது விளங்குகிறது. சிகந்தரபாத் (Secunderabad) தில் அடைப்பான் வியாதியினால் இறந்த குதிரை ஒன்றின் தேகத்தை மேற்சொல்லிய பிரகாரமாகவே பரிகரித்திருக்கிறேன். லாயத்துச் செத்தைகளைமாத்திரம் உபயோகித்து ஒரு குதிரையின் தேகத்தைச்சாம்பலாக்குவதற்குச் சராசரியாக முப்பது நாழிகை பிடிக்கிறது. பிணஞ்சுடுகொளவாய்கள் அனுபவத்துக்குக் கொண்டுவரப்படக் கூடியவைகளென்பதற்கு நான் இப்போது சொல்லியது போதுமான அத்தாட்சியாகவிருக்கிறது. இவ்வத்தாட்சி மிகத் திருப்திகரமானதென்று சொல்வது ஆவசியகமென்று எனக்குத் தோன்றுகிறது; ஏனென்றால், கவர்ன்மெண்டுக்கு மிகக்குறைந்த செலவில் மேலேசொல்லிய பிராணிகளின் தேகங்களை நன்றாகப்பரிகரித்து, புதைத்தலினால் மேற்சொல்லிய இடங்களிலும் அவைகளுக்குப் பக்கங்களிலும் அநேகமாய் உண்டாகியிருக்கக்கூடிய அசுத்தத்தை நிவர்த்தி செய்து, சுகத்துக்கடுத்த அபிவிருத்தி விஷயத்துக்கு அநுகூலமாக, அனேகதீங்குகள் மனிதரால் நிவர்த்திக்கப்படக்கூடியவைகளென்று ஒருவாறு காட்டியிருக்கிறேன்.

லாயத்துக்குப்பை முதலிய செத்தைகளுக்குப் பதிலாக விறகை உபயோகித்தால், எரிக்கப்படவேண்டிய பொருள்களை அதிகச் சீக்கிரமாக எரித்துவிடலாம்; ஆனால் அப்படிச்செய்வது ஆவசியகமில்லை; ஏனெனில், சாதாரணமாகப்பிணங்களை எவ்வளவு சீக்கிரத்தில் எரிக்க வேண்டியது ஆவசியகமாகவிருக்குமோ, அவ்வளவு சீக்கிரத்தில் லாயத்துக்குப்பையினாலேயே யெரித்துவிடக் கூடும்.

சுகம்கெடாமல் அதைப்பரிபாலனஞ்செய்வதற்கும், பெருவாரிநோய்களைவராமல் தடுப்பதற்கும் வியாதிப்பட்ட பொருள்களை எரித்துச்சாம்பலாக்குவதே யூகமான வழியென்று தெரிந்துகொள்வதற்கு மிகுந்த யோசனை வேண்டியதில்லை.

கட்டடத்துக்கேற்றதானம் :—பிணஞ்சுடுகொளவாய்கள் கட்டுவதற்கேற்ற இடம் நன்றாகக்காற்று வருவதாகவும், அங்குண்டாகும் புகையினால் சனங்களுக்குத் தொந்தராவாவது, அவர்கள் சுகத்துக்கு எவ்விதமான கெடுதியாவது உண்டாக மார்க்கமில்லாததாகவும் இருக்கவேண்டும்.

கட்டடம் :—களிமண் அகப்படாமல், மண்ணினாலாவது, செங்கலினாலாவது கட்டும் சுவர் எங்கும் அதிகத் திண்ணமுடையதாகவும், முக்கியமாய் அடிக்கனம் அதிகமாக உடையதாகவும் இருக்கவேண்டும். அது நெடுங்காலம் நிலைத்திருக்கவேண்டுமானால், களிமண்ணினால் கட்டும் சுவருக்குக் கொஞ்சங்குறைய இரட்டிப்புக் கனமுடையதாக இருக்கவேண்டும்.

அஸ்திவாரம் கட்டிமுடிந்தபின் மேற்கட்டடந் துவக்குமுன் கொஞ்சநாள் செல்லவேண்டும். பின்பு மூன்றடியுயரம் சுவர்வளர்த்தபின பட்டத்தில் சூலக்கமிட்டுக்

காட்டியிருக்கிற காற்றுப்போகுந்துவாரத்தின் உச்சிப் பாகமாக வைக்கவேண்டிய கல்லுகளை வைப்பதற்குமுன் அந்தச்சுவர் பூரணமாக இறுகிவிடவேண்டும். பின்பு அதிகமாக அவசரப்படாமல் சமயவாய்ப்புக்குத்தக்கபடி கட்டிக்கொள்ளலாம்.

படத்தில் ரு-லக்கமிட்ட படிக்கட்டின் அத்திவாரத் துக்குச் சில சாதாரணமான கல்லுச்சுமைகள் அல்லது குண்டுக்கல்லுகள் போதும்.

பிணஞ்சுடுகொளவாய் கட்டி முடிந்து பூரணமாக உலர்ந்தபின் அதை எங்கும் சாணியினால் மெழுகவேண்டும்; வெடிப்புண்டாகுதல் நிற்கும்வரை அதை வாரந் தோறும் மெழுகிவரவேண்டும்.

உபயோகிப்பதற்கு வேண்டிய விதிகள்:—1. பிணஞ் சுடுகொள்வாயை முதல் முதல் நிரப்பும்போது மற்றவகையில் மிச்சம் பிடிக்கக்கூடிய செத்தையையெல்லாம் அடியிற்போடவும்; இப்படிச்செய்வதினால் நெருப்பு முதலில் பற்றுவது லகுவாயிருக்கும்; பின்பு கொஞ்சங் கொஞ்சமாக நிரப்பவும்; பாதி நிரம்பியவுடன் காற்றுப் போகுந் துவாரத்திலுள்ள வைக்கோலில் நெருப்பு வைக்கவும். சுவர்களில் நன்றாகச் சூடேறியபின் (மற்றப்படி எரிய வருத்தப்படும்) எந்தப்பொருளும் லகுவாக எரியும்.

2. காற்றுப்போகுந் துவாரங்கள் அடைபட்டுப்போகாமல் அவைகளிலுள்ள சாம்பலை வெளியாக்கும்படி கவலையெடுக்கவேண்டும். இப்படிச் செய்வதற்கு இரும்பினால் கவருள்ள செத்தைவாரிபோல ஒன்று செய்து அதை ஒரு நீண்ட மூங்கிற்றடியின் முனையில் நன்றாக மாட்டிவைத்துக்கொள்வது நலம்.

3. சுவர்களில் எதுவாயினும் பழுதுபார்த்துப் புதுப்பிப்பது ஆவசியகமானல் அவ்விதஞ் செய்வதற்காக, இரண்டு அல்லது மூன்றுவாரத்துக்கொருமுறை பிணஞ்சுடுகொளவாயிலுள்ள சாம்பல் முதலியவைகளை வெளிப்படுத்தவேண்டும்.

4. பிணத்தைச் சுடுவதற்குப் படத்தில் ௩ - ஸக்க மிட்டுச் செத்தைபோடும் அளவைக்குறிக்கும் கோடுவரை பிணஞ்சுடுகொளவாயில் முக்காற்பங்கு செத்தையினல் நிரப்பிப் பிணத்தை முழுமையாகவாவது, துண்டுதுண்டாகச் செய்தாவது வைத்துச் செத்தையினல் மூட்டவும். பிணம் பூரணமாக எரிந்து சாம்பலாவதற்குப் போதுமான செத்தையை அப்போதைக்கப்போது வேண்டியமட்டும் போடவும்.

5. மழைகாலத்தில், மழையடிக்கும் பக்கத்தை மூடும்படி ஒரு பெரிய தட்டியாவது, இலைகளோடுங்கூடிய கொம்புகளாலாகிய மழைதாங்கியாவது சவதரித்துக் கொள்ளவும்; காளவாயைச்சுற்றித் தண்ணீர் பெருகாதபடி சிறு வார்கால்கள் செய்துவைக்கவும்.

விசேஷக்குறிப்புகள் :—பிணஞ்சுடு காளவாயிலிருந்தெடுக்கப்படும் சாம்பலும் கரியும் மூத்திரத்தைத் தங்களுக்குள்ளாக்கி நாற்றத்தைப் போக்குகிறபடியால், அவைகளை லாயங்களில் பிராணிகள் மூத்திரம் பெய்திருக்கிற இடங்களில் போடுவது மிகவும் உபயோகமானதென்பதைப் பார்த்துத்தெரிந்திருக்கிறேன். சில சாம்பற்குவியல்களை லாயங்களில் அந்த அந்த லாயத்துக் குதிரைக்காரன் லேசாக எடுத்துக்கொள்ளக்கூடிய இடங்களில் போட்டுவைத்தால் அதுவே போதுமானது. பிணஞ்சுடு காளவாய்ச்சாம்பலை உபயோகிப்பதில் குதிரைக்காவது மனிதனுக்காவது அபாயமில்லை. நெருப்பினுற் சாகாம

லிருக்கும் வியாதிவித்துகள் இல்லை. அவைகள் தாங்கள் நாசஞ்செய்யும் பிராணிபோலவே தாங்களும் நெருப்பினால் கரியாகிவிடும்.

பிணஞ்சுடுகொளவாய்கள் நிலைத்துப் பயனடைய வேண்டுமானால் மற்ற எந்த விஷயமுஞ் சித்தியாவதற்குச் செய்வதுபோல, அவைகளைப்பற்றிக் கவலையெடுத்து அவைகளைக் கட்டும்போதும், பின்பு உபயோகிக்கும் போதும் நாமே நேராக மேற்பார்க்கவேண்டும். அவைகளின் முக்கியமான அம்சங்களைப் பிறர் வசத்தில் விட்டால், அநேகமாகக் கவலைக் குறைவினால் அவைகள் கேவலமாகி நம்பிக்கைக்குரிய தகுதி குறைந்து உபயோகப்படாமற் போகலாம்; ஆனால் எனக்குள்ள அனுபவத்தினாலும், அவைகளைத் தற்காலத்திய நிலைமைக்குக் கொண்டுவரும்படி நான் நெடுங்காலஞ் செலவிட்டு மிகுந்த சிரமமெடுத்திருப்பதினாலும், இப்புத்தகத்திற் சேர்த்திருக்கிற படத்தின்படி அவைகளைக்கட்டி, நான் சொல்லியிருக்கிற விதிகளின்படி உபயோகித்தால், சுகாநுகூல சுத்தவிருத்தி விஷயத்தில் மிகுந்த நன்மை உண்டாகுமென்று நான் நிச்சயமாகச் சொல்லக்கூடும்.

நான் முதல்முறை இவ்விஷயத்தைப்பற்றி எழுதிய பின்பு, மனித தேகங்கள் எருவினால் தகனமாவதையும், அவ்விதஞ் செய்யும் தகனம் பூரணமானதாகவும், மிகவும் லேசானதாகவும், மிகக்குறைந்த செலவு பிடிப்பதாகவுமிருப்பதையும் பார்த்திருக்கிறேன். முக்கியமாய், பிணஞ்சுடுகொளவாய் கட்டுவது முடியாமையாகவாவது, அநாவசியகமாகவாவது, திடீரென்று வியாதியுண்டாகிக் கட்டக்காலம்போதாததாகவாவது இருக்கும்போது, இறந்த மிருகங்களின் தேகங்களைச் சாம்பலாக்குவதற்கு மேற்சொல்லிய வகையை அநுகூலத்தோடும் உபயோகப்படுத்தலாம். ஒரு முழவுயரம் எருவைப்பரப்பி அதன் மேல் பிணத்தைக் கிடத்தி ஒழுங்கான ஒரு குவியலுண்

டாகும்படி மேலே திரும்பவும் எருவடுக்கிக் கீழே யிருந்து தீக்கொளுத்தினால் கொஞ்சநேரமானபின் எல்லாஞ் சாம்பலாகிவிடும்.

மிருகங்களின் தேகத்தின் விஷயத்தில் இருக்கும் வருத்தம் அவைகளை எருக் குவியலின் மேலேற்றுவது தான்; ஆனால், அவைகளைப் பூமியில் வைத்து எருவினால் நன்றாக மூடித் தீமூட்டிவிட்டால் அவைகள் சீக்கிரம் எரிந்து சாம்பலாகிவிடுமென்றெண்ணுகிறேன். எப்படியென்றால், எலும்பும் கொழுப்பும் நன்றாக எரியும் திரவியங்களாகையால், தேகம் ஒருக்கால் எரிய ஆரம்பித்தபின் தானே எரியக்கூடியதாகவிருக்கிறது. ஆறு சாதியடி நீளமும், நாலுசாதியடி அகலமும், இரண்டு சாதியடி ஆழமுமுள்ள ஒரு குழி தோண்டி, அதை எருவினால் நிரப்பி, அதின்மேல் பிணத்தை வைத்து நன்றாக எருவினால் மூடி எரித்தால் எருக்குறைவாகச் செல்லும்.

அநேகமாகச் சேனைகளிருக்கும் தானங்களெல்லாவற்றிற்கும் சமீபத்தில் எலும்புகளும், மற்றப் பலவிதமான குப்பைகளும் மிகுந்துகிடக்கிற குப்பைக்குழிகள் வளையம்போல அங்குள்ள வாசஸ்தலங்களைச் சுற்றியிருப்பதினால், அங்கு சுகத்துக்கு விரோதமாக அசுத்தம் மிகுந்திருக்கிறது. அந்த இடங்களிலுள்ள வாயு கோடைகாலத்தில் மிகவும் அருவருக்கத் தக்கபடி துர்க்கந்தமுள்ளதாகவும், மழைகாலத்தில் சகிக்கக்கூடாததாகவும் இருக்கிறது. அப்படிப்பட்ட இடங்களில் பிணஞ்சுடுகொளவாய்கள் இருக்கவேண்டியது மிகவும் ஆவசியகம்; அங்கு அகப்படும் எலும்புகளும் குப்பைகளும், பிணஞ்சுடுகொளவாய்களில் எரிப்பதற்கு உபயோகமாகும்.

## *அநுபந்தங்கள்.

### க-வது அநுபந்தம்.

### சென்னபட்டணத்திய கஅளகூ-ஹுலத்து ச-வது ஆக்ட்டு.

பிராணிகளுக்குக் கொடுமைசெய்வதற்குச் சம்பந்தப்படுகிற மட்டில், சென்னபட்டணத்திய கஅகூள-ஹுலத்து அ-வது ஆக்ட்டைத் திருத்துவதற்கான ஆக்ட்டு.

பீடிகை.

(மதிராஸ் போலீஸ் ஆக்ட்டாகிய) சென்னபட்டணத்திய கஅகூ-ஹுலத்து அ-வது ஆக்ட்டு † ருரு-வது பிரிவின்படி எது சம்பந்தமாய்க் குற்றஞ்செய்யப்பட்டதோ அப்படிப்பட்ட யாதொரு பிராணியை நிறுத்திவைக்கும்படிக்காவது, தீராக்கெடுதியுண்டாயிருக்கிற விஷயத்தில், அதைக்கொன்றுபோடும்படிக்காவது உத்தரவுசெய்ய மாஜிஸ்திரேட்டுகளுக்கு அதிகாரங்கொடுத்து மேற்படி ஆக்ட்டைத் திருத்துவது யுக்தமாயிருக்கிறபடியால், இதனால் விதிக்கப்படுகிறதென்னவென்றால் :—

---

* அநுபந்தங்களிரண்டும் கவர்ன்மெண்டாரால் பிரசுரஞ் செய்யப்பட்டிருக்கிற தமிழ் ஆக்ட்டுகளிலிருந்தெடுத்து இப்புத்தகத்திற் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

† இப்பிரிவு இவ்வநுபந்தத்தின் கடைசியில் பதிக்கப்பட்டிருக்கிறது.

கவர்ன்மெண்டார் வைத்திய சாலையை நேமிப்பதும், விடுதலை சர்ட்டிபிகேட்டு கொடுக்கத் தகுதியானவர்களை ஏற்படுத்துவதும்.

௧. சென்னபட்டணத்திய ௧௮௬௭-௵த்து ௮-வது ஆக்ட்டு ௫௫-வது பிரிவின்படி எது சம்பந்தமாய் குற்றஞ் செய்யப்பட்டிருக்கிறதோ அந்தப் பிராணிகளை வைத்தியஞ்செய்து பாதுகாப்பதற்கு ஒன்று அல்லது பல இடங்களை வைத்தியசாலையாக அப்போதைக்கப்போது ஏற்படுத்தவும், அந்த வைத்திய சாலையிலிருந்து விடுதலை செய்ததற்கு சர்ட்டிபிகேட்டு கொடுக்கத் தகுதியானவர்களை நேமிக்கவும் ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுக்கு அதிகாரமுண்டு.

பிராணியைக் கொன்றுபோடவாவது, சிகிச்சைசெய்ய நிறுத்திவைக்கவாவது உத்தரவு செய்யவும்,

௨. சென்னபட்டணத்திய ௧௮௬௭-௵த்து ௮-வது ஆக்ட்டு ௫௫-வது பிரிவின்படியான குற்றம் ஸ்தாபனையாவதின்பேரில், மேற்படி பிரிவில் சொல்லியிருக்கிற தெண்டனைகளோடு கூடவாவது, அதுகளுக்குவதிலாயாவது, எது சம்பந்தமாய் அந்தக் குற்றம் செய்யப்பட்டதோ அந்தப்பிராணிக்குத் தீராக்கெடுதி உண்டாயிருந்தால் அதைக் கொன்றுபோடவேணுமென்றாகிலும், இந்த ஆக்ட்டு ௧-வது பிரிவின்படி நேமிக்கப்படுகிற வைத்திய சாலைக்கு சிகிச்சைசெய்து பாதுகாக்கப்படும்பொருட்டு அதைக்கொண்டுபோக வேண்டியதென்றாகிலும் கிரமமாய் விசாரித்து உத்தரவுசெய்ய மாஜிஸ்திரேட்டுக்கு அதிகாரமுண்டு; மேலும் மாஜிஸ்திரேட்டானவர் தமக்கு யுக்தமாகத் தோற்றினால், அப்படி சிகிச்சை செய்து பாதுகாத்ததற்குப் பிடித்த நியாயமான செலவுகளையாவது, அதில் ஏதொரு பாகத்தையாவது அந்தப்

செலவை சொந்தக்காரன் செலுத்த வேணுமென்று உத்தரவு செய்யவும் மாஜிஸ்திரேட்டுக்கு அதிகாரம்.

பிராணிக்குச் சொந்தக்காரன் செலுத்தவேணுமென்று உத்தரவு மூலமாய்க் கட்டளை பிறப்பிக்கலாம்.

*தருந்த அதிகாரி விடுதலை பண்ணுகிறவரையிலும் பிராணியை நிறுத்திவைப்பது.*

*பாக்கித்தொகை செலுத்தி பிராணியைக் கொண்டு போகும்படி சொந்தக்காரனுக்கு நோட்டீசு கொடுப்பது.*

௩. அப்படி சிகிச்சைக்காக அனுப்பப்பட்ட பிரதி பிராணியையும் விட்டுவிடவேணுமென்று ௧-வது பிரிவின்படி நேமிக்கப்பட்ட நபர் உத்தரவு செய்கிறவரையில் அந்தப் பிராணியை வைத்தியசாலையில் நிறுத்திவைக்கலாம்; அதற்குமேல் அந்தப் பிராணியைப் பாதுகாத்து சிகிச்சை செய்ததற்காக மாஜிஸ்திரேட்டு உத்தரவுபடி பாக்கியாயிருப்பதாகத் தெரியவருகிற யாதொரு தொகையைச் செலுத்தி, நோட்டீசு சேர்ப்பித்தபின்பு நாற்பத்தெட்டுமணி நேரத்திற்குள் வைத்திய சாலையிலிருந்து அதைக் கொண்டு போகவேண்டியதென்று அந்தப் பிராணியின் சொந்தக்காரனுக்கு வைத்தியசாலை விசாரணைக்கர்த்தர் நோட்டீசு கொடுக்கவேண்டியது.

*சொந்தக்காரன் பணஞ்செலுத்த மாட்டேனென்றாலும், செலுத்தத் தவறிப்போனாலும் பிராணியை விற்று அந்தப்பணத்தை பிடித்த செலவுக்காக எடுத்துக்கொள்ள அதிகாரம்.*

௪. சொந்தக்காரன் பாக்கிப்பணத்தைச் செலுத்தி ௩-வது பிரிவில் கண்டிருக்கிற காலத்திற்குள் அந்தப் பிராணியைக் கொண்டுபோக மாட்டேனென்றாலும், கொண்டுபோகாவிட்டாலும், அந்தப் பிராணியை விற்று அப்படி வந்த பணத்தில் விற்பனை செலவு போக மிகுதியைப் பாக்கிப்பணத்துக்கு செல்லாக எடுத்துக்கொள்ள வேணுமென்று எந்த மாஜிஸ்திரேட்டாவது உத்தரவு செய்யலாம்.

விற்று வந்த பணத்தில் மிகுதி ஏதாவதிருந்தால் அதை, விற்பனை தேதிக்குப் பின்பு இரண்டு மாதத்திற்குள் மனுவு செய்துகொள்ளப்படுவதின்பேரில் அந்தப் பிராணியின் சொந்தக்காரனுக்குச்செலுத்திவிட வேண்டியது; அப்படி மனுவு செய்துகொள்ளப்படாவிட்டால், அது கவர்ன்மெண்டாருதாய் விடும்.

மிகுதியைச் சொந்தக்காரனுக்குச் செலுத்துவது.

ரு. இந்த ஆக்ட்டின்படி விற்பனை செய்யப்பட்ட யாதொரு பிராணிக்குச் சொந்தக்காரன் விற்பனை நிகரவரும்படிக்கதிகமாய் ரு-வது பிரிவின்படி யாதொன்றும் செலுத்தவேண்டியவனல்ல.

விற்பனை வரும்படியைவிட அதிகமாக சொந்தக்காரன் ஒன்றுஞ் செலுத்தவேண்டியதில்லை.

சு. யாதொரு மாஜிஸ்திரேட்டானவர் எப்போதாவது தமக்கு யுக்தமாகத் தோற்றுகிற திட்டங்களின்பேரில், இந்த ஆக்ட்டின்படி நிறுத்திவைக்கப்பட்ட யாதொரு பிராணியை அதின் சொந்தக்காரனுக்கு ஒப்பித்துவிடவேணுமென்று உத்தரவு செய்யலாம்.

பிராணியை கொடுத்துவிடும்படி உத்தரவு செய்ய மாஜிஸ்திரேட்டுக்கு அதிகாரம்.

எ. இந்த ஆக்ட்டு உ-வது பிரிவின்படி விசாரணை செய்வதற்குண்டான எல்லா செலவுகளையும், அபராதம் வசூல் செய்வதற்காக—கஅளஎ-ஸ்ரீ௵ சு-வது ஆக்ட்டில் சொல்லியிருக்கிற விதமாய் வசூல் செய்யலாம்.

செலவையும், பட்டுபடியையும் வசூல் செய்வது.

௮. இந்த ஆக்ட்டை சென்னபட்டணத்திய ௧௮௬௭-௵த்து ௮-வது ஆக்ட்டோடு சேர்த்து வாசிக்கவேண்டியதுமல்லாமல், அதினுடைய பாகமாக எண்ணவும் வேண்டியது.

இந்த ஆக்ட்டை ௧௮௬௭-௵த்து ௮-வது ஆக்ட்டோடு சேர்த்து வாசிப்பது.

---

## ௧௮௬௭-௵த்து ௮-வது ஆக்ட்டு ௫௫-வது பிரிவு.

---

எவனாவது யாதொரு பிராணியைக் கொடூரமாக அடித்தாலும், வருத்தப்படுத்தினாலும், அக்கிரமமாய் உபயோகப்படுத்தினாலும், வேதனை செய்தாலும், அப்படிச் செய்வித்தாலும் அப்படிப்பட்ட பிரதி குற்றத்திற்காக அவன் நூறு ரூபாய்க்கு அதிகப்படாமல் விதிக்கப்பட்ட அபராதத்திற்குள்ளாவான்; அந்த அபராதஞ் செலுத்தாவிட்டால், மூன்று மாதத்திற்கதிகப்படாமல் இந்தியன் பினல்கோடில் விவரித்துச் சொல்லியிருக்கிற இருவகைக் காவலிலெதிலாகிலும் வைக்கப்படுவான்.

பிராணிகளை வருத்தப்படுத்துவதைக் குறித்து.

## ௨-வது அநுபந்தம்.

## பிராணிகளின் பிணித்தடை ஆக்ட்டு.

---

சென்னபட்டணம் ௧௮௬௬-௵த்து ௨-வது ஆக்ட்டு.

---

சென்னபட்டணத்து ராச்சியத்திலே ஆடுமாடு
முதலிய பிராணிகளுக்குள் வியாதி பரவ
வொட்டாமல் தடுப்பதற்காகச்
செய்யப்பட்ட ஆக்ட்டு.

---

பீடிகை.

சென்னபட்டணத்து ராச்சியத்தில் ஆடுமாடு முதலிய பிராணிகளுக்குள் தொத்து வியாதி பரவவொட்டாமல் தடுப்பதற்காக தகுந்த ஏற்பாடு செய்வதும், அப்படி தொத்துவியாதி கண்டிருக்கிற பிராணிகளை இன்னபடி செய்யவேணுமென்று நிபந்தனை ஏற்படுத்துவதும் தகுதியாயிருக்கிறபடியால், இதனால் விதிக்கப்படுகிறதென்னவென்றால் :—

ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற இடங்களில் அவர்கள் நிச்சயிக்கிற காலவரையிலே இந்த ஆக்ட்டு வழங்கவேணுமென்பது.

௧. இந்த ஆக்ட்டானது எவ்வெவ்விடங்களில் எந்தக்காலம்வரையில் வழங்கிவரும்படி ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் அப்போதைக்கப்போது போர்ட்டு செயிண்டு ஜார்ஜ் கெஜட்டில் விளம்பர மூலமாய் உத்தரவு செய்கிறார்களோ அந்தந்த டிஸ்திரிக்ட்டிலாகிலும், டிஸ்திரிக்ட்டுகளின் பாகங்களிலாகிலும் அந்தக் காலவரையிலே வழங்கிவரவேண்டியது.

அர்த்தம்.

௨. சங்கதியினாலாவது, முன்பின் தொடர்ச்சியினாலாவது விரோதமொன்றுமில்லாவிட்டால், இந்த ஆக்ட்டில் பிரயோகித்திருக்கிற அடியில்கண்ட வார்த்தைகளுக்கும், வாக்கியங்களுக்கும் அர்த்தஞ்செய்யவேண்டியதெப்படியென்றால் :—

மாஜிஸ்திரேட்டென்பதற்கு.

மாஜிஸ்திரேட்டென்னும் வார்த்தையானது-மாஜிஸ்திரேட்டுக்குண்டான சகல அதிகாரங்களையுமாவது, அதுகளில் எதையாவது செலுத்துகிறவர்களெல்லோருமென்றும் அர்த்தமாகும்.

ஒருமை பன்மையைக் குறித்து.

ஒருமையில் பிரயோகமாயிருக்கிற வார்த்தைகளைப் பன்மையிலுங்கொள்ளவேண்டியது; பன்மையில் பிரயோகமாயிருக்கிற வார்த்தைகளை ஒருமையிலுங் கொள்ளவேண்டியது.

பாலைக்குறித்து.

ஆண்பாலில் பிரயோகமாயிருக்கிற வார்த்தைகளைப் பெண்பாலிலுங் கொள்ளவேண்டியது.

பிராணிஎன்பதற்கு.

பிராணி என்கிற வார்த்தையானது-யாதொரு ஒட்டை-எருமை மாடு-பெரிய குதிரை-மட்டக்குதிரை - கழுதை - ரிஷபம்-எருது-பசு-கிடாரி-கன்றுக்குட்டி-செம்மறியாடு-செம்மறியாட்டுக்குட்டி-வெள்ளாடு-வெள்ளாட்டுக்குட்டி-பன்றி என்று அர்த்தமாகும்.

இன்னஇடங்களிலே வைத்தியதொட்டிகள் ஏற்படுத்தப்படுமென்பது.

௩. யாதொரு டிஸ்திரிக்ட்டு அல்லது டிஸ்திரிக்ட்டின்பாகத்திற்கு மேற்சொல்லியபடி இந்த ஆக்ட்டு வியாபிக்கச் செய்யப்பட்டிருக்கும்போது, டிஸ்திரிக்ட்டு மாஜிஸ்திரேட்டு நிச்சயிக்கிற இடங்களிலே வைத்திய தொட்டிகள் ஏற்

படுத்தப்படும். மேற்படி மாஜிஸ்திரேட்டானவர் அப்படிப் பட்ட வைத்திய தொட்டிகளுக்குத் தலைவர்களை நேமிக்க வேண்டியது. பிரதி வைத்திய தொட்டியும் எந்தெந்த கிராமத்துக்கு உபயோகமாகவேண்டியதோ அதை மாஜிஸ்திரேட்டானவர் நிச்சயித்துப் பிரசித்தஞ்செய்ய வேண்டியது.

பிராணிகளின் சொந்தக்காரனாவது அதுகளை வைத்துக்கொண்டிருக்கிறவனாவது அதுகளுக்கு யாதொரு தொத்துவியாதி கண்டால் அறிக்கை செய்யவேணுமென்பது.

ச. மேற்சொல்லியபடி இந்த ஆக்ட்டு வியாபிக்கச் செய்யப்பட்ட யாதொரு டிஸ்திரிக்ட்டிலாவது டிஸ்திரிக்ட்டின்பாகத்திலாவது யாதொரு பிராணிக்கு ஏதாவது தொத்துவியாதி கண்டால், அதின் சொந்தக்காரனாவது அதை வைத்துக்கொண்டிருப்பவனாவது-அப்போதைக்கு அந்தப்பிராணி எவ்விடத்திலிருக்குமோ அந்த கிராமம் அல்லது பேட்டைக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிற வைத்திய தொட்டியின் தலைவனுக்கு உடனே அறிக்கை செய்யவேண்டியது.

தொட்டித்தலைவர் பிராணியைப் பரிசோதனைசெய்யவேணுமென்பது.

ரு. யாதொரு பிராணியின் சொந்தக்காரனாவது அதை வைத்துக்கொண்டிருப்பவனாவது மேற்சொல்லியபடி அறிக்கை செய்தபின்பு, வைத்தியதொட்டித் தலைவரானவர் அந்தப் பிராணியைக் கூடுமான சீக்கிரத்தில் பரிசோதனை செய்து, அதை வைத்தியத்திற்காக தொட்டியில் வைத்துக்கொள்ளவேண்டியதோ இல்லையோ அதைநிச்சயிக்க வேண்டியது.

சு. அந்தப்பிராணிக்குத் தொத்துவியாதி கண்டிருக்கிறதென்று வைத்திய தொட்டித் தலைவருக்குத் தோற்றினால், அதற்குமேல் அவர் அந்தப் பிராணியை வைத்திய தொட்டியில் விட்டு வைக்கும்படி அதின் சொந்தக்காரனுக்காவது அதை வைத்துக்கொண்டிருக்கிறவனுக்காவது உத்தரவு செய்யவேண்டியதுமல்லாமல், அவசியமானால் அந்தப் பிராணியிருக்கும் தொழுவமுதலான இடத்தில் தொத்துவியாதி அணுகவொட்டாமல் செய்வதற்கு தானுத்தரவுபண்ணுகிறபிரகாரம் செய்யச்சொல்ல வேண்டியது.

அவசியமானால் வைத்திய தொட்டிக்குக் கொண்டுவரும்படி உத்தரவு செய்யலாமென்பது.

எ. வைத்தியதொட்டியின் அந்தத்தலைவராவது, அதைச்சேர்ந்தவரொவருக்கு டிஸ்திரிக்ட்டு மாஜிஸ்திரேட்டினால் அதிகாரங்கொடுக்கப்படுகிறதோ அவராவது, தான் எதற்காக நேமிக்கப்பட்டிருக்கிறாரோ அந்த எல்லைச் சுற்றுக்குள் யாதொரு தொத்துவியாதி கண்டிருக்கிறதாக தானனுமானிக்கிற யாதொரு பிராணி அல்லது பிராணிகள் எவ்விடத்தில்காணப்படுமோ அந்தத்தொழுவமுதலிய இடங்களில் பிரவேசித்துப் பார்வையிடுவதற்கும், அப்படிப்பட்ட வியாதி கண்டிருக்கிறதாகத் தான் அனுமானிக்கிற யாதொரு பிராணி அல்லது பிராணிகளை தனக்கு எப்போது எவ்விடத்தில் பார்வையிடவேண்டியதாகத் தோற்றுகிறதோ அந்தக்காலத்தில் அவ்விடத்திலே பார்வையிட்டுப் பரிசோதனை செய்வதற்கும், அப்படிப்பட்ட பிராணி அல்லது பிராணிகளை அந்த எல்லைச்சுற்றுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிற வைத்திய தொட்டிக்குக் கொ

யாதொரு தொத்துவியாதி கண்டிருக்கிறதாக அநுமானிக்கப்பட்ட யாதொருபிராணிகாணப்படுகிற இடங்களைப் பார்வையிடுவதைக்குறித்து.

ண்டுவரும்படி உத்தரவு செய்வதற்கும் அதிகாரமுடையவராவார்.

தொத்துவியாதிகண்டிருக்கிற யாதொரு பிராணிஇருந்த இடங்களையும் பின்புஇருக்குமிடங்களையும் சுத்திசெய்வதைக்குறித்து.

அ. வைத்தியதொட்டியின் அந்தத் தலைவராவது அதைச் சேர்ந்தவரொவருக்கு டிஸ்திரிக்ட்டு மாஜிஸ்திரேட்டினால் அதிகாரங் கொடுக்கப்படுகிறதோ அவராவது, தன்னுடைய எல்லைச்சுற்றுக்குள் யாதொரு தொத்துவியாதி கண்டிருக்கிற யாதொரு பிராணி எவ்விடத்திலிருந்ததோ அல்லது எவ்விடத்திலிருக்குமோ அந்தத்தொழுவமுதலிய இடங்களை தனக்கு யுக்தமாகத் தோற்றுகிறவிதமாய் சுத்திசெய்வித்து தொத்துவியாதியை விலகச்செய்வதற்கும், மேற்படி வியாதியை பரவச்செய்யத்தக்கதாகத் தனக்குத் தோற்றுகிற வைக்கல் செத்தை முதலிய இரையையாவது எருவையாவது கழித்துவிட்ட குப்பையையாவது அப்புறப்படுத்துவதற்கும், அவசியமானால் அழித்துப்போடுவதற்கும் அதிகாரமுடையவராவார்.

சொந்தக்காரன் இரையும் அவிழ்தமும் சேகரிக்கா விட்டால், இரைக்கும் வைத்தியத்துக்கும் பிடிக்கிற செலவை தொட்டிபணத்திலிருந்து கொடுக்கவேணுமென்பது.

௯. மேற்சொல்லியபடி வியாதிகண்டிருக்கிற யாதொரு பிராணியை வைத்தியதொட்டிக்குத் தலைவன் தன்வசத்தில் ஒப்பித்துக்கொண்ட காலமுதற்கொண்டு அதின் சொந்தக்காரனாவது அதை வைத்துக் கொண்டிருந்தவனாவது அதற்கு இரையும் அவிழ்தமும் கொடுக்க இஷ்டங்கொள்ளாவிட்டால், அந்தப்பிராணிக்கு இரைக்காகவும் வைத்தியத்துக்காகவும் பிடிக்கிற செலவுகளையெல்லாம் க அ௫௭-ஆம் வருஷத்து ௩-வது ஆக்ட்டின்படி ஸ்தாபிக்கப்பட்ட மாட்டுத்தொட்டியின் பணத்திலிருந்து செல

வழிக்கவேண்டியது. ஆனால் அப்படிப்பட்ட இரையும் அவிழ்தமும் வைத்தியதொட்டித்தலைவன் உத்தரவுசெய்கிறபிரகாரமாவது அங்கீகரிக்கத் தக்கதாகவாவதிருக்க வேண்டும்.

அழிக்கப்பட்ட பிராணியை புதைத்துவிட வேணு மென்பதும் சொந்தக்காரன் அதற்கு ஈவுகேட்கக்கூடா தென்பதும்.

௰. வைத்தியதொட்டித் தலைவராவது அதைச் சேர்ந்த வேறே எவருக்கு டிஸ்திரிக்டு மாஜிஸ்திரேட்டினால் அதிகாரங் கொடுக்கப்படுகிறதோ அவராவது தொத்துவியாதியைப் பரவவொட்டாமல் தடுக்கவேண்டியது அவசியமென்று தனக்குத் தோற்றும்போதெல்லாம் யாதொரு பிராணியை மேற்சொல்லியபடி தொட்டிக்குக் கொண்டுவருவதற்கு முன்னமேயாகிலும் கொண்டுவந்த பின்பாகிலும் அழித்துப்போட அதிகாரமுடையவராவார். யாதொரு பிராணி அப்படி அழிக்கப்பட்டாலும், வைத்தியதொட்டித் தலைவன் வசத்திலிருக்கையில் செத்துப்போனாலும் மேற்படி தொட்டித்தலைவன் அந்தப் பிராணியின் உடலை பூமியில் குறைந்தது ஆறடிக்குள் புதைத்துப்போடுவிக்கவேண்டியது; அப்படிச்செய்வதற்கு ஏதாவது செலவு பிடித்தால் அதை மாட்டுதொட்டி பணத்திலிருந்து கொடுக்கவேண்டியது. இந்தப் பிரிவின்படி செய்யப்பட்ட யாதொரு காரியத்தினால் நேரிடுகிற நஷ்டத்தைக்குறித்துப் பணங்கிடைக்க வேணுமென்று தாவா செய்யப்படாது.

செலவை வாங்க வேணு மென்பதும், கொடாவிட்டால் பிராணியை விற்று எடுத்துக்கொள்ள வேணுமென்பதும்.

௰௧. மேற்சொல்லியபடி தொட்டியில் வைக்கப்பட்ட பிராணியானது அதற்குண்டான வியாதி தீர்ந்து சொஸ்தப்பட்டால், சொந்தக்காரன் அல்லது அதை வைத்துக்கொண்டிருந்தவன் அந்தப் பிராணிக்கு இரைக்காகவும் வைத்தியத்திற்காகவும் உள்ளபடி

பிடித்த செலவை வைத்தியதொட்டித் தலைவனிடத்தில் செலுத்தவேண்டியது; அவரதை மாட்டுதொட்டிப் பணத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டியது. மேற்படியான் அந்தச்செலவைக் கொடுக்காவிட்டால் அந்தப் பிராணியை ஏலத்தில் விற்று விற்றபணத்திலே செலவு தொகை எடுத்துக்கொண்டு, மிகுதியை சொந்தக்காரனுக்காவது அந்தப்பிராணியை வைத்துக்கொண்டிருந்தவனுக்காவது கொடுத்துவிடவேண்டியது. ஆனால் இரையும் அமிழ்தமும் சொந்தக்காரன் அல்லது அதை வைத்துக்கொண்டிருந்தவன் கொடுக்க இஷ்டங்கொள்ளுகிற விஷயங்களில் அவனிடத்திலே எவ்வகையான செலவும் வாங்கக்கூடாது.

ஒரே தொழுவத்திலாவது, யாதொரு தொத்துவியாதி கண்டிருக்கிற யாதொரு பிராணியோடு சேர்க்கையாக வாவதிருக்கிற யாதொருபிராணியை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு லைசென்சில்லாமல் கொண்டுபோகக் கூடாதென்பது.

௰௨. ஒரே தொழுவம் அல்லது கொட்டாயிலாவது, ஒரே மந்தையிலாவது, யாதொரு தொத்துவியாதி கண்டிருக்கிற வேறொரு பிராணியோடு சேர்க்கையாகவாவதிருக்கிற யாதொரு பிராணியை தன் ஸ்வாதீனத்திலாகிலும் தன் வசத்திலாகிலும் வைத்துக்கொண்டிருக்கிறவன்-அந்த எல்லைசுற்றுக்காகவிருக்கிற வைத்திய தொட்டித் தலைவனிடத்திலாவது, லைசென்ஸ் கொடுக்கும்படி டிஸ்திரிக்ட்டு மாஜிஸ்திரேட்டினால் அதிகாரங் கொடுக்கப்பட்ட வேறொருவரிடத்திலாவது லைசென்சு பெற்றுக்கொள்ளாமல் தன்னுடைய நிலமுதலிய இடத்திலிருந்து அந்தப்பிராணியை உயிரோடு அப்புறங்கொண்டு போகக்கூடாது. அப்படிப்பட்ட பிரதி லைசென்சும் எழுத்துமூலமாயிருக்கவேண்டியதுமல்லாமல், அப்படிப்பட்ட பிராணியினாலே வியாதி பரவலாமென்று நினைக்கத்தக்க

ஏதுவில்லையென்று வைத்திய தொட்டித் தலைவராகிலும் மேற்சொல்லியபடி அதிகாரங்கொடுக்கப்பட்ட வேறொருவராகிலும் தெரிந்துகொள்ளுகிறவரையில், அப்படிப்பட்ட பிராணியை மற்றெல்லாப் பிராணிகளுக்கும் சங்கடமில்லாமல் புறம்பாய் வைக்கக்கூடுமான யாதோரிடத்திற்குக் கொண்டுபோகும்படி மாத்திரம் அந்த லைசென்சில் உத்தரவுகொடுக்கவேண்டியது.

யாதொரு பிராணிக்கு வியாதிகண்டிருக்கையில் அறிக்கைசெய்யாவிட்டால் தெண்டனை.

௰௫. யாதொரு பிராணியை வைத்துக்கொண்டிருப்பவன் அதற்கு தொத்து வியாதி கண்டிருக்கும் காலத்தில் அந்த கிராமத்தைச்சேர்ந்த வைத்திய தொட்டித் தலைவருக்கு ௪-வது பிரிவில் கண்டிருக்கிறபடி அறிக்கை செய்யாவிட்டால், அப்படிப்பட்டவன் மாஜிஸ்திரேட்டு முன்பாக குற்றவாளியென்று தீர்மானிக்கப்பட்டதின் பேரில் அப்படி அஜாக்கிரதை செய்கிற தடவை யொன்றுக்கு ஐந்து ரூபாய்க்கு அதிகப்படாமல் விதிக்கப்பட்ட அபராதத்திற்குள்ளாவான்; அதை அவன் செலுத்தாவிட்டால் அதற்கு வதிலாய் பத்து நாளைக்கு அதிகப்படாமல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்.

மாட்டுதொட்டித்தலைவன் முதலானவருடைய உத்தரவின்படி நடக்கமாட்டேனென்றால் தெண்டனை.

௰௬. நோய் கண்டிருக்கிற யாதொரு பிராணியை தொட்டியிலடைப்பதைக் குறித்தாவது, நோய் கண்டிருக்கிற யாதொரு பிராணி வைக்கப்பட்டிருக்கும் தொழுவமுதலிய இடத்திலே தொத்து வியாதி நிவாரணை செய்வதைக்குறித்தாவது, அந்த வியாதியை ஒரு வேளை பரவச்செய்யும்படிக்கான வைக்கல் செத்தை முதலிய இரையையாகிலும் எருவையாகிலும் கழித்துவிட்ட குப்பையையாகி

லும் அப்புறப்படுத்துவதைக்குறித்தாவது அழித்துப் போடுவதைக்குறித்தாவது வைத்திய தொட்டித்தலைவராகிலும், அதற்காக டிஸ்திரிக்ட்டு மாஜிஸ்திரேட்டினால் கிரமமாய் அதிகாரங்கொடுக்கப்பட்டவராகிலும் செய்கிற உத்தரவின்படி எவனாவது நடந்துகொள்ளாவிட்டாலும்; ஒரே தொழுவம் அல்லது கொட்டாயிலாவது, ஒரே மந்தையிலாவது, யாதொரு தொத்து வியாதி கண்டிருக்கிற வேறொரு பிராணியோடு சேர்க்கையாகவாவதிருக்கிற யாதொரு பிராணியை லைசென்சில்லாமல் எவனாவது அப்புறங்கொண்டுபோனாலும், அப்படிப்பட்டவன் மாஜிஸ்திரேட்டுக்கு முன்பாக குற்றவாளியென்று தீர்மானிக்கப்பட்டதின்பேரில் அப்படிப்பட்ட பிரதி குற்றத்திற்கும் இருபது ரூபாய் அபராதத்திற்குள்ளாவான்; அதை அவன் செலுத்தாவிட்டால் அதற்குவதிலாய் பத்து நாளைக்கு அதிகப்படாமல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்.

வியாதியுள்ள பிராணிகளைப்பிடித்து தொட்டியி லடைக்கையில் தடுத்தால்தெண்டனை.

௰௫. இந்த ஆக்ட்டு வழங்குகிற யாதொரு ஜில்லாவிலாவது ஜில்லாவின் பாகத்திலாவது வைத்திய தொட்டித்தலைவர்களெல்லோரும்-ஹெட் கன்ஸ்டேபில் அந்தஸ்துக்குக் கீழ்ப்படாத போலீசு உத்தியோகஸ்தர்களெல்லோரும்-முக்கியமாய் டிஸ்திரிட்டு மாஜிஸ்திரேட்டினால் அதிகாரங்கொடுக்கப்படுகிறமற்றவர்களும்,தொத்து வியாதிகண்டிருக்கிறசகல பிராணிகளையும் பிடித்து தொட்டியில் அடைக்கவேண்டியது. அப்படிப் பிடிக்கிறதை எவனாவது பலாத்காரமாய்த் தடுத்தாலும், அப்படி பிடித்த பின்பு அதை பலாத்காரமாய் விடுவித்தாலும், அப்படிப்பட்டவன் இந்தியன்

பினல்கோடின்-௧௮௬-வது பிரிவின்படி தெண்டிக்கப்படத்தக்க குற்றத்தைச் செய்தவனாக எண்ணப்படுவான்.

௰௬. எவனாவது தன்னுடைய பிராணிகள் வியாதியாயிருக்கிறதென்று பிடிக்கப்படுமாகில், அப்படி பிடிக்கப்பட்டது அக்கிரமமாயிருக்கிற பட்சத்தில், பிடிக்கப்பட்ட தேதி முதல் பத்து நாளைக்குள் எப்போதாவது எந்த மாஜிஸ்திரேட்டினிடத்திலாகிலும் பிரியாது செய்யலாம். பிரியாதுசெய்கிறவன் சங்கதிகளை வாய்மொழியாய்ச் சொல்லிக்கொண்டாவது வெற்றுக்கடுதாசியில் எழுதிக்கொடுத்தாவது பிரியாது செய்துகொள்ளலாம்; வாய்மொழியாய்ச் சொல்லிக்கொள்ளப்பட்டால் அதின் சங்கதியை மாஜிஸ்திரேட்டானவர் எழுதிக்கொள்ளவேண்டியது; பிரியாது செய்கிறவன் நேராகவாவது செய்துகொள்ளலாம்; சங்கதிகளை ருஜுவிலறிந்திருக்கிற குமஸ்தாவைக்கொண்டாவது பிரியாது செய்விக்கலாம்; மாஜிஸ்திரேட்டானவர்-பிரியாது அல்லது அவனுடைய குமஸ்தாவை விசாரணைசெய்தபின்பு பிரியாதுக்குத்தகுந்த ஆதாரமிருக்கிறதென்று நம்புவதற்கு ஏதுவிருந்தால், எவன்பேரில் பிரியாது செய்யப்பட்டதோ அவனை சம்மனனுப்பி வரவழைத்து சங்கதியை சுருக்கவிசாரணைசெய்யத் தொடங்கவேண்டியது. பிராணிகள் பிடிக்கப்பட்டது அக்கிரமமென்று தீர்மானஞ்செய்யப்பட்டால், மாஜிஸ்திரேட்டானவர்-அப்படி அக்கிரமமாய்ப் பிடிக்கப்பட்டதினாலே நேரிட்ட யாதொருநஷ்டம் அல்லது கெடுதிக்காக[illegible]க்கு நியாயமாய்த்தோற்றுகிற நஷ்டத்தொகையையும்

சொந்தக்காரனானவன் தன்னுடையபிராணிகள் பிடிக்கப்பட்டதுமுதல் பத்துநாளைக்குள் மாஜிஸ்திரேட்டினிடத்திலே பிரியாது செய்யலாமென்பது.

அந்தப்பிராணிகளை விடுதலைசெய்வித்துக்கொள்ள பிரியாதுக்குப்பிடித்த சகலசெலவையும் அவனுக்குக்கொடுக்கும்படி தீர்ப்புசெய்யவேண்டியது; அந்தப்பிராணிகள் விட்டுவிடப்படாவிட்டால், மாஜிஸ்திரேட்டானவர் நஷ்டத்தைக்குறித்துத் தீர்ப்புசெய்வதுமல்லாமல் அதை விட்டுவிடும்படிக்கும் உத்தரவுபிறப்பித்து, இந்த ஆக்ட்டின்படி வசூல்செய்யத்தக்கசெலவை மேற் சொல்லியபடி அக்கிரமமாய்ப் பிடித்தவன் செலுத்தவேண்டியதென்றும் உத்தரவுபண்ணவேண்டியது. மேற்சொல்லியபடி தீர்மானஞ்செய்யப்பட்ட சகலநஷ்டத்தொகையும் செலவுகளும்-கஅருகூ-ஹு உச-வது ஆக்ட்டின்படி விதிக்கப்பட்ட அபராதங்களையாவது தண்டங்களையாவது வசூல்செய்வதைக்குறித்து சென்னபட்டணத்து-கஅகூ௬-ஹு ௬-வது ஆக்ட்டில் விதித்திருக்கிற நடவடிக்கைப்பிரகாரம் வசூல்செய்யத்தக்கதாகும்.

செலவுக்காக வசூலான பணத்தையும் அபராதங்களையும் மாட்டுதொட்டி பண்டுபணத்தில் சேர்க்கவேணுமென்பது.

கஎ. இந்த ஆக்ட்டின்படி வசூல்செய்யப்பட்ட சகல அபராதங்களையும் கஅுஎ-ஹுத்து ங-வது ஆக்ட்டிலுள்ள நிபந்தனைகளின்படி ஸ்தாபிக்கப்பட்ட மாட்டுதொட்டியின் பண்டுபணத்தில் சேர்க்கவேண்டியது. அந்தப் பணத்தை இந்தஆக்ட்டிலுள்ள நிபந்தனைகளின்படி செய்யப்பட்ட செலவுகளுக்கு உபயோகிக்கவேண்டியது; ஆனால் அந்தஅபராதத்தில் பாதிக்கு அதிகப்படாமல் எவ்வளவாவது அறிக்கைசெய்தவனுக்குக் கொடுக்கும்படி உத்தரவுசெய்ய இந்த ஆக்ட்டின்படி அபராதம்விதிக்கிற உத்தியோகஸ்தருக்கு அதிகாரமுண்டு.

மீறிநடந்தால் தெண்டனை சகிதமாய் சகாயவிதிகளை ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் ஏற்படுத்தலாமென்பது.

மஅ. பிராணிகளுக்குள் தொத்துவியாதி பரவவொட்டாமல் அனுகூலமுண்டுபண்ணுவதற்காக அப்போதைக்கப்போது அவசியமாகத் தோற்றுகிற சகாயவிதிகளை இந்த ஆக்ட்டு அல்லது வேறே யாதொரு ஆக்ட்டிலுள்ள நிபந்தனைகளுக்கு விரோதமில்லாமல் ஏற்படுத்தி, போர்ட்டு செயிண்டு ஜார்ஜ் கெஜட்டில் பிரசித்தஞ்செய்விக்க ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுக்கு அதிகாரமுண்டு. அப்படிப்பட்ட யாதொரு சகாயவிதியை மீறி நடப்பவன் மாஜிஸ்திரேட்டுக்கு முன்பாகக் குற்றவாளியென்று தீர்மானிக்கப்பட்டதின்பேரில் பத்துரூபாய்க்கதிகப்படாமல் அபராதத்திற்குள்ளாவான்; அதை அவன் செலுத்தாவிட்டால் அதற்குவதிலாய் பதினைந்துநாளைக்கு வெறுங்காவலில் வைக்கப்படுவான்.

---

# அட்டவணையும் * அருஞ்சொல் விளக்கமும்.



* அருஞ்சொல்விளக்கம், பல இங்கிலிஷ் வைத்திய புஸ்தகங்களையும், இங்கிலிஷிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கிற அநேக தமிழ் வைத்திய புஸ்தகங்களையும் பார்வையிட்டுக் கூடிய கவனத்தோடும் எழுதப்பட்டிருக்கின்றது.

† வந்தையென்ற சொல்லும், அதுபோன்ற மற்ற அருஞ்சொற்களும் இவ்வட்டவணையில் அந்த அந்தச்சொல்லைப் பார்ப்பதினால் விளங்கும்.

பக்கம்

இரத்தக்குழல்கள் (Blood Vessels).—தேகத்தில் இரத்தஞ் செல்லும் பாதையாகிய, பெரிய, அல்லது சிறியகுழாய்கள். அவைகள் நாடி, நாளம், தந்துகி என மூன்றுவகைப்படும். (இந்த மூன்று வார்த்தைகளையும் பார்க்க.)

இரத்தசுரம்.—(வெக்கையைப்பார்க்க.)

இரத்தநாளங்கள் (Veins).—நாளங்கள்; தந்துகிகளிலிருந்து வரும் இரத்தத்தை இரத்தாசயத்துக்குக்கொண்டுபோகும் இரத்தக்குழல்கள். (தந்துகியைப்பார்க்க.)

இரத்தமூத்திரம் (Red Water or Hæmo-albuminuria).—இரத்தாமுரி ... ... ... ... ... ... ... ... 29-30

இரத்தவடிவு (Hæmorrhage or Bleeding).—ஒரு இரத்தக்குழல், அல்லது பல இரத்தக்குழல்களிலிருந்து இரத்தம் வெளியே தப்பியோடுதல்.

இரத்தவடிவைநிறுத்தும் முறைகள் (How to Stop Bleeding.) ... ... ... ... ... ... ... ... ... ... 81-82

இரத்தாசயம் (Heart).—இரத்த ஓட்டத்துக்குப் பிரதானமான மத்திய கருவி. இது, தான் பலமாகச்சுருங்குதலினால், தன்னுள்ளடங்கிய இரத்தத்தை நாடி (Artery) கள் மூலமாய்த் தந்துகிக (Capillaries) ளிடம் செலுத்தி, அவைகளிடத்திலிருந்து நாளங்கள் (Veins) வழியாய்த் திரும்பிவரும் இரத்தத்தைத் தான் (இரத்தாசயம்) விரிந்து தன்னுள் பிரவேசிக்கச்செய்கிறது; இந்தத்தொழிலை (மரணம் சம்பவிக்கும் வரை) மாறிமாறி இடைவிடாமல் செய்துகொண்டிருக்கின்றது. இரத்தாசயம், பிராணிகளின் நெஞ்சறை (Thorax or Chest) யைத் திறந்துபார்த்தால், அங்கு வாழைப்பூப்போலக் காணப்படும்.

இரத்தாமுரி.—(இரத்த மூத்திரத்தைப்பார்க்க.)

இராச்சியம்.—(பிரதானியைப்பார்க்க.)

இருமலுக்குப்பானங்கள் (Cough Drinks.) ... ... ... ... ... 135

இரைக்குழலடைப்பு (Choking).—விழுங்கக்கூடாமை ... 30-31

இரைக்குழல் (Gullet).—வாயிலிருந்து இரைப்பைக்கு ஆகாரஞ்செல்லும் பாதையாக இருக்கும் நெடுங்குழல்.

இரைப்பை (Stomach).—இரைக்குழ (Gullet) லுக்கும், குடலுக் (Intestines or Bowels) கும் மத்தியபாகமாகவும், புசித்தவுடன் ஆகாரம்போய்த் தங்குமிடமாகவும் உள்ள சீரணக்கருவி. இரைப்பை ஆடுமாடுகளில் நாலுபாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது; இவைகளில் ஒன்று மிகப்பெரிதாக இருப்பதால் பேரிரைப்பை (அதாவது பெரிய இரைப்பை, Rumen) என்று சொல்லப்படும்.

இழுப்பு (Spasm or Cramp).—வலி; கருசம்; தேகத்தின் எந்தப்பாகத்திலாவது வருத்தமுண்டாகும்படி சதை சுருங்குதல் அல்லது இழுத்துச் சுழித்தல்.

பக்கம்

பக்கம்

நுரையீரல்.—(சுவாசாசயத்தைப்பார்க்க.)

நெஞ்சறை (Thorax or Chest).—கழுத்துக்கும் வயிற்றுக்கும் மத்தியில் மொக்குள்போலக் குவிந்த வடிவான பெட்டி போன்ற உடற்பாகம். இதில் சுவாசாசயம், இரத்தாசயம் பெரிய இரத்தக்குழல்களிற் சிலபாகம் இவைகள் அடங்கியிருக்கின்றன.



படிக்காரம்.—(சீனக்காரத்தைப்பார்க்க.)



பட்டைச்சாராயம்.—(சாராயத்தைப்பார்க்க.)

பதங்கஞ்செய்தல் (Sublimation Process).—(109-வது பக்கத்தின் அடியிற்பார்க்க.)

பத்தை.—(தப்பையைப்பார்க்க.)

பயிண்டு.—(பைண்டைப்பார்க்க.)

பரிச்சயம்.—(குதிரைச்சயத்தைப்பார்க்க.)

பரிபுப்புசம் (Pleura).—புப்புசமென்று சொல்லப்பட்ட சுவாசாசயத்தைச் சூழ்ந்திருக்குஞ்சவ்வுப்பை.



பலவிருத்திமருந்துகள் (Tonics).—தேகத்துக்குப் பலத்தைக் கொடுக்கிற மருந்துகள். இவைகள் கொஞ்ச அளவில் அடுத்தடுத்து நெடுநாள் கொடுக்கப்படவேண்டும்.

பவுன் (Pound).—பௌன்; ராத்தல்; ஒரு பவுன் அல்லது ராத்தல் (சுமாராக) நாற்பது ரூபாயெடைக்குச் சமம் ... 107

பற்று (Communicability).—(தொற்றைப்பார்க்க.)

பற்று (Ringworm).—(படர்தேமலைப்பார்க்க.) ... ... ...

பற்று (Plaster).—பிளாஸ்திரி; புண்முதலியவைகளை மூடிக் காக்கும்படியாவது, சுளுக்குமுதலியவைகளில் தேகத்தில் பலமாக ஒட்டிக்கொள்ளும்படியாவது, (கடுகுப்பற்றுப் போல) தேகத்தில் கொப்புளமுண்டாக்கும்படியாவது செய்யப்பட்ட மருந்து ... ... ... ... ... ...



பற்றும்வியாதி (தொற்றைப்பார்க்க.)

---

# INDEX.

15049

